ருக்கும் ஜலரூபமாகத்தோன்றிப்பாதகங்களுக்கு நெருப்பாகிநமக்கு அதிசீதளமாகி விளங்கும் என்றவாறு ........................ (௨)

மணிமுத்தாற்றிற்காற்றணைந்த மனிதர்பறவைமிருகங்க.......... ...*
[illegible]ணியல்கருமிகிடங்க டருப்புற்கொடிகள்சராசரங்க.......... .*
ளனையந்தவுருலகாளு மாற்றிற்படிந்தோர்தமக்கன்புந்..... ..... ...*
துணிவுந்தவமும்பேரறிவுந் தொண்டுந்தொழும்புமுளதாமால்.......*

(இ-ள்) திருமணி முத்தா நதியிற் படிந்துவருகின்ற காற்றால் தீண்டப்பெற்ற மனிதர்கள் பறவைகள் மிருகங்கள் அளவிறந்தபுழுக் கள் வண்டுகள் மரங்கள் புல்லுகள் கொடிகள் முதலிய சராசர வுயிர் களனைத்தும் அழகிய தேவருலகத்தில் அரசு செய்யும் அந்தநதி யினிடத்தில் சென்று ஸ்நானஞ்செய்த பேர்களுக்குக் கெடாதஅன் பும் தெளிவும் தவமும் பரஞானமும் சிவபத்துக்குரிய அடிமைத் திறமும் தமக்குஅடிமைகளும் உண்டாகும் என்றவாறு ...... (௩)

அருளும்பொருளுங்கைகூடு மவலங்களையுங்கவலையறு..... .. .... ..*
மிருளுமடியும்மிடியும்போ மீறில்செல்வந்தழைத்தோங்குந்..... ..*
தெருளுந்திருவுங்குடிகொள்ளுஞ் சித்திமுத்தியுண்டாகு ......... ..*
மருளும்பேயுநோயும்போ மணிமுத்தாற்றின்மூழ்கினர்க்கே .....*

(இ-ள்.) திருமணிமுத்தா நதியினில்ஸ்நானஞ்செய்தவர்களுக்குச் சிவகடாக்ஷமும் சிவஞானச் செல்வமுங் கைப்பலமுகிவரும் சகலவை ருத்தமுநீங்கும் சஞ்சலமொழிந்துபோம் அஞ்ஞானமுஞ் சோம்ப லும் தரித்திரமும் விட்டுப்போம் அளவில்லாத அயிஸ்வரியங்கள் மேன்மேலு மதிகரிக்கும் ஞானமும் மஹாலக்ஷ்மியும் எப்போது நீங்காமற் குடிகொண்டிருக்கும் அஷ்டசித்தியும் மோக்ஷமும் உண் டாகும் மயக்கமும் பசாசும் வியாதியும் ஒழிந்துவிடும்-எ-று-(௪)

சூதாளைத்தாரெங்கிருந்துஞ் சுத்தவிருத்தகிரிக்கேநங்............ ...*
காதலிருக்கமுத்தநதி கடவுள்கரத்தாலமைத்துளதாற்............ ....*
சீதநதியின்மூழ்குங்காற் செல்வமுண்டாமகவுண்டா............ ......*
மீதும்புண்போம்புவியிழந்தோர் மீண்டுமீண்டும்புவியாள்வார்..*

(இ-ள்.) சூதமஹாரிஷியானவர் நாமெங்கிருந்தாலு நமது அபே க்ஷை பரிசுத்தமுள்ள விருத்தாசலத்தினிடத்தில் நீங்கா திருக்கும் என்று திருவுளம்பற்றியருளினார் அப்படிப்பட்ட விருத்தாசலத்தின் கண்ணுள்ள திருமணிமுத்தா நதியானது பரமசிவன் தமது திருக்கரங் களால் அமைக்கப்பட் டிருக்கின்றபடியினால் குளிர்ச்சிபொருந்திய அந்த நதியில் ஸ்நானஞ் செய்பவர்களுக்குச் செல்வமுண்டாகும் சந்தானமுண்டாகும் மேலிடுகின்றவியாதிக ணீங்கும் பூமியையிழந் தவர்கள் மறுபடியும் பூமியைப்பெற்று அரசாக்ஷிசெய்வார்கள்-எ-று

ஒருக்கான்முத்தாநதிமூழ்கி லோராயிரங்கோதானபல..................*
னுருக்காதுண்டாமவர்பிறரை நினைக்கிலவர்போய்க்கதிசேர்வர் ..... *
தருக்காய்மூழ்கியோரிரவு தரிக்கிற்சிவலோகஞ்சேர்வர்... ..... ...... *
செருக்காற்பன்னாண்மூழ்கிடுவார் சேருங்கதிக்கோரளவின்றே ......*

(இ-ள்.) திருமணிமுத்தா நதியினிடத்திற்போய் ஒருதரம் ஸ்நா னம்பண்ணினால் அவர்களுக்கு ஆயிரங் கோதானஞ் செய்தபலன் குறையாமலுண்டாகும் அவர்கள்முழுகும்போது தங்களுக்கிஷ்டமா ன பேர்களைநினைத்தால் அவர்களும் மோக்ஷத்தையடைவார்கள் மன ங்களித்துஸ்நானஞ்செய்து அந்தத்தலத்தில் ஓரிரவுதங்கி யிருந்தால் அவர்கள் சிவலோகத்தைப் பெறுவார்கள் ஆதலாற் சந்தோஷமா கப் பலகாலமும் ஸ்நானஞ்செய்து அவ்விடத்தில் வசிக்கின்றபேர்கள் பெறுகின்றமோக்ஷத்துக்கு ஒரளவில்லை என்றவாறு...... .. ..... .. (௬௱).

முத்தாநதியைத்தரிசிக்க முயன்றுநிற்கப்பரிசிக்கப்.... ........,.... ...*
பத்தால்வசிக்கநீராடப் பாறுமுன்னர்பனிபோலக்.... .... ..... ....*
கொத்தார்பாவக்குழுக்களெலாங் குறைந்துகுறைந்துபற்றறுமால் . *
வித்தாய்மூழ்கிச்சிவபூசை விளைப்பார்பெருமையளப்பாரார்..... ... *

(இ-ள்.) திருமணிமுத்தா நதியைத் தரிசனஞ்செய்தாலும் தீர்த்த ப்பிரவாகத்தைப் பார்ப்போம் அல்லது ஸ்நானஞ்செய்வோம் வாரு ங்களென்று ஒருவருடன்சொல்லி முயன்று நின்றாலும் கையினாற்றீ ண்டிப்பிரோக்ஷித்துக் கொண்டாலும் பத்தியினா லந்தநதிதீரத்தில்

வாசஞ்செய்தாலும் ஸ்நானஞ்செய்தாலும் அவர்கள் செய்த கோத்தாய்நிறைந்த பாவத்திரளெல்லாம் சூரியனைக்கண்ட பனி கெடுவதுபோல் குறைந்து குறைந்து வேரோடுங் கெட்டுப்போகும் ஆதலால் அந்த நதியினிடத்தில் உள்ளன்புகொண்டு ஸ்நானம்பண்ணிச் சிவபூசை செய்பவர்களுடைய பெருமையை யிவ்வளவென்று மட்டிட்டுச்சொல்வதற்கு எவர்களாலுமுடியாது என்றவாறு.................. (எ)

கதிரின்மதியங்கலந்திடுநாள் கதிர்ப்பூரணையாடிப்பிறப்பு............ *
மதிசேர்தைமாதப்பிறப்பு மற்றைமாதப்பிறப்புகளில்.................. *
விதியாமுடுக்கள்விதியாதம் விறல்வைகாசிப்பூரணையி... .... ... ....*
லதிகமாசிமாதத்தி லந்தமகத்திலிந்நாளில்.................................*

(இ-ள்.) சூரியனோடு சந்திரன்கலக்கின்ற அமாவாசை பிரகாசம் பொருந்திய பர்வம் ஆடிமாதப்பிறப்பாகிய தக்ஷணாயன புண்ணிய காலம் தைமாதப்பிறப்பாகிய உத்தராயன புண்ணியகாலம் மற்றச்சங்கராந்தி புண்ணியகாலங்கள் விசேஷமாகவிதிக்கப்பட்ட திருவாதிரையாதிய நக்ஷத்திரங்கள் மகாவியதிபாதம் பெருமை பொருந்திய வைசாகபௌர்ணமி சிறப்புபொருந்திய மாசிமாதம் மாசிமகம் ஆகிய இப்படிப்பட்ட புண்ணியகாலங்களில் என்றவாறு..... .... (அ)

முயன்றுமணிமுத்தாறுதனின் மூழ்கித்தானமேதேனு.... ........ *
மியன்றதளித்துச்சிவன்பாத மிறைஞ்சிமூன்றுவலம்வந்து..... ... *
பயின்றபூசைசெய்வார்தம் பலத்தைநூறுவருடத்தில் ... .. ......... *
வியந்துமுடியாதவரிருந்து விளங்குந்தேசஞ்சிவலோகம்... ... .. .... *

(இ-ள்.) திருமணிமுத்தாநதியி னிடத்திற்சென்று ஸ்நானஞ்செய்து ஏதாகிலு மியன்றமாத்திரம் சிவனடியார்களுக்குத் தானமாகக்கொடுத்து பரமசிவனுடைய திருவடிகளை வணங்கி அவரது ஆலயத்தை மூன்று பிரதக்ஷணஞ் செய்து அவன விதியோடு பூசைசெய்பவர்களுடைய பலனை நூறுவருஷ பரியந்தம் சொன்னாலுஞ்சொல்லிமுடியாது அப்படிப்பட்ட பெரியோர்கள் வசிக்கின்ற ஸ்தலமே சிவலோகமாகும் என்றவாறு ............ .. ......... ...... .... .. . . (௯)

தங்கையமுனை பிரயாகை கலைகாவிரிசந்திரபாகை..... ........ .........*
கங்குகோதாவிரிதேவி சரையுநமிதைகோமதியே ........ ..........*
யங்கண்டகிமந்தாகினியோ டயிரஞ்சனைமந்தகைசோணை...... ...*
நங்கவுசிகைசிந்துசங்க நல்லகேயைசரசுக்கள்.... .................*

(இ-ள்.) கங்கை யமுனை பிரயாகை சரஸ்வதி அலைகளை யுடைய காவேரி சந்திர புஷ்கரணி பொருந்திய கோதாவிரி சரயு நருமதை கோமதி அழகிய கண்டகி மந்தாகினி நுண்மணலைக் கொழிக்கின்ற அஞ்சனைமந்தகை சோணை நலமிருந்த கௌசிகை சிந்து சங்கம்- நன்மைதங்கிய கேயை என்று சொல்லுகின்ற பலதீர்த்தங்களிலும்-எ-று

பூமியந்தரமாகாயம் புகலுமற்றதீர்த்தங்கள் .. ............. ....*
காமர்நதியுங்கருங்கடலுங் கலத்தல்முதலாந்தீர்த்தங்க ............*
டாமங்கேபோய்மூழ்குபலன் றன்னிற்கோடிபலனதிகம்.... ..... .....*
வாமமணிமுத்தாநதியை வணங்கியொருநாண்மூழ்கினர்க்கே.. .....*

(இ-ள்.) பூமி அந்தர சுவர்க்கமென்று சொல்லப்பட்ட மூவுலகிலுள்ள தீர்த்தங்களிலும் சொல்லுகின்ற ஏனைய ஸ்தானங்களிலுள்ள தீர்த்தங்களிலும் அழகிய நதிகளிலும்சமுத்திரத்திலும் ஒன்றோடொன்று சங்கமமாகின்ற தீர்த்தங்களிலும் இன்னமிதுமுதலாகிய பலதீர்த்தங்களிலும் வருத்தத்தோடுஞ் சென்று ஸ்நானஞ் செய்கின்றவர்களுக்கு உண்டாகின்ற பலனைப் பார்க்கிலும் அழகுபொருந்திய திருமணிமுத்தாநதியினிடத்திற்போய் நமஸ்காரம்பண்ணி ஒருநாள் ஸ்நானஞ்செய்த பேர்களுக்குக்கோடிபங்கு அதிகமான பலனுண்டாகும்.

எடுத்தமுத்தா நதிக்கரையில் யாகம்பண்ணிற்சதாசிவனு ..............*
மடுத்தமாசிமகந்தன்னி லந்தநீராக்குடத்தெடுத்து.... ......... ....*
நடக்கிலஷிக்கோர்பரிமேத நல்லயாகபலனுண்டாந்.... ................*
தொடுத்ததலங்களெங்கிருந்துந் துதிக்கின்னைக்கிற்பிறப்பறுமே ...*

(இ-ள்.) உயர்த்திக்கூறிய திருமணி முத்தா நதிக்கரையிலிருந்து யாதாமொருவர் யாகஞ்செய்தால் அவர்கள்சதாசிவ சொரூபமாவார்கள் மாசிமாதத்தில் வருகின்ற மகநக்ஷத்திரத்தில் அந்த நதியினிடத்

திற்சென்றுஸ்நானஞ்செய்துசுவாமிக்குஅபிஷேகஞ்செய்ய அந்தஜலத்தைக் கும்பத்திலேந்திக்கொண்டு நடந்தால் அடி ஒன்றுக்கு நன்மைபொருந்திய அஸ்வமேதயாக பலனைக்கொடுக்கும் அல்லாமலும் எந்தத்தலங்களில் வசித்திருந்தபோதிலும் பழமலையை வாக்கினால் தோத்திரஞ்செய்தாலும் மனத்தினால் நினைத்தாலும் பிறவி நீங்கும்-எ-று.

கும்பமுனிவனருள்பெற்றுக் குலவுஞ்சுவேதமுனியென்பா..... ...*
ணம்புயருவமாசிமக ஞாயிறுதிரையட்டமிநாட்.... .. ........ .... *
டம்பமுத்தாநதிமூழ்கித் தம்பிரானுக்காட்டியநீர்.... ..... .. ..... *
விம்பதலத்திற்சுவேதநதி வெள்ளாறெனப்பேர்பெற்றதுவே.......*

(இ-ள்.) அகஸ்திய முனிவரிடத்தில் உபதேசம்பெற்றுப் பிரகாசிக்கப்பட்ட சுவேத முனிவரானவர் ஆசிக்கத்தக்க பர்வம் மாசிமகம் ஆதித்தவாரம் திருவாதிரை நக்ஷத்திரம் அஷ்டமிதிதி இப்படிப்பட்ட தினங்களில் நிலைபெற்ற திருமணிமுத்தா நதியினிடத்தில் ஸ்நானஞ்செய்து பின்பு பரமசிவனுக்கு அபிஷேகஞ்செய்த திருமஞ்சனமானது வட்டமாகிய இப்பூமியிற் பெருகித்தேவபாஷையில்சுவேதநதியென்றும் தமிழ்ப்பாஷையில் வெள்ளாறு என்றும் பெயர் பெற்றது என்றவாறு....... .. .. .. .... ..... ......................... (௰௩)

அத்தன்முதுகுன்றமர்ந்தபிரா னரியதலத்தில்வந்தெய்தி·.......*
முத்தன்கும்பமுனிவன்றன் முன்னேநின்றுகயரோகன்..... ........*
கொத்தையெயிற்றன்குறைந்தகையன் குட்டநோயன்முடையுடம்பன்
மத்தமுயலகன்னடுத்தோன் வருந்தியறுவர்மொழிகின்றார் ... ... *

(இ-ள்.) எமதுபிதாவாகிய பழமலைநாதருடைய அரிதாகிய விருத்தாசலத்தில்வந்து மோக்ஷாதிபராகிய அகஸ்தியர் முன்னேநின்று க்ஷயரோகத்தையுடையவன் சொத்தைப் பற்களையுடையவன் குறைந்த கைகளை யுடையவன் குஷ்ட வியாதியை யுடையவன் நாற்றம்பொருந்திய சரீரத்தையுடையவன் உன்மத்தமாகிய முயலகனென்னும் வலியையுடையவன் ஆகிய இவர்கள் ஆறுபேரும் வருத்தத்தையடைந்து அகஸ்திய முனிவனைப்பார்த்து விண்ணப்பஞ்செய்கின்றார்கள்.

பிணியானின் றுதவிக்கின்றேம் பெரியகும்பக்குறுமுனியே .... .....*
பணியாவடியோமுன் னென்ன பாவஞ்செய்தோமெனப்பகர்ந்தார்*
தணியாப்பாவமுன்செய்து நரகினெடுங்காலங்கிடந்தீ..... ...........*
ரணியானரகசேடங்க ளயில்வான் வந்தீரெனவுரைத்து........ . ........*

(இ-ள்.) பெரிதாகிய கலசத்தினிடமாகவந்த அகஸ்தியமுனிவரே நாங்களறுவரும் வியாதியினுல் தாபமடைந்திருக்கின்றேம் அடியேங்கள் முற்செனனத்தில் என்னபாதகஞ் செய்தோமென்று வணங்கி விண்ணப்பஞ்செய்தார்கள் அப்பொழுது அகஸ்தியமுனிவர் கிருபாகடாக்ஷம்வைத்து நீங்கள் முற்செனனத்தில் மகாபாதகங்களைச்செய்து அதனுல் நரகத்தில் நெடுங்காலமிருந்து வருந்தினீர்கள் இப்போது அந்த நரகசேடங்களை யனுபவிக்கும்படி பிறவி யெடுத்தீர்க ளென் றுசொல்லி என்றவாறு.......,... .................... .... . .. ..... .....(டரு)

மருவுங்கயரோய்மறையோனை வதைத்துக்குருதேவியைத்தீண்டி...*
வெருவுங்குட்டமுடைபிறனில் விழைவாற்கோளாற்கொத்தைப்பற் *
பருகிச்சுரையாற்குறைந்தகரம் பயிலுமுயலகன்பொன்னைத் .... .....*
திருடியுமக்குவந்ததெனத் தீரும்வழியுமுனியுரைப்பான்.......... . .. *

(இ.ள்.) பிராமணனைக் கொன்றபடியால் துன்பம் பொருந்திய கயரோகமும் குருபத்தினியைத்தீண்டினபடியால்யாவருமஞ்சுகின்ற குஷ்டவியாதியும் பாதாரத்தை யிச்சித்தபடியால் நாற்றம் பொருந்தியசரீரமும் கோட்சொன்னபடியால் சொத்தைப்பற்களும் மதுபானஞ்செய்தபடியால் அழுகியவிரலையுடையகைகளும் பொன்னைக்களவுசெய்தபடியால் முயலகனென்னும் வியாதியும் உங்களுக்கு வந்ததென்று சொல்லி அந்த வியாதிக ணிவர்த்தியாகுமார்க்கமும் சொல்லுகிறுர் அகஸ்தியமுனிவர் என்றவாறு .... . .............. ..... (டசா)

மாசிமாதநாண்முப்பான் மணிமுத்தாறுதனின்மூழ்கி... .... .... ... *
யீசன்முதுகுன்றெம்மானை யிறைஞ்சிற்பிணிகளிறுமென்ரு..... .....*
ஞசிலவருமுத்த ற்றிலையாறளவநீராடிப் .. .... . .... ..... .............. *
பாசமறுக்குஞ்சிவன்பாதம் பணிந்துமுனியைப்பணிந்தார்கள் .. ...*

(இ-ள்.) நீங்களாறுபேரும்போய் திருமணி முத்தா நதியினிடத்தில் மாசிமாதம் முப்பதுநாளும் ஸ்நானம்பண்ணி பரம சிவனாகிய எமது பழமலை நாயகனை வணங்கினால் உங்கள் வியாதிகணீங்குமென்று சொன்னார் அதைக்கேட்ட குற்றமற்ற அவ்வாறுபேர்களும் போய்த் திருமணிமுத்தா நதியில் மாசிமாதம் முப்பது நாள்வரைக்கும் ஸ்நானம்பண்ணி பாசவிமோசனஞ் செய்கின்ற பழமலைநாதருடைய திருவடிகளை வணங்கிப் பின்பு அகஸ்திய முனிவரிடத்திற்குவந்து வணங்கி நின்றார்கள் என்றவாறு ........................................ (௰எ)

மேகமகன்றவிளங்கதிர்போன் மெய்பெற்றவரைமுனிநோக்கி ...... *
மோகமேநாய்முன்வந்ததுவு முத்தாநதியாற்போனதுவு..... .... .... *
நாகமிருந்தார்நயந்ததுவு நாட்டிற்காட்டிப்போமென்று..............*
ராகம்விளங்கிநின்றவரு மவனிமுழுதுங்காட்டினரால்.... ........ ..*

(இ-ள்) மேகத்தில் மறைப்பட்டிருந்து அதினின்றுநீங்கிய இளஞ்சூரியனைப்போலப் பிரகாசிக்கின்ற சரீரம்பெற்ற அவ்வறுவர்களையும் அகஸ்திய முனிவர்பார்த்து நீங்கள் முற்சென்னத்திற் செய்த பாதகங்களா லடைந்திருந்த வியாதிகளும் திருமணிமுத்தா நதியில்ஸ்நானம்பண்ணினதினால் அந்த வியாதிகளெல்லாம் நிவர்த்தியானதும் பழமலைநாதர் உங்களுக்குக்கிருபை செய்ததும் நாட்டிலுள்ளவர்களெல்லாம் அறியும்படி காண்பித்துச்சொல்லிப் போங்கள் என்று அகஸ்திய முனிவர் சொல்லியருளினார் அப்படியே நல்லதென்று முனிவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு சரீரவியாதிக ணீங்கித் தேஜசைப்பெற்ற அந்த ஆறுபேர்களும் தேசங்களிலெல்லாம் அறிவித்துக்கொண்டு போனார்கள் என்றவாறு .......... .... ....... ... ... (௰அ)

பயனால்விளங்குஞ்சிலோச்சயமாம் பகர்பட்டணத்திலொருவணிக *
னயமாஞ்சுகேசனவன்றனக்கு நல்லமைந்தராறுவருளார்.... ........ *
வியனாங்கல்விகேள்வியினால் விற்கக்கொள்ளநிறுத்துரைக்க.......... *
வயமாயுள்ளாரோழைக்கும் வலியோர்தமக்குநிறைகோலார் .. ........*

(இ-ள்.) சர்வ நிதியினாலும் விளங்குகின்ற சிலோச்சயமென்று சொல்லப்பட்ட பட்டணத்தில் நீதியையுடைய சுகேசனென்னும்ஒரு

செட்டியிருந்தான் அவனுக்கு நன்மைமிகுந்த ஆறுபிள்ளைகளிருந்தார்கள் அவர்கள் பெருமைபொருந்திய கல்விகேள்விகளினால் பொன்முதலியவற்றை விற்கவும் கொள்ளவும் நிறுக்கவும் உரைக்கவும்வல்லபத்தையுடையவர்கள் எளியவர்களுக்கும் வலியவர்களுக்கும் துலாக்கோலை யொத்திருப்பவர்கள் என்றவாறு.................. (௰௯)

ஆறுபேருநீதியினா லருத்தந்தேடியளகேசன்.......... ...................*
வீறுஞ்செல்வம்போற்பொலிந்து மேவுநாளின்முதுகுன்றிற் .......*
பேறுபெற்றோர்தமைக்கேட்டுப் பெருமான்றலத்துவந்தெய்தித்... *
தேறுமணிமுத்தாநதியிற் றீர்த்தமாடிநீறணிந்து......................*

(இ-ள்.) அந்த வர்த்தகர்களாறுபேரும் நீதிமார்க்கத்தினால்பொருள்சம்பாதித்து குபேரனது மகத்தான சம்பத்தைப்போற்பொலிவடைந்து வாழுகின்றகாலத்தில் பழமலையிற்சென்று பேறுபெற்றவர்களைக் கேள்விப்பட்டு பரமசிவனுடைய ஸ்தலமாகிய விருத்தாசலத்திற்குவந்து தெளிவுபொருந்திய நீரையுடைய திருமணிமுத்தாநதியில் ஸ்நானஞ்செய்து விபூதியையணிந்துகொண்டு-எ-று (௨௰)

வணிகர்நியமமுடித்தேறி மணியும்பொன்னும்வகைத்துகிலும் ... *
பணியுமனையும்விளைநிலமும் பசுவுமறையோர்தமக்குதவி ..........*
யணியவுறவாமுதுகுன்றி லருமைப்பெருமான்பதம்பணிந்து ... .. *
நணியமுத்தாநதிக்கரையி னல்லமரத்தின்கீழிருந்தார்.............. ...*

(இ-ள்.) செட்டிப்பிள்ளைகள் ஆறுபேரும் தங்களுடைய நித்திய நியமங்களை முடித்துக் கொண்டு கரைமேல்வந்து பிராமணர்களுக்குச் சுவர்ணமும் வகைவகையாகிய வஸ்திரங்களும் ஆபரணங்களும் வீடுகளும் விளைநிலங்களும் பசுக்களுந் தானங் கொடுத்து நெருங்கிய வுறவாகி விளங்குகின்ற பழமலையின்கண் ணெழுந்தருளிய அருமையாகிய பரமசிவனுடைய திருவடிகளை வணங்கி-திரும்பவந்து அந்தத் திருமணிமுத்தா நதிக்கரையிற் பொருந்திய நன்மையுள்ளவிருக்ஷத்தி னிழலிலிருந்தார்கள் என்றவாறு.... .... ..................... ..... (௨௧)

அந்நேரத்திலொருபிறவிக் குருடனநேகதூரத்தான்........ ........*
முன்னேயொருவன்கோல்காட்ட வந்தான்முத்தாநதிக்கரையின்... *

மன்னேருமையாள்கோயிலுக்கு வடபாலாம் புண்ணியமடுவிற் .....*
கொன்னேமுழ்கக்கண்டெரிந்து குவளைமலர்போல்விளங்கினதால்*

(இ-ள்.) அப்பொழுது ஒருபிறவிக்குருடன் வெகுதூரத்திலிருந்து முன்னேயொருவன் கோல்பிடித்து வழிகாட்டிவர வந்தான் அவன் முத்தாநதிதீரத்தில் நிலைபெற்று அழகுபொருந்திய பெரியநாயகியாருடைய சந்நிதிக்கு வடபுறத்திலுள்ள புண்ணியமடுவில் இந்த ஸ்நானஞ்செய்வதினு லென்னபயன்பெறலாமென்று கருதாமல் முழுகினான் உடனே அவனுடைய கண்கள் நன்றாகத்தெரிந்து குவளை மலரைப்போற் பிரகாசித்ததினாலென்றவாறு ...... ................. (உஉ)

சிரித்துநின்றுகூத்தாடித் திசைகளெட்டும்பார்த்தவனை . . ..... .... *
விரித்தகரமாய்வணிகரெலாம் வினவிப்புதுமையென்னென்றார் .. *
தரித்தவிழிபெற்றவன்சொல்வான் றாகத்துடனேயான்முழ்கப் .....*
பருத்தவொருவனொருசத்தம் பகர்ந்தான்செவியிலஃதறியேன்...*

(இ-ள்.) அவன் நகைத்துநின்று சந்தோஷத்தினால் கூத்தாடி எட்டுத்திசைகளையும்பார்த்தான் அப்படிபார்த்த புண்ணிய புருஷனை மரத்தினிழலிலிருந்த செட்டிப்பிள்ளைகளாறுபேரும் கையைவிரித்துக்கொண்டு என்ன ஆச்சரிய நடந்ததென்று கேட்டார்கள் அப்படிகேட்டவர்களுக்கு முன்பு பிறவிக்குருடாயிருந்து இப்போது கண்களைப்பெற்ற அந்தப்புண்ணியபுருஷன்சொல்லுகின்றான் நான் இந்தமடுவினில் அதிகதாகத்துடன் முழுகினபொழுது விஸ்வரூபத்தையுடைய ஒருமகாபுருஷன்வந்து என்காதினடத்தில் ஒருசத்தத்தைச்சொன்னான் அதையின்னதென்றுதெரிந்துகொள்ளாதவனாக()

ஆகாவென்றுநானலற வவன்றான்பிடித்துவளைத்தென்னைப்....... *
போகாதேயென்றிருவிழியிற் பொருந்துமருந்துதனையிட்டான் *
சேகார்குருட்டுவிழிதெரிந்து சிந்தைதானுந்தெளிதலினு .... ... .....*
லேகாதேயென்றவனழகை யானும்பார்த்தனென்சொல்கேன் *

(இ-ள்.) ஆ-ஆ-வென்று நானலறினபொழுது போய்விடாதே யென்றுசொல்லி அந்த மகாபுருஷன் என்னைப் பிடித்துக்கழுத்தை

வலைத்து எனது இரண்டுகண்களிலும் பொருந்தும்படி மருந்தைத் தடவினன் அப்பொழுது நெடுநாளாயிருந்த குருட்டுத்தன்மைநீங்கிக் கண்கள் தெரிந்து மனமுந்தெளிந்தபடியினால் நானும் அந்த மகா புருஷனைப்போய் விடாதேயென்று சொல்லி அவருடைய அழகைப்பார்த்தேன் என்றவாறு ......... (உ௪)

உண்டாலன்றோபசிநீங்கு முலகநீதியவனழகைக் ....*
கண்டாலுடனேபசிநீங்குங் கமலமுகமுங்கண்மூன்றும் ...*
விண்டாணிறைந்தபொற்சடையும் வெள்ளைமதியுங்கருமிடறும் ...*
வண்டார்குழலியிடப்பாலு மானுமழுவுமாய்நின்றார் ....*

(இ-ள்.) புசித்தாலல்லவோ பசிநீங்குமென்று சொல்வது உலக நியாயம் அப்படியிருக்க அந்த மகா புருஷனுடைய அழகைப்பார்த்தவுடனே பசிநீங்கிப்போம் தாமரையையொத்தமுகமும் மூன்றுகண்களும் ஆகாசநிறைந்த பொற்பிரகாசம் பொருந்திய ஜடாபாரமும் வெண்மைதங்கிய மூன்றாம்பிறையும் நீலகண்டமும் வண்டுகள் நிறைந்த புஷ்பங்களைத் தரித்த அளகபாரத்தையுடைய உமையவள் வசிக்கின்ற இடப்பாகமும் மானும் மழுவும் விளங்கும் படியாகத்தோன்றிநின்றார் என்றவாறு ........ (உரு)

மின்விட்டிலங்குந்திருவுருவீர் விளங்குநகையீர்விழியிரண்டு ....*
மென்மட்டளித்தீரிருவீரு மீடேறுங்கோளெனச்சொன்னே ....*
னுன்மட்டல்லவிந்தநதி யொருங்கேநெருங்குமலமறுக்கும் ....*
பொன்மட்டளிக்கும்புவியளிக்கும் புத்தேளரசும்பரிந்தளிக்கும் .*

(இ-ள்.) மின்னலைப்போல் ஒளிவிட்டுப் பிரகாசிக்கின்ற திருமேனியையுடைய பரமசிவனே முல்லையரும்புபோற் பிரகாசிக்கின்ற தந்தபந்தியையுடைய பரமேஸ்வரியே நீங்களிருவரும் அடியேனுக்கு மாத்திர மிரண்டுகண்களையுங் கொடுத்தீர்கள் ஆகையால் நீங்கள் எப்போதும் வாழக்கடவீர்களென்று சொன்னேன் அதற்கவர்களிருவரும் உனக்கு மாத்திரமல்ல இந்தநதியானது தன்னிடத்தில் வந்து ஸ்நானம்பண்ணின பேர்களுக்கு நெருங்கிய மும்மலங்களையும் வேரோடுநீக்கும் வேண்டிய பொன்னைக்கொடுக்கும் பூமியைக்கொடுக்கும் தேவேந்திரபதத்தையுமன்போடுகொடுக்கும்-என்று- (உசு)

செட்டிமக்களிருக்கின்றார் செப்பிப்போமென்றுரைசெய்தார் ....*
நிட்டையுடையீர் நீரும்போ மென்றனேசமுடன் வணிகர்........ ....*
கிட்டிமூழ்கியெழுந்திருப்பக் கிழவன்கிழவியாய்த்தோன்றி ..... .... *
யிட்டவரங்கள்கொடுத்தளித்தா ரெந்தையெந்தாயிருவர்களும். *

(இ-ள்.) ஆகையால் நீ அந்தமரத்தினீழலில் செட்டிப்பிள்ளைகளிருக்கின்றார்கள் அவர்களுக் கிந்தச்சேதியைச் சொல்லிப்போவென்று திருவுளம் பற்றியருளினார் ஆதலால் நிஷ்டையை யுடையவர்களே நீங்களும்போய் ஸ்நானம்பண்ணுங்க ளென்றுசொன்னான் அதைக்கேட்ட செட்டிப்பிள்ளைகள் ஆசையுடனே புண்ணியமடுவிண்டத்திற்போய் ஸ்நானஞ்செய்து எழுந்தபொழுது எமது பிதாவாகியபரமசிவனும் மாதாவாகிய உமையவளும் பிராமணக்கிழவனுங் கிழவியுமாக வெழுந்தருளி அவர்கள் விரும்பிய வரங்களைக்கொடுத்துரக்ஷித்தருளினார் என்றவாறு .......................................................(உஎ)

வாலவணிகர்மனங்களித்து மறையின்கிழவன்மறைக்கிழவி ........ . *
கோலங்கண்டுபணிந்தேத்திக் கும்பிட்டெழுந்துகூத்தாடிக்..... .....*
காலகாலன்கோயிலிற்போய்க் களித்துப்பணிந்துவிடைகொண்டா*
ரோலுமுத்தாநதிப்புதுமை யின்றேவென்றுமுளதாமால்............ *

(இ-ள்.) அப்பொழுது இளமைப் பருவத்தையுடைய செட்டிப்பிள்ளைகள் மனமகிழ்வுகொண்டு பிராமணக்கிழவன் பிராமணக்கிழவி யிவர்களுடைய திருவுருவைக்கண்டு வணங்கித் தோத்திரஞ்செய்து இரண்டு கைகளையுந் தலைமேல்வைத்துக் கும்பிட்டுநின்று ஆனந்தக்கூத்தாடி மார்க்கண்டேயருக்காக நமனை யுதைத்தருளிய திருவடிகளையுடைய பழமலைநாதரது சந்நிதானத்திற்குப்போய் ஆனந்தித்து வணங்கி விடைபெற்றுக்கொண்டு தங்கள் பட்டணத்திற்குப் போனார்கள் ஆனபடியினால் வேண்டியவரங்களைக் கொடுத்தற்கிசைந்த திருமணிமுத்தாநதியின் மகத்துவம் இப்பொழுதுமாத்தரமோ எப்பொழுதுமுண்டாயிருக்கும் என்றவாறு ......................(உஅ)

தீர்த்தச்சருக்கம்-முற்றுப்பெற்றது.

ஆகசருக்கம் - ௩ - க்கு - திருவிருத்தம் - (௱௧)

---



திருச்சிற்றம்பலம்.

## நான்காவது

# விதர்க்கணச்சருக்கம்.

### வேறு.

ஈசனை வந்தித்திறைவியுரைப்பாளெழின்முதுகிரிசேர்வார்.................. *
தேசவிமானத்துலவுவரென்னத்தெருள்பெறவருள்செய்தீ................ *
ேசில்விமானத்தெவரெவர்சென்றார்த்தேசத்தார்தா..... ...... ......... *
மாசறுமவர்செய்தவவலியெனவங்கணனருள்செய்வான்...... ....*

(இ-ள்.) எல்லாப் பொருளுக்கும் முதல்வியாகிய உமையவள் பரமசிவனை வணங்கிச் சொல்லுகின்றாள் அழகிய விருத்தகிரியில்வந்து சேர்கின்றவர்கள் பிரகாசம்பொருந்திய தெய்வ விமானத்திலேறிக் கொண்டு எங்குஞ் சஞ்சரிப்பார்களென்று எனக்குத் தெளிவாகத் திருவுளம்பற்றியருளினீர் ஆதலால் அப்படிப்பட்ட குற்றமில்லாதவிமானத்திலேறிச்சென்றவர்கள்எவரெவர்கள் அவர்களெந்தத்தேசத்திலிருந்தவர்கள் அஞ்ஞானநீங்கிய அவர்கள் செய்த தவபலமெவ்வகைப்பட்டது அவைகளை யெனக்குத் தெரியச்சொல்ல வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய திருவுளமகிழ்ந்து பரமசிவன் திருவுளம்பற்றியருளுகின்றார் என்றவாறு............ ...... ... .. ... ......... (க)

திசைமுகனுக் கைம்பதுவயதிற்றிரேதாயுகமாதே.....................*
வசிகரகோசலதேசமதன்கண்மணிபிங்கலையூரான்....... ......... *
மிசைதாமந்தணன்விபசித்தென்றொருவியனுளபேருள்ளான் .... *
பசிகபிரந்திடமிடிகள்வளைந்தொருபற்றென்றற்றதனால்........ ... *

(இ-ள்.) உமையவளே கேட்பாயாக பிர்ம்மாவுக்கு ஐம்பதுவயதான காலத்தில் திரேதாயுகத்தில் சகலவசிகரமுநிறைந்த கோசலதேசத்திலிடத்தில் மணிபிங்கலையென்னும்பட்டணத்தையுடையவன் மேன்

மைபொருந்திய பிராமணவமிசத்திற் பிறந்தவன் ஒப்பற்ற அழகு பொருந்திய விபசித்து வென்னும் பெயரையுடையவன் அப்படிக் கொத்தவனைப்பசி அதிகரித்து வருத்தும்படிக்குத் தரித்திரம் வளைந்துகொள்ள ஒருவருடைய சகாயமுமில்லாமற் போய்விட்டதனால்()

நாடுகள்செல்லுநரபதிபின்செலு நல்லோர்முன் செல்லுங்........ ......*
காடுகள்செல்லுங்காய்கனிகாணுன் கண்டோர்பின செல்லும்.... . ...*
வீடுகள்செல்லுமேவலர்பின்செலுப்விபசித்தொன் றிற்கு.. ...... .....*
பீடுகளில்லைதென்செயலன் றீதென் றுதிரிந்தனனே ... ................*

(இ-ள்.) விபசித்துவானவன் மிகுந்த பசிவருத்தத்தினால் நாடுகடோறுந்திரிவான் அரசன் போகுமிடங்களில் அவன்பின்னேபோவான் பெரியோர்களுக்கு முன்னேபோவான் காடுகள்தோறும்போவான் அவ்விடத்திலும் காய்கள் கனிகள் காணுதவனுகி மனமவருந்தி எதிரேநேரிட்டவர்கள் பின்னே போவான் வீடுகள்தோறும் போவான் சத்துருக்களின் பின்னேயுப்போவான் எப்படிஅலேந்தும் ஒருவனையாலும் பசிவருத்த நீங்காதவனுகி இதுவெல்லாம் என்னுடைய செயலல்லவென்று நினைத்துவெகுகாலந்திரிந்துகொண்டிருந்தான்()

வயிறுதளர்ந்தவன்மலையில்வனந்தனில்வருநாளொருநாளிற்.........*
பயிறருமிரவியையரவமணைந்ததுபாங்கிருஞ்சுனைகண்... .... ....... *
டெயிறுவிளக்கிலன்மூழ்கினனங்கணிலிங்கமுமர்ச்சித்தான் ..... .... *
பயிறறுதண்டதுபோலவிழுந்துகடிதினடந்தனனே . . ........... . .....*

(இ-ள்.) விபசித்துவானவன் பசியினுற் றளர்ச்சியடைந்து மலைகளிலுங் காடுகளிலுந் திரிந்து வருகின்ற தினங்களில் ஒருதினத்தில்பிரகாசம்பொருந்தியசூரியனைச் சர்ப்பந் தீண்டிற்று சூரிய கிரகணபுண்ணியகாலமாகையால் அவ்விடத்தில் பெருமை பொருந்திய ஒருசுனையைக்கண்டு அதிலிறங்கித்தந்தசுத்தி பண்ணிக்கொண்டு ஸ்நானஞ்செய்து நித்திய அனுஷ்டான நியமங்களை முடித்துக்கொண்டு அவ்விடத்திலிருந்த சிவலிங்கத்துக்கு அர்ச்சனைசெய்து பின்பு கயிறற்றதடிபோல் சரீரத்தளர்வினுல் தள்ளாடிவிழுந்து விழுந்து அதிவேகமாக நடந்தான் என்றவாறு ...................................................;(சு)

கல்லினிலிறடிக் காலிலிரத்தங் கறசறவெனவிழச்...........................*
செல்லவுமுள்ளுகள் கல்லுகடைக்கச் செடிபுடைகொடிவீச ............*
நல்லபலங்களி தண்புனலுண்பவை நண்ணுக்கண்டிலனே ..... ....*
பல்லுகளுவொடு பசைவாய்கொள்ளப் பதியநிழல்காணேன் ..... ....*

(இ-ள்.) கல்லுகளினிடத்தி லிறடிவிழுந்து இரண்டுகால்களிலும் இரத்தவெள்ளங் கறகறவென்று பீறிட்டொழுகும்படியாக நடக்கும்பொழுது முள்ளுகள் கல்லுகள்தைக்கவும் செடிகளிற்படர்ந்துள்ள முட்கொடிகள்வீசவும் அதிக பிரயாசத்தையடைந்து நல்ல காய்கனிகள் தண்ணீர் முதலிய புசிக்கின்ற வஸ்துக்களொன்றுங் கண்ணுக்கெதிரே அகப்படாமல் பல்லுகளும் நாவும் பசைபிடித்து ஒட்டிக்கொள்ள அப்போது ஒரிடத்தில்நிற்க நிழலுங்காணுமல்வருந்தினுன்-எறு.

பூதபசாசம் புலிகரிகரடிகள் புடைமிசையுங்கானில்........ ... .......*
வேதனையாகவெொ ராறுதினம்பசி விரவித்திரிகின்றுன்..... ...... ....*
யாதொருமேனிகொ ளுங்கருவான தழற்காய்கின்றதுபோன்........*
மாதவஞான நிறைந்திடவோவிவன் வயிறுடல்காய்வதுவே....... ..*

(இ-ள்.) எந்தவிடங்களிலும் பூதங்களும் பேய்களும் புலிகளும் யானைகளும் கரடிகளுந் திரிகின்ற காட்டினிடத்தில் ஆறுநாள்பரியந்தம் பசியினுல் வெகு வருத்தப்பட்டு திரிகின்றுன் எதாகிலும் ஒருவிக்கிரகந் திருவுருக்கொள்ள மண்ணினுற் கருக்கட்டி அந்தக் கருவை அக்கினியிலுருகக் காச்சுவது போல இந்த விடசித்துவினுடைய வயிறும் சரீரமும் உதராக்கினியிற் காய்வது மகாதபசும் பிரமஞானமும் பூரணமாகநிறையும்பொருட்டோ என்றவாறு........ ............ (௬)

நல்லகுலத்திலுதித்து மதிப்புட னற்கலைபலகற்றுஞ் ... ... .... ... ...*
செல்வமுநித்தில கூனர்களுமெர்க டிருவுளவும்மிலதா.....................*
யல்லலுழைத்தன ருயிரமோதினு மாயிரமாயினுமே..... ......... ..*
யில்லதுவாரா துள்ளதுபோகா தென்போலிகணுவார்..... .........*

(இ-ள்.) நல்லகுலத்திற்பிறந்தும் யாவரு மதிக்கும்படியாக நன்மைபொருந்திய அநேக நல்ல சாத்திரங்களைக் கற்றறிந்தும் செல்வ

முண்டாகாமற்போயின கூனர்களுக்கு முதுகு இருந்தும் நிமிரக் கூடாததுபோலவும் ஊமர்களுக்கு வாயிருந்தும் வசனிக்கக் கூடா ததுபோலவும் விபசித்துவானவன் வறுமையால் துக்கமடைந்திருந் தான் ஒருவன் ஆயிரம் சாத்திரங்கள் படித்தாலும் அனேகமாகிய அவற்றின் பொருள்களை ஆய்ந்து அறிந்தாலும் ஒருவனுக்குப் பிரா ரத்வத்தி யில்லாதது வரமாட்டாது உள்ளது விட்டுநீங்கமாட்டாது ஆகையினால் இதைக்குறித்து என்போலுமறிவீனர்கள் வருந்துவார் களேயல்லாமல் தெரிந்தபெரியோர்கள் வருந்தமாட்டார்கள் -எ-று.

அப்படிதிரிபவன் முற்படமுற்சிவ னர்ச்சனைசெய்தனனால் ......... *
வைப்புகள்கைக்குளகப்படலொப்பன வாழ்வுளவேழாநா.......... ...*
ளொப்புறுகற்சுனை நற்கரையின்கணி லோதமுழக்கெனவே............*
மெய்ப்படுமொப்பில் விமானமணைந்தது வேதியனுற்றனனே ........*

(இ-ள்.) அப்படி ஆறுநாள்பரியந்தம் திரிந்துழல்கின்ற விபசித் துவுக்கேதுவோ முற்செனனத்தில் செய்துள்ள நன்மை மிகுந்த சிவ பூஜாபலத்தினால் தரித்திரனுக்குப் புதையல் அகப்பட்டது போல வாழ்வுபொருந்திய ஏழாவதுநாளில் உவமையில்லாத கற்சுனையினது கரையினிடத்தில் சமுத்திரகோஷம்போல் உண்மையான ஒப்பற்ற தெய்வ விமானமொன்று வந்தது அதைப் பிராமணனாகிய விபசித் துவானவன்கண்டு தரிசனஞ்செய்தான் என்றவாறு.................. (அ)

பாமரிமங்கையர் பாடப்பண்ணுட னுடக்கொடியாடசீ..... ......... ...*
சாமரைவீசத் தூசணிவீசத் தருவீசணிவீசத்........................*
தேமலர்வீசப் பூமணம்வீசத் திகழ்தருபுகழ்வீசச்..................*
காமர்கொடைக்க ணிழற்றத்துன்னிய கன்னியர்புடைசூழ ............*

(இ-ள்.) பல பாவினங்களையுங் கற்றறிந்த தேவஸ்திரிகளிற் சிலர் இனிதாகிய இசையோடும்பாடவும் சிலர் அப்பாடலுக்கேற்க நாட் டியஞ்செய்யவும் கொடிகளாடவும் இருபுறத்திலும் வெண்சாமரை கள் வீசவும் பாவாடை வீசிவரவும் தகுதியாகிய பல வாபரணங்கள் பிரகாசிக்கவும் தேனொழுகுகின்ற புஷ்பமாரி வருஷிக்கவும் அப்பு ஷ்பங்கள் பரிமளம் வீசவும் கீர்த்தி யெங்கும் நிறைந்து பிரகாசம்

வீசவும் அழகிய சந்திர வட்டக்குடைகள் நிழலைச் செய்யவும் மிகுந்த சம்பிரமத்தோடும் நெருங்கிய தேவஸ்திரிகள் பக்கத்தில்சூழ்ந்துநிற்கவும் என்றவாறு.... .... .... .... .... .... .... .... (கூ)

மந்தாகினிமுடி யங்கணனருளான் மகுடத்திருமுடியுஞ் ... ... *
சந்தார்பிறையுந் திரிலோசனமுந் தகுநூலணிதோளுங் ........ *
கொந்தாரிதழ்புமாலைக்களமுங் கோலச்சுடர்வடிவுங் ........ .... *
செந்தாமரைமுக னுங்கணநாதர் திருவுங்கண்டனனே ........ *

(இ-ள்.) கங்கையைத்தரித்த ஜடாபாரத்தையுடைய பரமசிவனது கிருபையினால் கிரீடந்தரித்த அழகிய முடியும் குளிர்ச்சிபொருந்திய மூன்றாம்பிறையும் மூன்றுகண்களும் தகுந்த முப்புரிநூல் தரித்த புயங்களும் வாசனை வீசுகின்ற கொன்றைமாலையும் விடம் பொருந்தியகண்டமும் அழகிய அக்கினி ஸ்வரூபமும் செந்தாமரைப் புஷ்பத்தையொத்த முகமுமாகிய இவற்றால் பிரகாசிக்கின்ற கணநாதருடைய எல்லாச்சிறப்பையுங்கண்டு தரிசித்தான்விபசித்து-எ-று-... (ம)

வேதியனைக்கணநாதனுமற்றுவிமானமிழிந்திடலு........ .... ........*
மாதவவேதியன் வந்துவணங்கி யிணங்கியுரைக்கின்றா....... ..... .....*
னேதுதவத்தை யியற்றினனும்மை யிறைஞ்சிவணங்குதலா .... .....*
லாதியுருத்திரர் போலவிருந்தீ ரறிகிலன்யானென்றான் ......... .... *

(இ-ள்.) கணநாதரானவர் விபசித்துவைக்கண்டு விமானத்தைவிட்டுப் பூமியி லிறங்கினபொழுது விபசித்துவும்வந்து கணநாதரைச் சாஷ்டாங்கமாக வணங்கி வணக்கமாகச் சொல்லுகின்றதாவது சுவாமீ அடியேன் உம்மைத்தரிசித்து வணங்கினதால் முற்பிறப்பில் என்னதவத்தைச் செய்தேனோ அல்லாமலும் நீர் முதல்வனாகிய பரமசிவனைப் போலுமிருக்கிறீர் உம்மை யடியேன் இன்னாரென்று அறிந்திலேன் யான் அறியும்படி திருவுளம்பற்றியருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்துநின்றான் என்றவாறு......... (மக)

குணமாமறையோய் கேண்மோநீமுன் குலவுதவஞ்செய்தாய்........*
பணமாரரவன் கணநாதனைநீ பணிகைக்கெளிதன்றே ........ ........*

# சஅ விதர்க்கணச் சருக்கம்.

மணமாரிதழிச்சடையார்விடையார்வளர்பழமலையார்தங் ......... ..... *
கண நாதனியான்முனமேசெய்திடுகதையைக்கேளென்றான் ..... ...*

(இ-ள்.) நல்ல குணத்தையுடைய வியசித்துவே கேட்பாயாக நீ முற்சனனத்தில் பிரகாசம்பொருந்திய தவத்தைச்செய்தாய் அந்ததபோபலனால் எமது தரிசனம் உனக்குக் கிடைத்தது படத்தையுடைய சர்ப்பாபரணத்தைத் தரித்த பரமசிவனுடைய கணங்களைத் தரிசனஞ்செய்து வணங்குவதெளிதல்ல வாசனையுள்ள கொன்றைமாலையையணிந்த ஜடாபாரத்தையும் இடப வாகனத்தையும் வளருகின்ற பழமலையையு முடையவராகிய பரமசிவனுடைய கண நாதன் தான் முற்செனனத்தில் நடந்த எனது சரித்திரத்தை நீகேளென்று சொல்லுகின்றார் கண நாதர் என்றவாறு..... ....... ......... ..... .. (௰௨)

பாஞ்சாலத்தேசந்தனில்விதையன்பட்டணசெட்டிமக..... ......... .. *
னீஞ்சாமரபினில்வந்தவிதர்க்கணனிறைமிடியதனாலே.... ...........*
தாஞ்சாகைக்கொர்மருந்துண்பாரிலர்தாமெனுமுறைகொண்டே... *
மாஞ்சேகூலிச்சுமைகள் சுமந்துவயிறுவளர்த்தனனே ............... .....*

(இ-ள்.) முற்பிறப்பில் நான் பாஞ்சால தேசத்தில் விதையமென்னும் பட்டணத்திலிருந்தவன் பட்டணசெட்டியாருடைய குமாரன் நிலைகடவாத தன வசியகுலத்திற்பிறந்த விதர்க்கண செட்டியென்று வழங்குகின்ற பெயரையுடையவன் நிறைந்ததரித்திரத்தினால் தான்சாகிறதற்கு ஒருமருந்தைத்தின்பவர்கள் உலகத்திலொருவருமில்லையென்கிற சொல்லைக்கொண்டு கூலிக்குச் சுமைகள் சுமந்து வருத்தப்பட்டு வயிறுவளர்த்துக்கொண்டிருந்தேன்-என்று..... ...(௰௩)

கொன்னேசிலநாள் சென்றதொர்வணிகன் கூலிச்சுமைகொண்டு... *
முன்னேசென்றேறன்முதுகுன்றினின் முதுமார்கழிதன்னி.......*
னன்னாளாதிரை நாடான்வந்தது நல்லோர்பலர்வந்தா... ..... . .......*
ரந்நாண்முனிவர்கள் யோகிகள்வந்தா ரவரைத்தரிசித்தேன்..... ... .. *

(இ-ள்.) அப்படி வியர்த்தமாகச் சிறிதுநாள் கழிந்தபின்பு ஒருநாள் ஒருவர்த்தகனுக்குக் கூலிக்குச் சுமையெடுத்துக் கொண்டு விரு

த்தாசலத்திற்குப் போனேன் அன்றைக்குமார்கழி மாதத் திருவாதிரையாகிய புண்ணியகாலமா யிருந்தது அதனால் அத்தலத்திற்கு வெகுபெரியோர்களும் முனீஸ்வரர்களும் யோகீஸ்வரர்களும் வந்தார்கள் அவர்களைக்கண்டு தரிசனஞ் செய்தேன் என்றவாறு.........(௰௬)

செட்டிசரக்கும் விற்றதெனக்குச் செப்பியபொருடந்தான் .........*
மட்டறவந்தவ ரெல்லாரும்போய் மணிமுத்தாநதியிற்.......... . . ...*
கட்டறமூழ்கினர் கண்டவர்மூழ்குதல் யானும்போய்மூழ்கி .... .... *
யிட்டனனீறு முருத்திரவக்கமு மெய்தினனாலயமே......... ... . ...*

(இ-ள்.) வர்த்தகனுடைய சரக்கும் விற்பனை யாகிவிட்டது அவன் எனக்குப் பேசிய கூலிப்பொருளையுங் கொடுத்துவிட்டான் அன்றைக்கு அளவிறந்தவர்களாகவந் திருந்த எல்லாரும் திருமணிமுத்தாநதியினிடத்திற்போய் தங்கள் தங்கள் மலபந்த நீங்கும்படி ஸ்நானஞ் செய்தார்கள் அவர்களெல்லாரும் போய்ஸ்நானஞ் செய்வதைக் கண்டு நானும் ஸ்நானஞ்செய்து விபூதியு மணிந்து உருத்திராக்ஷமுந்தரித்துக்கொண்டுசிவாலயத்திற்குப்போனேன் எ-று (௰௭)

பழமலைநாயகர் தம்மைவலஞ்செய்து பாதமலர்த்துணையைத்..... ...*
தொழுதுவணங்கித் துதியுமுரைத்துக் கூலிச்சிலபொருளை...... . . ...*
முழுதுமளித்தே யுணவையொழித்தனன் முட்டியநித்திரையுந் ...*
தழுவறவிட்டுப்பரமொழிவிட்டுத் தங்கினனங்கிரவில்....... ... ...*

(இ-ள்.) பழமலைநாதனைப் பிரதக்ஷணஞ்செய்து இரண்டு பாதாரவிந்தங்களையுந் தொழுது வணங்கித் தோத்திரமுஞ்செய்து என்னிடத்திருந்த அற்பமாகிய கூலிப்பொருள் முழுதுந் தானஞ்செய்து ஆகாரமில்லாமல் மேலிடுகின்ற நித்திரையும் சற்றும் பொருந்தாமல் ஒழித்து அன்னியப் பிரசங்கமும் விட்டு அன்று இராத்திரியில் அவ்விடத்திலிருந்தேன் என்றவாறு ... ............... ...................(௰௮)

இரவினின்முழுதுஞ் சிவனொடுசத்தி யெழுந்தருணேர்திருநாள்..... ...*
பரவிமதித்துப் பத்தர்களர்ச்சனை பரவப்புலர்காலை ............ ........*
விரவநதக்கணின் மூழ்கிச்சிவனடி மீளவும்வந்துதொழா....... . *
வுரமுளபிச்சையி னிச்சயபாரணை முண்டுமகிழ்ந்தனனே....... ....*

(௰௯)

## ௫௰ விதர்க்கணச்சருக்கம்.

(இ-ள்.) இராத்திரி முழுமையும் பழமலைநாதரும் பெரிய நாயகியம்மையாரும் எழுந்தருளிவருகின்ற மஹோச்சவ விபவத்தைக்கண்டு வணங்கித் தோத்திரஞ்செய்து அடியார்களெல்லாரும் அர்ச்சனை செய்ய விடியற்காலத்தில் திருமணிமுத்தாற்றினிடத்திற் போய் ஸ்நானஞ்செய்யும் பொழுது நானும் ஸ்நானஞ்செய்து மறுபடியும் வந்து பழமலை நாதருடைய திருவடிகளில் வணங்கி ஒருசந்நியாசிகளுடைய மனையில் பிச்சைவாங்கி உண்மையாகிய பாரணஞ்செய்து மனமகிழ்ச்சியடைந்தேன் என்றவாறு.....................(௯௭)

மீண்டும்பாஞ்சாலத்தேசந்தனில் விதையப்பதியக்கே .. ......... .....*
றூண்டுஞ்சிலநாட்சென்றதுவயதினவத்தைமிகுத்திடலுந்.............*
தீண்டநமன்படர்வந்தனர்வருமுன்சிவகணம்வந்தனபின்......... ...*
ருண்டவனீடுமைமைந்தர்கணந்தித்தலைவரும்வந்தனரோ.............*

(இ-ள்.) மறுபடியும் பாஞ்சாலதேசத்தில் விதையமென்கிற பட்டணத்தில் வந்திருந்தேன் அவ்விடத்திற் பின்னுஞ்சில காலஞ்சென்றபின்பு எனக்கு வயோதிகாவஸ்தை அதிகரித்து மரணகால மேலிடும்பொழுது என்னைப்பாசத்தினாற் கட்டுகிறதற்கு யமதூதர்கள் வந்தார்கள் அவர்கள் வருமுன்னமே சிவகணங்கள் வந்து நிறைந்தன பின்பு நிருத்தானந்தராகிய பழமலை நாதரும் பெரியநாயகியம்மையாரும் சுப்பிரமணியரும் விநாயகமூர்த்தியும் நந்திகேஸ்வரரும் வந்தார்கள் என்றவாறு ........ .. ........ ... ......... ..... .....(௯௮)

கண்டன்ன்பண்டைக்களைகடெளிந்ததுகவுரிதிருத்தோண்மே........*
லண்டர்களண்டன்கைத்தலம்வைத்துநகைத்தருள்செய்கின்றான் ....*
பண்டைவிதர்க்கபயத்தையொழித்திடுபற்றுளசுற்றமியாந் .........*
தண்டமுனக்கிலையென்றனதனைத்தரிசனமாயினனே ................ ....*

(இ-ள்.) அப்படி வந்தவர்களைத் தரிசனஞ் செய்த பொழுதே எனக்கு அநாதியாயுள்ள ஜநன மரணங்களைகளெல்லாந் தெளிந்துவிட்டது தேவதேவனாகிய பரமசிவன் உமையவளுடைய அழகிய திருத்தோளின்மேல் தம்முடைய திருக்கைகளை வைத்து புன்முறுவல் செய்து கிருபைகூர்ந்து ஓய் விதர்க்கணே நீ முன்னுள்ள பயங்களையெல்லாம் விட்டுவிடு உன்னிடத்தில் அன்புவைத் திருக்கின்றவுறவி

ணர் நாமே ஆதலால் உனக்கு யமதெண்டனை யொன்றுமில்லையென்
றுதிருவுளம்பற்றியருளினர் அந்தத்திருவாக்கையுங்கேட்டறிந்தேன்(

உத்தரிகத்துகிலத்தால்விசினளுமையவண்முதுகுன்றன்..... ..... .... *
சத்தியவுபதேசத்தையுணாத்தனனத்துணைசத்தியமாய்....... .... ... .. *
வித்தகமெய்யுமுருத்திரனாகிவிமானமுமுன்வரலாற்.... ...... ........*
சுத்தவிருத்தகிரிக்கிறைதாள்கடுதித்துவணங்கினனே ............ ..... *

(இ-ள்.) மாதாவாகிய உமையவள் தன்னுடைய உத்தரிக வஸ்தி ரத்திலல் என்னுடைய ஜனனவிடாய் நீங்கும்படி விசினள் பிதாவாகிய பரமசிவன் உண்மை ஞான உபதேசத்தை வலச்செவியி னிடமாக உபதேசித்தருளினர் அப்பொழுது உண்மையாக எனது ஞான தேகமும் சிவசொரூபமாகித் தெய்வவிமானமும் எதிரே வந்தபடியினல் பரிசுத்தமாகிய பழமலைநாதருடைய திருவடிகளைத் தோத்திரஞ் செய்து வணங்கினேன் என்றவாறு......... ......... . ..... ......... (உ0)

வணங்கியெழுந்து துதிக்குமுன்மங்கைமணாளன்மறைந்திடலு.... *
மிணங்கிவணங்கிவிமானமுமேறினனெவ்வுலகுந்திரிவே............ *
னணங்குகள்சூழவிமானமதேறியணைந்திடுவார்களெலாங்...... ..... .. *
குணங்களினின்றுபணிந்தவர்மாமுதுகுன்றைமிதித்தயரோ..... .. ...*

(இ-ள்.) அப்படி தெண்டனிட்டெழுந்து தோத்திரஞ் செய்கின்றபொழுது உமையவள் மணாளனாகிய பரமசிவன் மறைந்தருளினார் அப்பொழுது நான் தாழ்ந்துவணங்கி தெய்வவிமானத்திலேறி அன்றுமுதல் எந்தவுலகத்திலுஞ் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறேன் அல்லாமலும் தெய்வகன்னிகைகள் சூழ்ந்துவர விமானத்திலேறி வருகின்றவர்களெல்லாரும் சத்துவகுணத்தில் நின்று பழமலைநாதனை வணங்கினவர்களும் பெருமைதங்கிய விருத்தகிரி ஸ்தலத்தை மிதித்தவர்களுமாகும் என்றவாறு ....... ........................................ (உக)

குன்றைமிதித்தவரிப்படியானற்குலவியமனதொன்றுப்ச்........... .....*
மசென்றவனொப்படியாகார்தினகார்தெரிசனபக்கமெலா .......... *
மசன்றவிமானத்துடன்வருவார்முதுமலையைமிதித்தவர்கா.. .... .... *
ணன்றுடனீயுஞ்சென்றிடின்முதுகிரிநாதனையந்திடுமே.......... ... *

## ௫௨ விதர்க்கணச் சருக்கம்.

(இ-ள்) பழமலையை மிதித்தவர்கள் இவ்வகைப்பட்ட பலனைப் பெற்றால் நாலுவிதமாகத் திரிகின்ற மனதொருமித்து அத்தலத்திற் சென்று வணங்கின பேர்கள் எவ்வகைப்பட்ட பலனையடைய மாட்டார்கள் பழமலையை மிதித்தபேர்கள் சூரிய கிரணந் தோன்றுகின்ற இடங்களிலெல்லாம் சிறந்த விமானத்திலேறித்திரிவார்கள் ஆதலால் நீயும் அந்தத்தலத்திற்கு நன்மையாகப் போவாயாகில் உன்னையும் பழமலைநாதர் ரக்ஷித்தருளுவார் என்றவாறு.........................(௨௨)

மறைகளுறுதுமலைவந்துவரம்பெற்றாரையளக்கிலதா........ ....... ......*
மிறைவனுமிறைவியுமார்வருவாரொன்றெதிரேநிற்கின்றார் .... .... ... *
முறைமையினீயும்வழிபடின்முதுகிரிநாதன்றிருவாணை...... ......*
நிறையருள்புரிகுவனென்றுமறைந்தனர்நின்றவர்கதைசொல்வாம்..*

(இ-ள்.) நான்குவேதங்களும் பழமலையில்வந்து வரம்பெற்றவர்களை அளவிட்டுச் சொல்லமாட்டாது அன்றியும் எவர்கள் வருவார்களென்று பரமசிவனும் உமையவளும் எதிர்நோக்கி நிற்கின்றார்கள் ஆகையால் நீயும் அத்தலத்திற்குச் சென்று முறையாக வழிபட்டால் சிவாக்கினைப்படிக்கு பழமலைநாயகர் பூரணகடாக்ஷம்வைத்து உன்னை ரக்ஷித்தருளுவாரென்று சொல்லிக் கணநாதர் மறைந்து விட்டார் இப்பால் அதைக்கேட்டுநின்ற விபசித்துமுனிவருடைய சரித்திரத்தைச் சொல்லுகின்றோம் என்றவாறு ........ ........ ....... ..........(௨௩)

விதர்க்கணச்சருக்கமுற்றுப்பெற்றது.

ஆக-சருக்கம்(௪)க்கு-திருவிருத்தம்(௱௨௪)



திருச்சிற்றம்பலம்.

ஐந்தாவது

# விபசித்துச்சருக்கம்.

(வேறு.)

தவசித்தன் கணநாதன்றான் மறைந்ததிசைநோக்கி ........................ *
விபசித்துபணிந்தேத்தி மெய்மறந்துபொய்மறந்து. ......... ..... *
சிவசித்த பெற்றேனென் செல்வமேசெல்வமென ................ *
நவசித்தமுளதாகி நைந்துபலசிந்திப்பான் ........................ *

(இ-ள்.) தபசுநிறைந்த இருதயத்தையுடைய கணநாதர் மறைந்தருளிய திசையைக் குறித்து விபசித்துமுனிவர் தெண்டனிட்டுத் தோத்திரஞ்செய்து சரீரவாசனையையும் மித்தையாகிய பிரபஞ்சவாசனையையுமறந்து சிவசிந்தனையைப் பெற்றேனுதலால் எனக்குக்கிடைத்த செல்வமே செல்வமென்று கருதி மனமுருகிப் புதிதான ஞான சிந்தையையுடையவராய்ப் பலவாக நினைக்கத்தொடங்கினார்.எ-று(க)

தாயிழந்துதமரிழந்து தாரமிழந்தரும்பசியாற் ...................... *
பேயனுய்த்தவமுடலைப் பித்தனுய்த்திரிவேனக்கு ...................... *
மேயசிவன்வெளிப்படுதல் வித்தையோசத்தியமோ ...................... *
மாயமோகனமோவாவென் மனத்தாலுநினைக்கரிதால் ...................... *

(இ-ள்.) தாயுமில்லாமல் - சுற்றமுமில்லாமல்-மனையாளுமில்லாமல் - பொறுத்தற்கரியபசியினுல் பேய்போலலைந்து யாதொரு தவத்தையுஞ் செய்யாத வெறிகொண்டு திரிகின்ற வெனக்கு சர்வவியாபியாகிய பரமசிவன் வெளிப்பட்டது இந்திரஜாலவித்தையா உண்மையோ மாய்கைதானோ மனேகற்பிதமான சொப்பனமோ அது இன்னபடியென் றென்னுடைய மனத்தினுலும் நினைத்தற்கரியதாயிருக்கின்றது என்றவாறு ........................................ (உ)

அரியதவமுன்செய்தா லருட்பலன்கள்வருங்காலந் ...................... *
தெரிவரிதென்றறிவுடையோர் செப்புவரப்படிதானே ...................... *
பரிமுழக்கமுகின்முழக்கம் பாவையர்கண்மனஞ்செல்வ ...................... *
முரியமழைதரன்மறுத்த லொருவர்க்குந்தெரிவரிதால். ...................... *

(இ-ள்.) இன்னவேளையில் குதிரை அனுமானிக்கும், இன்னவே

ளையில் மேலோங்குமாறும், மாதர்மனம் இத்தன்மைத்து. ஒருவனுக்குச் செல்வம் இன்னகாலத்திற் கிடைக்கும், அது இன்னகாலத்தில் அவனை விட்டு நீங்கும், உணவளித்தற்குரிய மழை இன்னகாலத்திற் பெய்யும் இன்னகாலத்திற் பெய்யாதொழியுமென்று யாவர்க்கும் அறியக்கூடாததும்போல முற்சென்மத்தில் அரியதவத்தைச் செய்திருந்தால் அந்த அரியதவத்தின்பலன்கள் அனுபவிக்கவருங்காலம் இன்னதென்று ஒருவராலும் அறியக்கூடாதென்று சான்றோர் சொல்லுவர் அப்படிதான் எமக்கு இந்தநன்மை கிடைத்ததோ-என்றவாறு ... (௫)

இப்படிமுற்றவப்பலனோ விவனைக் கண்டோமெனவே ........................*
செப்பியபின் விப்பிரனுந் தெய்வசரசில் மூழ்கித் ...................*
தப்பிலாத் தொழில்முடித்துத் தளர்ந்திருந்த வச்சுனையி .... .... ....*
லப்பொழுத் தவமானத்தி லமரமடவாரணைந்தார் ....... .......... ....*

( -ள்.) நாம் முற்பிறப்பிற்செய்த தபோபலத்தினால் இந்தக்கணநாதருடைய தரிசனம் நமக்குக்கிடைத்ததென்று இப்படி பலவிதமாகநினைந்தபின்பு பிராமணனாகிய விபசித்தனும் அவ்விடத்துள்ள தெய்வீகவாவியாகிய சுனையினிடத்தில் ஸ்நானஞ்செய்து குறைவற்ற அனுஷ்டானக் கிரியைகளை முடித்துக்கொண்டு மனத்தளர்ச்சியடைந்திருந்தார் அப்பொழுது அந்தச்சுனையினிடத்தில் ஸ்நானஞ்செய்வதற்குச் சில தெய்வப்பெண்கள் விமானத்துமேலேறிக்கொண்டு வந்தார்கள் என்றவாறு ............................................(௬)

செந்துவர்வாய்வெண்டரளச் சிறுமுறுவற்பெருமதியந் ...............*
தந்தமுகந்தனஞ்சுமந்து தளருமிடைவளரல்கு ......... ..........*
லந்தளிர்மெய்நீலவிழி யன்னநடைகனமொழி .......... ....*
யிந்தவியன்மடவார்க ளெழிலின்மனுகமொடும்போலும் .............*

(இ-ள்.) சிவந்த பவளம்போன்ற வாயும், வெள்ளியமுத்துகள் போன்ற சிறியதந்தபந்தியும், பூரணச்சந்திரனைப்போன்ற முகமும், ஸ்தனபாரத்தைச் சுமந்து தளர்கின்ற இடையும், நேர்க்குவாருடைய அயாவுக்கொப்ப வளர்கின்ற நிதம்பமும், அழகிய மாந்தளிர்போன்ற மேனியும், நீலோற்பலம்போன்ற கண்களும், அன்னநடைபோன்ற நடையும், கரும்பின்ரசம்போன்ற வசனமும் ஆகிய இவ்வுலகப்

ட்ட சௌந்தரியத்தையுடைய தெய்வப்பெண்கள் அழகிய மின்னற் கொடியைப்போலப் பிரகாசித்தார்கள் என்றவாறு ... ......... (௫)

தோன்றினார்பணிகழற்றிச் சுனையாடிக்கரையேறி ...... .... ......... *
யான்றதுகிலுடுத்தணிகளணிந்தார்களவ்வளவின் .. ................. ... *
மூன்றுவிழியார்தோழன் றங்கையவண்மூக்கணி .. ............ .... *
யென்றவரியக்கண்டிலதா லியாவர்களுந்துயருழந்தார் .. .......... *

(இ-ள்.) அப்படித் தோன்றிய பெண்கள் ஆபரணங்களைக்கழற்றி வைத்துச் சுனையினிடத்தில் ஸ்நானஞ்செய்து கரைமேல்வந்து யாக்ஷிமைப்பட்ட வேறுவஸ்திரத்தையுடுத்து ஆபரணங்களையுந் தரித்துக் கொண்டார்கள் அப்பொழுது திரிநேத்ரத்தையுடைய பரமசிவனுடைய சினேகனாகிய குபேரனுடைய தங்கையினது மூக்குத்தியொன்று எடுத்துத் தரிக்கப்பார்க்கையில் அது காணாமற்போனபடியினால் அந்தப்பெண்களெல்லாருந் துயரமடைந்தார்களென்றவாறு. (௬)

அலைவிலாவமரரெலாமளகேசன்றனக்களித்த ........................ *
விலையிலாமாணிக்கம் வேய்ந்தமூக்கணியென்னச் ...... ..... ........ ... *
சிலைநுதலாடிகைத்திருப்பச் சிச்சிலிவந்ததனையெடுத் ... ........... *
துலைவிலாமரத்திலிருந் துணவென்னக்கொத்துதலும் ............ *

(இ-ள்.) தன் தமையனாகிய குபேரனுக்கு என்றுந் திரமாயிருக்கின்ற சகலதேவர்களுங் கூடிக்கொடுத்த விலையில்லாதமணிகட்பதித்துள்ள மூக்காபரணத்தை யிழந்துவிட்டோமேயென்று வில்லையொத்தபுருவத்தையுடைய அந்தக குபேரனுடைய தங்கையானவள் மனவருத்தப்பட்டு திகைத்திருக்கையில் ஒருசிச்சிலிக்குருவியானதுவந்து அந்தமூக்குத்தியை மூக்கினாற்கவ்வியெடுத்துச் சென்று உயர்ந்தமரத்தின்மேல் வைத்துக்கொண்டு தான் புசிக்கும் உணவென்று நினைந்து அதனை மூக்கினாற்கொத்தவும் என்றவாறு .............. ...... (௭)

மீனெரிந்துவிழுவதுபோல் விபசித்தின்மடிமீதே ..... ... ................... *
யானபொழுதவனாவிழு வவனங்கியெழுந்திருந்து .... ........ .... ......*
தானதனைக்கைக்கொண்டான் றத்தையர்களிதறியார் ... ..... .....*
தேனமருமொழியாலே சிலசபதஞ்செய்கின்றார் .... ..... ............... *

(இ-ள்.) அந்த மூக்குத்தியானது தவறி நக்ஷத்திரமெரிந்துவிழு

வதுபோல் விபசித்துமுனிவருடைய மடிமேல்வந்துவிழுந்தது அது கண்டு விபசித்துமுனிவர் நடுக்கங்கொண்டெழுந்து அதைக் கையில் வைத்துககொண்டிருந்தார் அந்தச் செய்தியைக் கிளிமொழிபோல வசனிக்கின்ற அந்தத் தெய்வப்பெண்கள் தெரியாதவர்களாகத்தேன் போலு மதுரம்பொருந்திய வசனத்தினாற் குபேரனுடைய தங்கை யைப்பார்த்து சிலசபதவார்த்தைகளைச்சொல்லுகின்றார்கள்-எ-று.(அ)

மின்கிளரும்பணிகரக்கில் விரதமிழந்தான்பதிதன்.......... ... .... .. *
பொன்கள் வன்மறையிழந்தான் பூசுரருக்குரைவழங்கிப்.... .... ..... *
பின்புதவான்சிவதலத்திற் பெரும்பாவிபூசிக்கு... ... .. ......... ... *
முன்புண்பான்குருநிந்தை மொழிவான் றன்னரகுறுவோம்.... .. .....*

(இ-ள்) மின்னலைப்போற் பிரகாசிக்கின்ற உன்னுடைய ஆபரண த்தை நாங்களபகரித்தோமேயாகில் விரதந்தவறினவன்-மகாபாதகஞ் செய்தவன்-பொன்னைத்திருடினவன் - வேதவொழுக்கத்தைக் கைவி ட்டவன்-பிராமணர்களுக்கு ஒன்றைக் கொடுக்கிறேனென்று முன் னே வாக்குதத்தம்பண்ணிப் பின்பு கொடாதவன் - சிவஸ்தலத்தில் பெரிய பாதகங்களைச்செய்தவன் - சிவபூஜை செய்வதற்கு முன் புசிக் கிறவன் - சற்குருவைத் தூஷிக்கிறவன் - ஆகிய இவர்கள் எந்தநரகத் தையனுபவிப்பார்களோ அதனை யாங்களு மனுபவிக்கக் கடவோம் என்றவாறு ........................................................ (கூ)

மணவாளன்பசிக்குதவாள் வஞ்சித்தாண்முன்புண்பாள் ............... *
குணமாகாளெதிர்சொல்வாள் குலம்பழித்தாள்வேறொருவற்..... .... *
புணர்வாடன் கணவனைத்தன் புத்திரனைக்கொலைசெய்தா ...............*
ட்லவாநோய்செய்தாடன் றனிநரகம்புகக்கடவோம்..... .. ..... .... *

(இ-ள்.) புருஷனுடையபசியறிந்து புசிப்புதவாதவள்-புருஷனை வஞ்சனைசெய்தவள் - புருஷனுக்கு முன்னே புசிப்பவள் - புருஷன் குணத்திற்கிசைந்த குணமில்லாதவள் - புருஷன் சொல்லுக்கு எதிர் மொழி சொல்லுகின்றவள் - குலத்துக்குப் பழிவருப்படி நடக்கின்ற வள் - வேறொரு புருஷனைக் கூடுகின்றவள் - தன் புருஷனையும் பிள்ளைகளையுங் கொன்றவள் - புருஷனுக்கு நாபிமுதலானவைகளை யூட்டி எப்பொழுதும் நீங்காத வியாதியைச் செய்தவள் - ஆகிய இவர்கள்

அந்தநரகத்தை யனுபவிப்பார்களோ அதனை யாங்களு மனுபவிக்கக் கடவோம் என்றவாறு ............ (௰)

என்றுமுனையுடனே பின்னு மிசைத்தார்களது கேட்டதற் ............ *
றொன்றுடையபயன்சொல்லுஞ் சிவனைக்கருதுமனன் ............ *
றன்னவருமுனிசெய்தா னத்துணையிலந்தகனன்றோ ............ *
மென்னதுதான்றுயர்கணீரிதுவோவென்றதுங்கொடுத்தான் ...... *

(இ-ள்.) என்றுசொல்லப்பட்ட சபதத்தோடும் இன்னம்மேலான சத்தியவசனங்களையுந் தெய்வப்பெண்கள் சொன்னார்கள். அதைக்கேட்டுக் குபேரனது தங்கையானவள் இந்த மூக்குத்தியைக் கொடுத்தவர்களுக்கு எனது ஆபரணங்கள் முழுவதும் சிவபூஜைக்குக் கொடுப்பேனென்று சொன்னாள் அந்தச்சமயத்தில் அவர்கள் பேசிக்கொள்வதைக் கேட்டு விபசித்துமுனிவர் அவர்களிடத்திற்போய் நீங்கள் ஏன் வியசனப்படுகின்றீர்கள் உங்களாபரணமிதுதானோவென்று அந்த மூக்குத்தியைக் கொடுத்தார் என்றவாறு. ........ (௰௧)

மட்டாருங்குழலாளு மனங்களித்துவாங்கித்தனுங் ............ *
கிட்டாதுகிட்டுதல்போற் கெண்டையங்கண்களிலொத்தி ........ *
பெட்டாதவெண்ணமெலாம் பெண்ணணிபெற்றயிருந்துயரன் ........ *
முட்டாமறந்தவனீ முன்னவனாதுணைவியென்றாள் ............ *

(இ-ள்.) தேனிறைந்த புஷ்பமாலையணிந்த அளகபாரத்தையுடையவளாகிய குபேரன் தங்கையாரும் மனமகிழ்ந்து அந்த மூக்குத்தியை இரண்டுகைகளாலும் வாங்கினவளாயிலகிடையாதது கிடைத்ததுபோல-கெண்டையையொத்த இரண்டுகண்களிலுமொத்திகொண்டு எமது மிகுந்தவிசனத்தினால் எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணிவருந்தும்படி அங்ஙனம் வாராதபடி இந்த மூக்குத்தியைக் கொடுத்த நீயே எனக்குத் தமையனாவாயென்று சொன்னாள் என்றவாறு. (௰௨)

அத்தனைநீயிப்பந்தநகரணையப்போம்பதியேது ............ *
விர்த்தனதத்தேசவந்தா யிளைத்துமுகங்குறைவோர்வாய் ........ *
நொந்திருந்தென்னுனக்கு நுண்டணிதான்வந்ததெவன் ........ *
மந்ததுவெவ்மொழியென்றாள் சதுமறையோன்மொழிகின்றான் *

(இ-ள்.) ஓய் பிராமணா நீ எந்தத்தேசத்திலிருப்பது இப்போது

# ௫அ விபசித்துச்சருக்கம்.

எந்தத்தலத்தை நாடிப்போகின்றாய் இந்த வனத்தில் ஏன் வந்தாய் என்ன நிமித்தம் சரீரமிளைத்து முகத்திற் குறுவேர்வைகொண்டு மனம்வருந்தியிருக்கின்றாய் உன்னிடத்தில் யாவராலும் விலைமதிக்கக் கூடாத இந்த மூக்குத்தி எப்படிவந்தது இதை என்னிடத்திற் கொண்டுவந்து கொடுத்தவிதமென்ன விவரமாகச்சொல்லுமென்று சொன்னாள் அதுகேட்டு விபசித்துமுனிவர் சொல்லுகின்றார் எ-று. (௰௩)

பிறைநுதலாய்கோசலதேசத்தின்மணிபிங்கலையூர்க் ..................*
குறைவில்லனென்னுடைய குலத்தாதைதன்னுடனே ............*
முறைமையுளதாயிறந்தாண் மூத்தவர்களறுவருளார் ...............*
திறையுடனேயிறந்தார்க ணேரிழையாருடனிறந்தார் ...... .... ......*

(இ-ள்.) மூன்றாம்பிறையையொத்த நெற்றியையுடைய ஓய் அம்மா நான் கோசலதேசத்தில் மணிபிங்கலையென்னும் பட்டணத்தில் குறைவில்லாத செல்வத்தோடுமிருந்தேன் அப்படியிருக்கும்போது என்னுடைய சிரேஷ்டமாகிய பிதாவினோடு நல்லொழுக்கமுள்ள தாயாரிறந்துவிட்டாள் எனக்கு மூத்தவர்களாறுபேரிருந்தார்கள் அவர்களும் செல்வத்துடனிருந்து இறந்துவிட்டார்கள் அவர்கள் மனைவியருங்கூடவேயிறந்துபோனார்கள் என்றவாறு.......... .. ..... . (௰௪)

மனையவளுநானுமாய் மனையிலிருந்தோஞ்சிலநாள்.. ....... .......... *
புனையிழையும் பிச்சைக்குப் புகுந்துழன்றுகிடையாம ..... ..........*
லினைவகையாலிறந்தாளிப்பொழுதொருவனிறவாம .... ... . . ..............*
னினைவரியபேய்போல நிற்கின்றேனலைகுலைந்து .........................*

(இ-ள்.) பின்பு சிறிதுகாலம் என்மனையாளும் நானும் இல்வாழ்க்கையிலிருந்தோம் அப்படியிருந்தகாலத்தில் தரித்திரமேலிட்டு அதனால் என்பெண்சாதியும் வீடுகள்தோறும் பிச்சைக்குப் போயலைந்து பிச்சைகிடையாமல் இவ்வகைத்துன்பத்தினாலிறந்துபோனாள் பின்பு நானொருவனுஞ்சாகாமல் நிலைகெட்டு நினைத்தற்கரிய பேய்போலலையாநிற்கின்றேன் என்றவாறு .......................... .... (௰௫)

குணத்தினாலழகாலென் குணங்களறிந்தினிதாட்டும் ......................*
வணக்கினாலறிவாலென் மனையாளுக்கிணைகாணேன் .....................*
பிணக்கற்றநாயிருந்தேன் பேய்கண்மிருகங்களுக்கு ............. ....*
பிணக்கமொருபெண்ணுளதாலென்போலும்பாவிகளார் .........*

(இ-ள்.) குணத்தினாலும் அழகினாலும் என்குணங்களைத்தெரிந்து இனிமையாக வணங்குகின்ற வணக்கத்தினாலும் அறிவினாலும் என் மனையாளுக்குச்சமானம் இந்தவுலகத்தில் ஒருவரையுங்கண்டறியே ன்-நான் இப்போது நடைப்பிணத்துக்கொப்பாயினேனென்றுமெய்ச்சரு க்க யிருகங்களுக்காவது கூட்டுறவிற்கு ஒவ்வொருபெண் இருக்கின் றது அதுதானுமில்லாத என்னையொத்தபாவிகள் இந்தவுலகத்திலெ வர்களிருக்கின்றார்கள்-என்றவாறு ........................ (௰௭)

சம்பத்திற்கருத்துமில்லென்றனிமுத்தியடைவனென் ....... *
சப்பத்தொலொன்றுமில்லென்றவாமுதுகுன்றுண்டதிலெ ....... *
சப்பத்திரசெல்றக்காறசகலமுமுண்டாமெப்ருன் ....... *
சப்பத்துற்கணநாதன்றனிமுதுகுன்றத்கிலனே ....... *

(இ-ள்,) இனி எவ்வகைப்பட்ட சம்பத்திலுமிச்சையில்லை தனிமை யாகிய மோக்ஷசம்பத்தைப் பெறவேண்டி- நினைக்கின்ற சம்பத்தை யல்லாமல் வேறொருகருத்துமில்லை-அதுவல்லாமலும ஒப்பற்றவிரு த்தகிரியென்று ஒன்றுண்டு - அத்தலத்தில் சந்தோஷசம்பத்தோடு போய்த்தரிசித்தவுடன் சகலசித்துகளுமுண்டாகுமென்று ஞானந் தசம்பத்தையுடைய கணநாதர் திருவுளம் பற்றியருளினார் - ஆதலால் ஒப்பற்றுவிளங்குகின்ற பழமலையையின்னமும் அறிந்திலேன்-என்றவாறு

படுத்திருந்தேன்மரத்தின்கீழ்ப்பணிவிழுந்ததென்மடியி ....... *
லெடுத்துமக்குத்தந்தேன்மற்றிவ்வளவேயெனச்சொன்னா ....... *
னடுத்துநின்றமங்கையருமளகேசன்றங்கையரும் ....... *
தடுத்துவாயாமொழியினையுந்தளர்வினையுங்கண்டிரங்கி ....... *

(இ-ள்,) ஒருவிருக்ஷத்தினிழலின் கீழ்ப் படுத்துக்கொண்டிருந்தே ன் அப்பொழுது இந்தமுக்குத்தி என்மடிமேல்வந்துவிழுந்தது- அதை எடுத்துவந்து உங்களிடத்திற்கொடுத்தேன் இவ்வளவேயல்லா மல் வேறே ஒன்றுமில்லையென்று விபசித்து முனிவர்சொன்னார்- அ துகேட்டு சமீபத்திலிருந்த தெய்வப்பெண்களும் குபேரனுடைய தங் கையாரும் அவரது மறுத்துச்சொல்லாதவசனத்தையுஞ் சரீரத்தளர் வையும்பார்த்து மனத்தில் இரக்கங்கொண்டு-என்றவாறு ...... (௰௮)

தெய்வமுனியிவனளவிற்கிவன்விளையாட்டெனத்தெளிந்து ....... *
பொய்கைவாயிலனுண்ணப்பொதிசோறுபரிந்தளித்துத் ....... *

யாகக்குறைவைப் பூரணமாக முடித்துக்கொள்வாய் அத்தவமுடிவில் அஞ்ஞானவிடுதியுண்டாகி உன்னிடத்திற் பரமசிவமும் வெளியாகுமென்று அநுக்கிரகமுண்டானபடியால் அதுகேட்டு விபசித்துமுனிவர் மனங்குளிர்ந்து வணங்கி அங்கிருந்த வன்னிவிருக்ஷமே பெட்டியாக அதனிடத்து அவ்வாபரணங்களை வைத்துவிட்டு - எ - று.

அன்புற்றவுரோமசரைப்பணியா ........................*
முன்புற்றருள்வாளின் மொழிப்புகலா ................*
வின்புற்றிவனுக்கிவையென்கொலெனுப் ...............*
பின்புற்றபெருந்தவமெய்ந்றனமே .......................*

(இ-ள்-) உரோமசமுனிவரிடத்திற்குச்சென்று அன்புடன்வணங்கி பரமசிவனருளினாலுண்டான ஆசீர்வாக்கியத்தைச்சொன்னார் - அதை அத்தவரோமசமுனிவர்கேட்டு ஆனந்தித்து இந்த விபசித்துவுக்கு இப்படிப்பட்ட தெய்வானுகூலம் எதினாலுண்டாயிற்றென்று ஆலோசித்துப் பின்பு முற்சனனங்களிற்செய்துள்ள தவப்பலமென றுணர்ந்தருளி-என்றவாறு ........................(௨௬)

உண்மைச்சிவநல்லுபதேசமெலாந் .........................*
திண்மைத்தவரோமசர்செப்புதலால் .......................*
வண்மைத்தவர்கேட்டுமனங்குளிரா .......................*
வன்மைத்தவமேவவணைந்தனனே .........................*

(இ-ள்) திடப்பொருந்திய பரஞானத்தையுடைய ரோமசமுனிவர் உண்மையாகிய நன்மைமிகுந்த சிவஞான உபதேசமுழுமையும் அநுக்கிரகஞ்செய்தலால் வளப்பொருந்திய தவத்தையுடைய விபசித்துமுனிவர் அதுகேட்டு மனங்குளிர்ந்து அந்த ரோமசமுனிவரது சமீபத்திற்றானேயிருந்து நிஷ்டைசெய்யத்தொடங்கி-எ-று .....(௨௭)

(வேறு.)

நலங்கொண்டநதிமூழ்கிநல்லமுதகுன்றார்தமை ........*
வலங்கொண்டுபணிந்தேத்தவனசமலராற்பூசித் ..........*
திலங்கமுதுசெயப்பண்ணியெட்டயிலத்தாமனைய்யா ... *
லலங்கவிளக்கேற்றியெழுத்தைந்தையுஞ்செபஞ்செய்து

(இ-ள்) விபசித்துமுனிவர் நன்மைபொருந்திய திருமணிமுத்தாநதியில் ஸ்நானஞ்செய்து நலமிகுந்த விருத்தாசலேஸ்வரரைப் பிரதக்ஷணஞ்செய்து வணங்கித் துதித்து தாமரைப்புஷ்பங்களா லர்ச்ச

லைசெய்து பிரகாசிக்கின்ற திருவமுது நிவேதித்து எள்ளினெய்யினு லும் பசுவினெய்யினலுந்தி விளக்குகள் எங்குமப்பிரகாசிக்க ஏற்றிப் பஞ்சாக்ஷரஜெபஞ்செய்து-என்றவாறு ...... ... ........ .....(௨௮)

துறவுநிலைகூடிக்குருசேவைதலையாமன் ........*
மறமிலாச்சருகுசலம்வாயுமேயுணவாகி ........... ......*
நிறமுளபஞ்சாக்கினியினிலத்தொருவிரலேய........ *
வறவுடையதவமுயங்கிப்பொறியைந்துமுள்ளடக்கி ...... ......*

(இ-ள்.) துறவுநிலையைப்பெற்று பரமாசாரியருடைய தரிசன நீங்காமலிருந்து குற்றமற்ற-சருகு-ஜலம்-வாயு-இவைகளைபக்ஷணமாகக்கொண்டு ஒளிபொருந்திய பஞ்சாக்கினிமத்தியில பூமியிற்பெருவிரலையாதாரமாக ஊன்றிக்கொண்டு ஆதியிலேயமைக்கிய மகாதவத்தில திகரித்துப் பஞ்சேந்திரியங்களையும் அகமுகத்திலாமையைப்போலொடுக்கி-என்றவாறு..... ... ..... .. ....... ... .... .. .......... ... .... (௨௯)

ஆகமதல்கலைநான்குமழிவிலாக்குணமூன்றும் ... .....*
போகபுலனைந்தும்பொறியைந்துநாற்கரணம்...... *
வேகவிகாரம்பூதவிகாரங்களிவையாறு .... ................. ..*
யேகமாய்ச்சிவனுடனேரேசகவாயுவைவிட்டு .. ........*

(இ-ள்.) இருதயஸ்தானத்திலிருந்து மன்மதனால்விடப்பட்ட நீலமல்லாத நான்குபாணமும் கெடாத முக்குணங்களும போகத்திற்குக் காரணமாகிய பஞ்சவிஷயங்களும் பஞ்சேந்திரியங்களும் வேகமாகிய அந்தக்கரணவிகாரமும்பஞ்சபூதவிகாரமும ஆகிய இவைகள் நீங்கிச் சிவத்தோடிகலந்து இடைகலைவழியாகவாயுவைரேசகஞ்செய்து-எ-று,

பிங்கலையால்வாயுவினைப் பெறவாங்கிச்சுழுமுனையா..... .*
லங்கமலநேர்நிறுத்தியாதாரவழிதிறந்து .. . ........... *
தங்குகபாலத்தினைவெளியாக்கத்தவாக்கினிபோய்ப் *
பொங்குமலைப்பற்றறுத்துப் புறத்தலத்துறபுறப்பட்டு ..*

(இ-ள்.) பிங்கலைவழியாக வாயுவை உள்ளுறவாங்கிச் சுழுமுனைவழியால் வாயுவைச் சகஸ்திரதளகமலத்திற்கு நேராகநிறுத்தி ஆறாதாரவழிகளைத்திறந்து பொருந்திய கபாலமத்தியை வெறுவெளியாக்கச்செய்ய அப்பொழுது அதிலுண்டான தபாக்கினியானது சென்று அகமுகத்தில் அனாதியாய்நிறைந்துள்ள மலபந்தங்களை வேரறச்சுட்டெரித்துப்பூரணவியாபகமாகப்பகிர்முகத்திற்புறப்பட்டு-எ-று(௩௰)

புவனங்களொருமூன்றும் புகைபரந்துகனல்பரப்பத் *
துவனங்கொண்டுயிர்சலிப்பச் சாகரத்திற்சராசரங்கள் .... *
கவனங்கொண்டலக்கழிக்கக் கடவுளர்நடுநடுங்கப் .. *
பவனன்றனுடல்வெதுப்பட்டிமதியம்பரதவிப்ப .. ...... *

(இ-ள்.) அந்தத்தபாக்கினியானது மூன்றுலோகத்திலும் புகையைப்பரப்பி வெப்பம் அக்கினிஜ்வாலையைவீசினமாத்திரத்தில் சகல வுயிர்களுந் தாபமேலிட்டு மனஞ்சலிக்கவும் சமுத்திரத்திலுள்ள சர வுயிர்களும் அசரவுயிர்களும் சலசலமடைந்து பதைக்கவும் தேவர்க ளும் மிகுந்த நடுக்கங்கொள்ளவும் வாயுவின்சரீரம் வெந்தெரியவும் குளிர்ச்சிபொருந்திய சந்திரன்பரதவிப்படையவும் - எ-று ..... (௧௨)

உலகிலுள்ளோர்படுந்துயர முமையம்மைகண்டருளி ... *
மலர்கொண்டுபதம்போற்றி யண்ணலைவிபசித்து........ *
னிலவுதவக்கனன்மூடுக நெடிதுயிர்கடவுகின்று ..... *
ரிலசவெழுந்தருளியவ னெதிர்நிற்கவேண்டுமென........ *

(இ-ள்.) இப்படி உலகத்திலுள்ளவர்கள் படுகின்ற துன்பத்தை உமையவளாகிய பெரியநாயகியார் கண்டு திருவுளமிரங்கப் பழமலை நாதருடைய பாதத்திற் புஷ்பங்களைக்கொண்டு பூசித்து வணங்கிநின்று சுவாமீ விபசித்துமுனிவர்செய்கின்ற பிரகாசம்பொருந்திய தபா க்கினியானது எங்கும் பரவியதினால் சகலவுயிர்களும் மிகுந்த தாபத் தைப்பொருந்தி வருந்துகின்றனர் ஆகலாற்றேவரீர் அந்தவிபசித்து முனிவனெதிரே சுயம்பிரகாசமாக எழுந்தருளிநின்று தரிசனங்கொடு த்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தருளினாள். எ-று. (௧௩)

தக்கதிருமலைக்கிழத்தி தகுமொழியைக்கேட்டருளி ...... *
முக்கண்ணு நாற்றோளு முகிலஞ்சுங்குழலாளும் ........ *
பக்கமதிச்செஞ்சடையும் பான்மொழியாளிடப்பாலுஞ் *
செக்கர்வடிவுந்தோன்றச் சிவபெருமான்முன்னின்றான் *

(இ-ள்.) தகுதியாகிய விருத்தகிரிக்குரியவளாகிய பெரியநாயகியார் விண்ணப்பஞ்செய்தருளிய திருவாக்கைக்கேட்டவளவில் மூன்றுகண் களும் - நான்குபுயங்களும் - மேகமஞ்சுகின்ற அளகபாரத்தையு டைய கங்கையையும் அர்த்தசந்திரனையுந் தரித்திருக்கின்ற சிவந்த ஜடாமகுடமும் பால்போலும் வசனத்தையுடைய உமையவள் வசிக்கி

ன்ற இடப்பாகமும் செவ்வானம்போன்றதிருமேனியும்பிரகாசிக்கும்படி பரமசிவன்விபசித்துமுன்னேயொருவர் கவெழுந்தருளிநின்றார் - எ - று

தம்பிரான்றோன்றுதலாற் சகலவுயிருந்தாளை ற...... *
வெம்பிரானுளங்குளிர வெவ்வுயிருமுடல்குளிர .. .. *
வும்பர்முழவிடிமுழங்க வொளிர்மலர்மாரியும் பொழிய*
விம்பமே விபசித்து வெதிர்பணிந்துமுறையிடுவான் .....*

(இ-ள்.) பரமசிவன் இங்ஙனம் பிரகாசித்து நின்றபடியால் சகலவுயிர்களும்பிரகாசித்துநின்றார்கள் எமது பிதாவாகிய பழமலைநாதருடைய திருவுளமகிழ்வுண்டானபடியினால் எல்லாவுயிர்களு முன்னையதாபநீங்கிச் சரீரங்குளிர்ந்து மனமகிழ்வுகொண்டார்கள் அப்பொழுது அந்தரதுந்துபிகள் இடிபோலமுழங்கியது தேவர்களெல்லாரும் பிரகாசம்பொருந்திய புஷ்பவருஷம் வருஷித்தார்கள் இவ்வகைப்பட்ட சமயிரமங்களை இவிடத்துற்றவஞ்செய்துள்ள விபசித்துமுனிவர்கண்டு எழுந்து பரமசிவனுக்கெதிரே விழுந்து அஷ்டாங்கமுதலிய தண்டன்பண்ணி குறையிரந்து துதிக்கின்றனர் என்றவாறு, ... (௫௫)

மருளுறும்பெரும்பாச வலைவளைத்தைப் பொறியாய.... *
வெருளுறு நாயேவிப் புலவேட்டைவிளையாடி .......... *
யிருளாயவெறுவெளியி னின்றெனையேன்றாண்ட ..... *
கருணைமுதுமலையிலருட் கடலேநின்பதம்போற்றி.. ... *

(இ-ள்.) மயக்கம்பொருந்திய ஈஷணாத்திரயமென்னும் பெரிய பாசமாகிய வலையைவளைத்து சுரோத்திராதிபஞ்சேந்திரியங்களாகிய மயக்கங்கொண்ட நாய்களையேவிச் சத்தாதிவிஷயங்களாகிய வேட்டை விளையாடிக்கொண்டு அஞ்ஞானமாகிய வெறுவெளியிலிருந்த அடியேனைக் கருணையினால் எடுத்தாட்கொண்ட பழமலையின்கண்ணெழுந்தருளிய கிருபாசமுத்திரமே உன்னுடைய திருவடிகளுக்கு நமஸ்காரம் நமஸ்காரம் என்றவாறு ......... ............ ... ... (௫௬)

காவலிலாப்பெரும்பாசக் காட்டுவழிதிசைதப்பிப்.... ...*
பாவமெனும்புலியலைப்ப விடயத்தப்பரந்துசுடத்.... ...*
தாவிவருமாசைப்பேய் தழீஇக்கொள்ளத்தடமாறிக்.... *
கூவல்வாய்வீழ்வேற்குன் குளிர்ந்தமலர்ப்பதஞ்சரணம்.*

(இ-ள்.) காவலில்லாத பெருமபாசமாகிய காட்டுவழியிற்சென்று

திசைதடுமாறிப் பாவங்களாகிய புலிகள் பயமுறுத்திவருத்தவும் சத்தாதிவிஷபாக்கினியானது பரவிச்சுடவும் தாவிவருகின்ற ஆசையாகிய பாசாங்கள் பிடித்துத்தழுவிக்கொள்ளவும் இவற்றால் வழிதப்பிப் பிறவியாகிய பாழ்ங்கிணற்றில் விழுகின்ற அடியேனுக்கு உன்னுடைய குளிர்ச்சிபொருந்திய பாதாரவிந்தங்களே அடைக்கலம் அடைக்கலம்.

(௬௫) அஞ்சுவிதத்தா லாறுமதத்தா......*
னெஞ்சுசுழற்று நினைவால்வினையா......*
லெஞ்சுநடிப்பா லெய்த்தேனைத்தா......*
தஞ்சநிருத்தா சரணஞ்சரணம்......*

(இ-ள்.) சுரோத்திராதி ஐந்தும்-சத்தாதியைந்தும் - வாக்காதியைந்தும்-வசனாதியைந்தும் - காமாதியைந்துமாகிய அஞ்சுவிதத்தாலும் சைவமாதி யறுவகையுட்சமயங்களாலும் மனத்தைச் சுழற்றுகின்ற நினைவினாலும் இருவினைகளாலும் ஈனமுள்ளபொய்க்கூத்தினாலும் இளைத்துப்போனேன் என்னைத்தச் சகலலோகாதாரமாகியநடனவிநோதனே உன்னுடைய திருவடிகளுக்கு அடைக்கலம் அடைக்கலம்.

அந்தகர்தொடையா லடுமதர்படையா......*
னிந்தனைவிழைவா னிரயக்குழியா......*
லுந்தியினோயா லுறுபிணிவலையா......*
லைந்தனன்முதுகிரி நாதாசரணம்......*

(இ-ள்.) யமதூதர்கள் கட்டுகின்ற பாசக்கயிற்றினாலும் - மன்மதபாணத்தினாலும பெரியோர்களை யறியாமையால் நிந்திக்கவிரும்புதலினாலும் நரகக்குழிகளிற்கிடந்துவாதைப்படுதலினாலும் வயிற்றுக்கிரைதேடுதலினாலும் மிகுந்த வியாதிகளாகிய வலையினாலும வருந்தினேன், பழமலைநாதனே இப்பொழுது உன்னுடைய திருவடிகளுக்கு அடைக்கலம் அடைக்கலம் என்றவாறு......(௬௬)

எய்யா நான்முக னென்றுளனன்றே......*
யுய்யாவுடல மெடுத்தேனுன்றன்......*
மெய்யாக்கண்டிலன் மெய்யிதுகரியே......*
யையாமுதுகிரி யப்பாசரணம்......*

(இ-ள்.) சிருட்டித்தொழிலிலே படையாதபிரமதேவர் என்றுண்டாகினாரோ அன்றுமுதல் நிலையில்லாத பலசரீரங்களை யெடுத்தெடுத்துழன்றேன் இதுவாயிலும் தேவரீருடைய பாததரிசனத்

தை உண்மையாக்கண்டறிகிலேன் அப்படிகாணுமைக்கு இந்தச்சரீர மிருப்பதேசாக்ஷியாம் ஆதலால் ஐயனே பழமலையிலெழுந்தருளிய என்னப்பனே இப்பொழுது உனது திருவடிகளுக்கு அடைக்கலம் அடைக்கலம்-என்றவாறு.........................................(௬௰)

விதமாமுறையோ வெனும்வேதியனை...... ... . . . . *
நதிசேர்சடையான் மகிழ்வாய்நந்த.................... *
முதுமாமலையிற் பணியேபணியா... .. ... ......... . *
விதமாமறையோய் முயல்வாயென்றான்... ... .....*

(இ-ள்.) இப்படி விதம்விதமாக முறையிடுகின்ற விபசித்து முனிவரைப்பார்த்து கங்கையையணிந்த ஜடாபாரத்தையுடைய பரமசிவன் திருவுளமகிழ்ந்து ஓய் நன்மைபொருந்திய விபசித்துமுனிவரோ நீ நமது விருத்தாசலத்திற் திருப்பணியே தொழிலாக எப்போதும்முயன்றுகொண்டிருப்பாயென்று திருவுளம்பற்றியருளினார்-எ-று.

( வேறு. )

விப்பிரனும்பழமலையின் மெய்ப்பொருடான்விளம்பக்கேட்,...... *
டப்படியேசெய்கின்றேனடியேற்குமுன்னின்று .................. *
செப்பியதுநினைந்தபடி செய்தருளியுமையுடனே.......... . ... ... . . *
யிப்படியேநில்லென்றானற்பெருமானென்றான்.... . . . .... . . *

(இ-ள்.) பழமலையின்கண் ணெழுந்தருளிய உண்மைப்பொருளாகிய பரமசிவன் திருவுளம்பற்றியருளினதை விபசித்துமுனிவர்கேட்டு சுவாமீ அப்படியே செய்துவருகின்றேன் அடியேனுசமகெதிராக எழுந்தருளிநின்று அனுக்கிரகஞ்செய்த திருப்பணித்தொழிலைத் தேவரீருடைய திருவுளத்திற்குறித்தபடி நிறைவேறச்செய்வித்து எப்போதும இந்தத்திருவுருவமாகவே உமையவளோடும் எழுந்தருளிநின்று தரிசனங் கொடுத்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தருளினார் அதுகேட்டு எமது பிதாவாகிய பழமலைநாதரும் அங்ஙனே நல்லதென்று திருவாய்மலர்ந்தருளினார்-என்றவாறு.... ........ .. ... (௬௰௨)

அருள்செப்பக்கேட்டிறைஞ்சி யந்தணனும்வன்னியின்மேற்......... *
பொருளெப்பானேனுதலும் பூசுரனேகறபகத்தான்..... .... . . . ......*
றெருளுநலாஞ்சிவபூசை செய்யவந்தேன் றிருப்பணிக்கு.... ........ . . *
வெருளிலாப்பொருடருவே னெனவன்னிவிளம்புதலும்...... ..... *

(இ-ள்.) பரமசிவன் திருவுளம்பற்றியருளினதைகேட்ட விபசி

த்துமனிவரும் அவரைவணங்கி வன்னிவிருக்ஷத்திலுள்ள ஆப ரணங்களை எடுப்பதற்கு அந்த விருக்ஷத்தின்மேலேறினபொழுது அந்தவிருக்ஷமானது ஓய் விபசித்துமுனிவரே நான் கற்பகவிருக்ஷம் இந்தஸ்தலத்தில் தெளிவுபொருந்திய சிவபூசை செய்ய விரும்பிவந் தேன் ஆதலால் பழமலைநாதருடைய திருப்பணியைக்குறித்து வேண் டியபடியே தர்மமான பொருளைக்கொடுப்பேனென்று அந்தவன் னிமரம் சொன்னமந்திரத்தில் என்றவாறு .... ........ (௬௩)

எழிலவன்னிப்பொருடனை யெடுக்கெடுக்கவளர்ந்தேறப் ...... ..... *
பழமலையார்திருக்கோயிற் றணியெல்லா நிறைவேறச் ... ........... *
செழுமையுளவிடையேறி தேரோடித் தெருவேறக் ............... .. ... *
கொழுமையுடன்சிவனடியார் குடியேறச்செய்தமைத்தார் ........ *

(இ-ள்.) அழகிய வன்னிவிருக்ஷத்திலுள்ள திரவியங்களை எடுக்க எடுக்க வளர்ந்து விர்த்தியாகிக்கொண்டிருப்பதால் பழமலைநாதரு டைய அழகிய சந்நிதியின் திருப்பணிமுழுமையும் நிறைவேறும்படி செய்து வளம்பொருந்திய ரிஷபவாகனத்தையுடைய பரமசிவனை ஏறீந்தருளும்படி அழகுபொருந்திய தேரும் அத்தேரோடுகின்ற வீதி யும் திருத்தமாகமுடிப்பித்து அந்தஸ்தலத்திற் சிவனடியார்கள் செல் வத்தோடுங் குடியேறும்படியாகவும் செய்துவைத்தருளினார். எ-று.

நித்தவிழாமாதவிழா நிறைசோலைநந்தவன ........................ .... *
மத்திமொலிவாச்சியங்க ளரய்பையர்களானிரைகள் .......... ..... ..... *
டித்தர்மடம்பயில்வித்துப் பரமசிவன்பதத்தடைந்தான் ............. *
முத்தனவன்பதம்போற்றி முதல்வனடம்புகல்கின்றாம் .... ...... ...*

(இ-ள்.) நித்தியவிழாக்கள் - மாதவிழாக்கள் - புஷ்பங்கள் நிறை ந்தசோலைகள் - நந்தவனங்கள் - ஆனைகள் - சத்திக்கின்றபலவாத்தி யங்கள் - வேதியர்கள் - பசுக்கூட்டங்கள் - அடியார்கள் வசிக்கின்ற மடாலயங்கள் முதலிய பலவளப்பங்களும் செய்வித்து விபசித்து முனிவரும் பரமசிவனுடைய திருவடியிற்கலந்தொன்றுகின்றார் அப் படிப்பட்ட மகாத்மாவாகிய விபசித்துமுனிவருடைய திருவடிகளை வணங்கி யாவருக்கு முதல்வனாகிய பரமசிவன்செய்தருளிய திருந டனச்சருக்கத்தைச் சொல்லுகின்றோம் என்றவாறு ............. (௬௫)

விபசித்துச்சருக்க முற்றுப்பெற்றது.

ஆக - சருக்கம் - ௫ - க்கு - திருவிருத்தம் (௱௬௯)

திருச்சிற்றம்பலம்.

ஆறுவது,

# நிருத்தச்சருக்கம்,

(வேறு.)

தேவர்தேவன்றிருநடஞ்செய்குன்றினிற்சென்றுசென்றுசிறிதுந்தவமிலாப்
பாவகாரிகளாயினோரெல்லாம்பரமர்பாதமடைகின்றனரெனக் ...... *
காவலாளர்களெனவகையோருங்கடவுளாகியதேவர்கள்யாரும் ....... *
பூவின்மேலயனையேவணங்கப்பூமகன்றிருமாலைவணங்க .... .... ..... *

(இ-ள்) தேவர்களுக்குந்தேவனாகிய பரமசிவனது அழகிய விருத்தகிரியிற்போய் அணுவளவுந்தவம்புரியாமல் அவமேபுரிந்துள்ளபாவசொரூபமானவர்களெல்லாரும் அப்பரமசிவனது திருவடியைப்பெறுகின்றார்களென்று அஷ்டதிக்குப்பாலரும் சகலதேவர்களும் செந்தாமரைப்புஷ்பத்திலவசிக்கின்ற பிரமதேவனை வணங்கிச்சொல்ல அந்தப்பிரமதேவரும் மகாவிஷ்ணுவை வணங்கச் சொன்னமாத்திரத்தில் என்றவாறு .................. (க)

நாரணன்பிரமன்முதற்றேவர்கணங்கணல்லமுதுகுன்றினை நண்ணி *
யாரணந்துதிசெய்தோறுமுழங்கவண்டர்தொண்டர்களிசைமுழங்கப் *
பேரணங்கொடுவாழ்முதுகுன்றர்தம்பெரியகோயிலின்முன்னர்வணங்கிச்
சீரணங்குறுமாமறைமொழிதந்துமஞ்சலிசெய்துநின்றனர் *

(இ-ள்.) மகாவிஷ்ணு பிரம்மாமுதலிய சகலதேவர்களும நன்மைபொருந்திய நமது விருத்தகிரிக்குப்போய்ச்சேர்ந்து திசைகள்தோறும் வேதங்கோஷிக்கவும் தேவர்களுடைய வாழ்த்தொலியும அடியார்களேத்துகின்ற திருப்பதிகத்தொலியும்முழங்கவும் பெரியநாயகியோடுவாழுகின்ற பழமலைநாதருடைய ஆலயத்தின் மேலாயசந்நிதியின்முன்வந்து நமஸ்காரஞ்செய்து சிறப்புமிகுந்த அழகிய வேதவாக்கியங்களையெடுத்துத்துதி அஞ்சலியஸ்தராய் நின்றார்கள்-எ-று-*

வந்ததேவர்தங்கள்கருத்தைமாதுபாகர்திருவுள்ளமறிந்தே ..... *
சிந்தைசெய்துதிருவாய்மலராதசெயலறிந்துவியாசத்துவணங்கி ..... *
நந்திதேவர்தமக்குரைசெய்யநற்கிரிப்பெருமாற்குரைசெய்ய ..... *
வந்தனானவிபசித்திவிடத்தினருளினாலமலன்வெளியானான் ..... ..... *

(இ-ள்.) இங்ஙனம்வந்துநிற்கின்ற தேவர்கள்கருத்தைப் பெரிய நாயகியை இடப்பாகத்திலுடைய பரமசிவன் திருவுள்ளத்திலேதெரிந்து சிந்தித்து அவர்கள்படி திருவாய்மலர்ந்தருளாத செய்கையை விபசித்துமுனிவர்மகிழ்ந்து நந்திதேவருக்குத்தெண்டனிட்டுவிண்ணப்பஞ்செய்ய நந்திதேவருமெமதுகர்த்தராகிய பழமலைநாதருக்குவிண்ணப்பஞ்செய்தார்-அதுகேட்டு நிமலனாகிய பரமசிவனும் அந்தணனாகிய விபசித்துமுனிவரிடத்தில்வைத்ததிருவுளப்படியே வெளிப்பட்டருளினார்-என்றவாறு............................ ....... .. ....... ...... (௫)

அண்டகோளகைவிண்டுபிளக்க வமரர்துந்துமியாவுமுழங்கத்... .... *
தொண்டரார்ப்பொலிவேலைதுரக்கத்தொக்கபூதகணந்துந்துமியோங்க
வெண்டிசைக்கணலங்கணநாதரெள்விழும்படியின்றமைநெருங்க.... *
பண்டிம்பொருளாம்வடிவாகியவானநாயகன்வந்துமுன்னின்றான் .. *

(இ-ள்.) அண்டகோளகை அனேகமிடங்களில் வெடிபட்டுப்பிளக்கும்படி தேவதுந்துமிகளெல்லாஞ்சத்திக்கவும் அடியார்களுடைய வாழ்த்தொலி சமுத்திரகோஷத்தை ஓட்டிவிடவும் நிறைந்தபூதகணங்கள் முழக்குகின்ற வாத்தியங்கள் மிகுந்துசத்திக்கவும் அஷ்டதிக்குகளிலிடங்களில் அழகியகணநாதர்கள் எள்விழுதற்கொத்த பூமியில்லாமல் நெருங்கவும் பரிபூர்ணஞானப்பிரகாசமே சொரூபமாகிய பரமசிவன் தேவர்கள்முன்னேவந்து நின்றருளினார்-என்றவாறு (௬)

விண்ணவர்க்குவெளியாகியவண்ணறன் மெய்ப்பேரொளிகண்டுந
டுங்கிக், கண்ணைமூடிமுறையோமுறையோவெங்கண்கள்காண்டிடநின்
றருளென்றார், பெண்ணணங்கருட்கண்ணருள்செய்தாள்பேதையாகரு
ங்காட்சிகொடுத்து, நண்ணுதேவரைக்கண்டுநகைத்து நன்மைதான்
பெரிதோவுமக்கென்றார்..... .... ........ ... ... ...... . ..... .... ....... ... *

(இ-ள்.) தேவர்களுக்குமுன் வெளிப்பட்டுநின்ற பரமசிவனுடைய உண்மைபொருந்திய சுயம்பிரகாசசொரூபத்தைக்கண்டு சகல தேவர்களும் நடுக்கங்கொண்டு கண்களைமூடி அபயமபயமையா எங்கள்கண்கள் காணும்படிநின்று தரிசனங்கொடுத்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தார்கள்- அதுகேட்டு பெண்ணணங்காகிய உமையவள் கிருபாதிருஷ்டியினாலே பார்த்தாள்-பேதையாகிய உமையவளே

யிடப்பாகத்திலுடைய பரமசிவனும் தரிசனங்கொடுத்துநின்று அவ்வி
டத்தில்வந்திருந்த தேவர்களைப்பார்த்து நகைத்து ஓ தேவர்களே
உங்களுக்குநன்மையான சுகமிருந்துள்ளதாவென்று கேட்டரு
ளினார்-என்றவாறு............................................................ (௫)

சிறந்ததேவர்கள்செப்புகின்றார்கள்தேவதேவசிவசங்கரவெங்கட் .. *
கரங்களாமதிப்ரமளிததாயப்பதத்திலவந்தேறுநரிலைப் ...... ...... *
பிறந்தவுயிர்களியாவையுமிந்தப்பெரியமுத்தாநதிக்கணின்மூழ்கிக்
கறங்கலாதுநின்பாதம்வணங்கிக்கதிகள்சேர்ந்துகளித்திடலாமே ... *

(இ-ள்.) அங்ஙனம் பரமசிவன் திருவுளம்பற்றியருளியபொ
ழுது மேன்மைபொருந்திய தேவர்கள் சொல்லுகின்றார்கள்- தேவர்க
ளுக்கெல்லாந் தேவனே சிவசங்கரமூர்த்தியே நல்வினைதீவினைகளினு
ம்பிறந்த சகலவுயிர்களும் பெரிதாகிய இந்தத்திருமணிமுத்தாநதியி
ல்வந்து ஸ்நானஞ்செய்து ஒருவருந்தப்புமில்லாமல் உமது திருவடிக
ளைவணங்கி மோக்ஷத்தைப்பெற்று நித்தியானந்தத்தை யடைந்தமையினா
ல் எங்களுக்குநன்மையாகிய அதிகாரங்கொடுத்தீர்-அவ்வதிகாரங்களு
க்குரிய எங்கள்பதவிகளில வந்தடைகின்றவர்களொருவருமில்லையெ
ன்றவாறு.............................................................. (௬)

பிரமர்மாயர்பதமேறினரில்லைப்பெண்கடானமும்பூசையுமில்லைச் .. *
சுரர்களுக்கடியுபவேள்வியுமில்லைத் துரகயாகமும்யோகமுமில்லை .. *
விரவுமாதவர்க்கன்னமுமில்லைவீரசொர்க்கமும்போர்களுமில்லை . *
யிரவிசெல்வமுமபோனமுமில்லையியமனாணையுந்தானமுமில்லை .. .. *

(இ-ள்.) பிரமபதத்திலும் விஷ்ணுபதத்திலும் வந்தேறினவர்
களுமில்லை-கன்னிகாதானங்களும் சிவபூசைகளுமில்லை- யாகங்களும்
அவற்றில் தேவர்களுக்குக்கொடுக்கும் அவிர்ப்பாகங்களுமில்லை-அசு
வமேதயாகங்களும் அதனாலனுபவிக்கும் சொர்க்காதிபோகங்களுமி
ல்லை-புசித்துவருகின்ற பெரியோர்களுக் கன்னங்கொடுப்பதுமில்லை.
யுத்தங்களும் அதனாலனுபவிக்கும் வீரசொர்க்கங்களுமில்லை - சூரிய ந
மஸ்கார ப்ரதக்ஷிணை நைவேத்தியங்களுமில்லை-யமதர்மராஜனுடைய
ஆக்கினையுந்தானங்களுமில்லை-என்றவாறு.................................. (௭)

(இ-ள்.) இப்பொழுது உங்களைத் தவஞ்செய்யவேண்டாமென்று விலக்கிறைல் மற்றவர்களுக்கும் விலக்கிவிடுவது நீதியாகும் ஆதலால் நீங்களும் இந்தஸ்தலத்திற்பொருந்தித் தவஞ்செய்தால் பதகர்த்தத்துவமொழிந்து பதிகர்த்தக்துவமாகிய உயர்ந்த மோக்ஷபதத்தைப்பெறுவீர்களென்று திருவாய்மலர்ந்து பரமசிவனும் சிதாகாசத்தில் மறைந்தருளினார் அதைக்கேட்டு பரிசுத்தராகிய தேவர்கள் திருமணிமுத்தா நதியினிடத்தில்வந்து ஸ்நானஞ்செய்து அந்நதிதீரத்தில் சந்திரனைச்சடையிற்றரித்த பரமசிவனை இதயகமலத்தில் தியானஞ்செய்து சிறப்புற்றிருந்தார்கள் என்றவாறு........................(ம)

(வேறு)

திருமுதுகுன் றிறைசிறி துநினைக்கத்திசைதோறு.......*
மருமறைவந்தனவாகமம்வந்தனவரிவந்தான்..........*
பெருகிபவிமையவர்குழுவிறசிவனும்பிரகாசித்..........*
தொருமையுமுண்மையுமமரர்க்கருள்வானுட்கொண்டு *

(இ-ள்.) அங்ஙனம் சகலதேவர்களுந் தியானித்திருந்தபொழுது அழகிய பழமலைபாணகண்ணெழுந்தருளிய பரமசிவன் சற்றே திருவுளத்தினினைத்தமாத்திரத்தில் திக்குகள்தோறும் அரிய வேதங்களும் ஆகமங்களுமவந்து நிறைந்தன மகாவிஷ்ணுவும் வந்தார் அப்படி நிறைந்த தேவர்கூட்டத்தினடுவிற் பரமசிவனும் பிரகாசித்துநின்று அந்தத்தேவர்களுக்கு ஒருமைப்பாட்டையும் உண்மைப்பாட்டையுமனுக்கிரகஞ்செய்யும்படி திருவுளங்கொண்டு என்றவாறு........(மக)

வித்தகமாகியசித்தர்கண்மெத்தியமெய்யென்னச்.......*
சித்திரமான திருப்பதமெண்டிசையுந்தோன்றச்.......*
சத்திமுகத்துப்பத்தர்முகத்துந்தன்கண்ணு..................*
முத்தநதிக்கணிருத்தமளித்தான்முதுகுன்றன்..........*

(இ-ள்.) ஞானசொரூபமாகிய சித்தத்தையுடைய பெரியோர்களிடத்தில்விளங்குகின்ற உண்மை ஞானப்பிரகாசம்போல அழகிய திருவடிகளெட்டுத்திக்குகளிலும் பிரகாசிக்கும்படி பராசத்தியின் முகத்திலும அடியார்கள்முகத்திலும்தமது கிருபாதிருஷ்டிபொருந்தத்திருமணிமுத்தா நதியினிடத்தில்பழமலைநாதர்திருநடஞ்செய்தருளினார்-எ-று.

(மஉ)

ஞானந்தங்கியவடிவனடஞ்செய் நந்தேவன் .. .... ... .. *
வானந்தங்கியதேவர்கள்காணுமண தொன்று ... ... ....... *
யானந்தந்தனையமுத ரவுண்டனரசைவறரு ................. *
ஞானந்தங்கியவுடலைமறந்தாரொன்றுணர் ... ... ... ...... *

(இ-ள்.) ஞானானந்தசொரூபராகி நிருத்தஞ்செய்கின்ற நமதுதேவனாகிய பரமசிவனை-சொர்க்காதிலோகவாசராகிய சகலதேவர்களுங் கண்டு மனவொருமையைப்பெற்றுப் பிரம்மானந்தத்தை யமிர்தமாகப்புசித்து நிவாததீபம்போலசைவற்று நாசப்படுகின்ற சரீரஸ்மரணமொழிந்து ஆநந்தமயரானார்கள் என்றவாறு .. ......... ...... (யரு)

அமைவுபிறக்குமமரர்கள்சித்தமதுகாண . ............... *
வுமையைநகைத்தங்கிமையவருக்கன்புளதாகச் ...... . *
சமையுநிருத்தம்பினையுநடித்துத்தனிநின்றான் ........ *
சுமைவுதரித்தங்கிமையவாசித்தங்கனிவானார் ... ....... *

(இ-ள்.) பரமசிவனானவர் அங்ஙனம்பரப்பற்று அமைவுபெறுகின்ற தேவர்களிருதயத்தைத்தெரிந்து உமையவளைப்பார்த்தது நகைத்துத் தேவர்களுக்கன்புண்டாகும்படி முயன்ற நடனத்தை யேன்மேலும் நடித்துத் தனிமையாகநின்றருளினர் அதுகண்டு தேவர்களுமுபசாந்தமடைந்து மனமுருகிநின்றார்கள் என்றவாறு ............... (யச)

அஞ்ஞானக்கணமரர்க்ககலும்படியெண்ணி.... . ....... *
யுய்ஞ்ஞானப்பதமைந்தையுமுபதேசஞ்செய்தான் ...... *
மெய்ஞ்ஞானக்கண்டன்னைவிழித்திருள்வெளியில்லாக் *
கைஞ்ஞானத்திரையற்றகடற்போனிலையென்றான் ..... *

(இ-ள்.) பரமசிவனானவர் தேவர்களுக்கு அஞ்ஞானதிருஷ்டிநீங்கும்படி நினைந்து உய்தற்குரிய ஞானசொரூபமாகிய ஐந்தெழுத்தைப் முறையே சிகாரஞ்சிவமென்றும்-வகாரம் அருளென்றும்-யகாரம் ஆன்மாவென்றும்- நகாரம் திரோதமென்றும்-மகாரம் மலமென்றும்-உபதேசஞ்செய்து உண்மையாகிய ஞானதிருஷ்டியைத்திறந்து இருளும் வெளியுமில்லாதமாயையவித்தைகளென்னும் அலைகணீங்கிய சமுத்திரம்போல நிற்பது சொருபசமாதிநிலையென்று அனுசரிகஞ்செய்தருளினர் என்றவாறு ... ......... ... ................ .... .... (யசு)

பூதாகாசம்மற்றுளநாலிற் புணர்வாகிப்..... ....... ... ... *
பேதாகாசம்மாகிப்பிறியாநிலைபோலப் .. .. ......... ..... *

போதாகாசம்மாகிப்பொருளாய்நிறைவாகி ............*
நாதாதீதப்பரசிவமாவது நாமென்றான் ................*

(இ-ள்.) பூதாகாசமானது மற்ற பிருதுவி அப்பு தேயு வாயுவென்னும் நான்குபூதங்களிற்கலந்தும் கலவாமல் பேதாகாசமாகியும அபேதமாகியு மிருக்கின்ற தன்மையைப்போல் சிதாகாசமாகியும் எல்லாப்பொருளுந் தானேயாகியும் பரிபூர்ணசொரூபமாகியும் நாதத்துக்கதீதமாகியும விளங்குகின்ற பரசிவமாவது நாமேயென்று பரமசிவன் திருவுளம்பற்றியருளினார் என்றவாறு ..............(யசு)

சடசித்தெங்கணு நாம்ப நாமேசகலரூபமென் ...............*
றுடலிற்கண்டவனேசிவனுகுமொருவர்க்குந் ...............*
தொடரத்தெரியாவாகமமுடிவுஞ்சொல்லுமரோ.. ... *
வடாப்பிரமனுமரியுஞ்சத்தியுமறியாரால்........................ *

(இ-ள்.) எவ்விடத்தும் தேகந்தோறும் விளங்குகின்றசித்தாகிய ஆன்மாக்களும் நாமேயென்றும் சகலவஸ்துக்களும் நமது சொரூபமேயென்றும் தனது சரீரத்திற் றரிசனஞ்செய்த மகாபுருஷன் எவனோ அவனே சிவசொரூபமாவான் ஒருவராலுந் தொடர்ந்தறியப்படாத ஆகமத்தின்முடிவும் அவ்வாறேசொல்லும் அதனைப்பிரமாவும் மகாவிஷ்ணுவும் பராசத்தியும் காணவறியார்கள்என்றவாறு.. (யஎ)

ஞானாசாரியரிடமாயல்லதுநம்முண்மை................*
தானுவம்யார்தற்பொருளுடலாவிகண்மூன்றுங் .. ......*
கோனார்தங்கைகொடுத்தருளுபதேசங்கொள்வா..........*
ராணுநிழலுஞ்சாகையுமெனவவர்வழிநிற்பார்.......... *

(இ-ள்.) நம்முடைய உண்மைவடிவை ஞானாசாரியரிடமாயிருந்து தெரியவேண்டுமேயல்லாமல் ஒருவருந் தாமேதெரிந்துகொள்ளார்கள் அல்லாமலுந் தங்களுடல்பொருளாவிமூன்றையும் ஆசிரியரிடத்தில் தத்தஞ்செய்து அருளுடைய ஞானோபதேசத்தைப்பெறுகின்ற சற்சிஷர்கள் கெடாத நிழலும் விருக்ஷமும்போல நீங்காதிருந்து அவரது வழிபாட்டில் நிற்பார்கள் என்றவாறு............ (யஅ)

சாதிகுணங்களுணாத்தவர்குரவன்றனைநம்பிற் ..........*
பேதகமாகநினைத்தவர்பெருமைகுறைசொன்னோர்..... *
வாதினின்யாதினின்மாறுகள்கொண்டவர்வளையாதார்.. *
சூதுகள்செய்தவரவரோநரகந்தொலையாதார்..............*

(இ-ள்.) ஆசிரியருடைய குலத்தையுங் குணங்களையுமிழிவாகச் சொன்னவர்கள் அவர் நம்மில் வேறாக நினைத்தவர்கள் அவரது பெருமையைக் குறைவாகச் சொன்னவர்கள் அவரைத் தர்க்கங்களிலாகிலும் மற்றெந்த விதத்திலாகிலும் விரோதஞ் செய்தவர்கள் அவரை வணங்காதவர்கள் அவருக்கு வஞ்சனைகளைச்செய்தவர்கள் எவர்களோ அவர்களே எந்தக்காலத்திலும் நரகக்குழியைவிட்டு நீங்காதவர்கள்-எ-று

குரவர் தமக்கர்ச்சனைகள் கொடுப்பதெமக்காகும்..... ..... *
விரவுநமக்குப்புரிபிழையாசான் விடுவிப்பான்.... ......*
கரவிலவர்க்குப்புரிபிழையெம்மாற்களைவாகாப்..... ....*
பரமபதத்தைத்தருவதொருத்தன்பணியன்றே ....... ... *

(இ-ள்) பரமாசாரியருக்கு அர்ச்சனைகள் செய்வது நமக்குச்செய்வதாகும் எல்லாச்சீவர்களிடத்திலும் எள்ளுக்குளெண்ணெய்போற் பொருந்திட நமக்குச்செய்த குற்றத்தைப்பரமாசாரியர் நீக்கிரக்ஷிப்பார் அவருக்கு வஞ்சகத்தினாற் செய்தகுற்றத்தை நம்மால் நீக்கப்படாது அஃதெத்தினாலெனறால் - மோக்ஷத்தைக்கொடுப்பது அவரது தொழிலையல்லாமல் வேறொருவருடைய தொழிலல்ல-எ-று. (உ௰)

ஆசாரியர்பேரின்பமளித்தாலளித்தார்கண்..... .........*
மாசாய்நரகமுழுதுமழுந்துவர்வந்தாசா............ ..... . *
னேசார்பிறவியறப்பாருந்தவமோர்கேளீர்................. ..... *
தேசார்நம்முடவுண்மைகள்பெற்றவர்தேர்வாரோ.......... *

(இ-ள்.) பரமாசாரியரானவர் பேரின்பமாகிய தமது சொருபத்தைக் கொடுத்தருளினால் அதற்குக் கைம்மாறாகத் தங்களுடல்பொருளாவியைத் திரிகரணமும் ஒவ்வாமல் மலினசித்தராய்த் தத்தஞ்செய்த சீஷர்கள் எப்போதும் நரகங்களிலெல்லா மழுந்துவார்கள் அங்ஙனமழுந்தநிற்பவர்களுக்குத் தெய்வகதியாய் விடுதலைக் காலநேரிடுமாயினும் அப்போதும அவ்வாசிரியரே கிருபையாக எழுந்தருளிவந்து குற்றமுள்ள பிறவியைக்களைந்து ரக்ஷிப்பார் ஆதலால் பெருமைமிகுந்த தவத்தையுடைய தேவர்களே கேட்பீர்களாக ஞானப்பிரகாசம்பொருந்திய நமது உண்மைவடிவைப்பெற்ற பெரியோர்களிதனைத் தெளிவார்கள் என்றவாறு..... ....... .......... ......... .... ...(உக)

உத்தமசத்தியமித்தகைமெய்யென்றுணராதா.... . ... *
ரத்தலைவெட்டுண்டாயிரசின்னப்பொடியாகிப்........... *

பொய்த்தலையெரிவாய்நரகிற்புகுதுவர் நம்மாணை ...... *
சத்தியமிதுவேசத்தியப்வாமேரானீரோ .................. *

(இ-ள்.) உத்தமமாகிய இந்தச்சத்தியவசனத்தை உண்மையென்றறியாதவர்களெவர்களோ அவர்களது சிரசானது வெட்டுண்டு ஆயிரம் சிறுபிளவாகப்பிளக்கப்பட்டு அவர்களும் பொய்யாகியவக்கின்ற எரிவாய்நரகத்தில் நமதாணைப்படிக்குச் சேருவார்கள் இதுவே சத்தியஞ்சத்தியந் தேவர்களேயென்று திருவுளம்பற்றியருளி-எ-று (உஉ)

நிருத்தமருத்தமலைறந்துமறைந்தானீள்வானோர் .... ..... *
திருத்தபாதத்தைவணங்கினர்செல்வார்சொல்வார்கள்..... *
குருக்கிடைபெற்றதவத்தினரோமூடருறைனூறாட்ட..... ....... *
தருக்கியிருப்பாசத்தரிராதுசபித்தார்கள் .. .. ... . . ... *

(இ-ள்.) நிருத்ததரிசனங்கொடுத்து அதற்குப்பொருளான ஞானந்தநிலையையுமுபதேசஞ்செய்து பரமசிவன் மறைந்தருளினார் அப்பொழுது பரமசிவனது திருத்தமாகிய திருவடிகளை வணங்கிச் செல்லுகின்ற சகலதேவர்களும் சொல்லுகின்றார்கள் அந்நியாலகையில்-ஆசிரியரிடமாகப் பெற்ற தவத்தையுடைய பெரியோர்களை பழமலையினிடத்தில் மனக்களிப்பாகவிருக்கக்கடவர்கள் அப்படி பெறாத அசத்தையுடைய மூடர்களிருக்கக்கூடாதென்று சபித்தார்கள்-எ-று.

முத்தநதிக்கணிருத்தவிருத்தமுடன்றேதும் .... . . ... *
பத்தர்பரிகதிநதிற்பலகோடிபலன்மேவச் . . ........ ... *
சத்துருவற்றிருள்பொய்ப்பிறவிப்பிணிதானீவிச்......... *
சித்தியுமுத்தியுமெய்துவரொன்றனர்திகழ்நாதர் .......... *

(இ-ள்.) திருமணிமுத்தாநதியின்கண் பரமசிவன் செய்தருளிய திருநடனமாகிய இந்தச்சரித்திரப்பாடலை முயன்று படிக்கின்ற அடியார்கள் அஸ்வமேதயாகபலனிலுங் கோடிபங்கதிகமான பலனைப்பெற்றுச் சத்துருக்களில்லாமல் அஞ்ஞானத்தைப்பற்றவருகின்ற பொய்யாகிய ஜனனவியாதியையும் ஒழித்துச் சகலசித்திகளையும் மோக்ஷத்தையும் பெறுவார்களென்று அனவரத்தியையென்னுந்தேவிக்கு ஞானப்பிரகாசமிகுந்த நாதசன்மாவானவர் திருவுளம்பற்றியருளினார்.

நிருத்தச்சருக்கமுற்றுப்பெற்றது.

ஆக-சருக்கம் - கூ - க்கு- திருவிருத்தம் (௱கூ௩)

(உ௰)

திருச்சிற்றம்பலம்.

ஏழாவது,

# அகத்தியச்சருக்கம்.



(வேறு.)

ஐயன்முதுகுன்றமர்ந்தபிரானளித்தநடத்தையுரைசெய்தோ....... *
மெய்யும்படிநங்குறுமுனிவனுகந்துவருமாறுரைக்கின்றோம் ........ *
வையம்விந்தப்பருப்பதந்தான்பானுபதத்தைக்கடந்தோங்கிச் .... .... *
செய்யவெய்யோன்சந்திரனுஞ்செல்லும்வழியைத்தடைசெய்ய.. *

(இ-ள்.) எமது பிதாவாகிய பழமலையின்கண் ணெழுந்தருளிய பரமசிவன் அருளிச்செய்த திருநடனச்சரித்திரத்தைச் சொன்னோம். இப்பால் உலகத்திலுள்ள சகல ஜீவராசிகளும் பிழைக்கும்படியாக நமது அகஸ்தியமுனிவர் விருத்தாசலத்துக்கு அதிக விருப்பமாய் வருகின்ற சரித்திரத்தைச் சொல்லுகின்றோம். அஃதெப்படியென்றால்- விந்தியபர்வதமானது மெல்லவளர்ந்து சூரியமண்டலத்தையும் அதிக்கிரமித்துயர்ந்து சிவந்த கிரணங்களையுடைய சூரியசந்திரருஞ்செல்லுகின்ற வழியைத் தடைசெய்ததினால் என்றவாறு ............ ... (க)

இரவுபகலற்றனுட்டானமின்றிமறையோரவியின்றிச் ........... .... *
சுரர்களயர்வால்வாடுதலாற்சுரந்துமேகம்பொழியாதே.. ........... *
திரணமுதலாத்தீய்ந்தபடிதேவர்முனிவர்விதிக்குரைப்பப் .... ...... *
பிரமன்றனுந்தன்சிறுவன்பெரியகும்பமுனிக்குரைப்பான்....... *

(இ-ள்.) இராப்பகலில்லாமையால் பிராமணர்களனுஷ்டானமில்லாமலும் தேவர்கள் அவிர்ப்பாகமில்லாமலும் பசியினால் வாடுகின்றமையால் மேகமானது நீர்சுரந்து பூமியில் மழைபெய்யாமல் துரும்புமுதலானவையுங் காய்ந்துபோன தன்மையைத் தேவர்களும் முனிவர்களும் பிரம்மதேவருக்குச் சொல்ல பிரம்மதேவரும் தன்குமாராகிய தவத்தான்மிக்க அகஸ்தியமுனிவருக்குச்சொல்லுகின்றார்-எ-று

விந்தவரையைமதமடக்கிமிகவில்வலனேவாதாவி........... .. ........ .. *
யந்தவிருவர்தமைமாற்றியணைவாயென்றேயயன்மறைந்தான் ........ *
முந்தவிடைகொண்டகத்தியனுமுன்றுசுடருமுதித்ததெனச் ...... *
சந்தக்கரத்திலங்குட்டந்தனைப்போனடந்துவருகின்றான்.. ........... *

(இ-ள்.) விந்தியபர்வதத்தினுடைய அகங்காரத்தையொடுக்கி யிருந்த வல்லமையுடைய வில்வலன் வாதாவியென்னும், அவ்விரண்டு ராக்ஷதர்களையு மழித்துவிடுவாயாயென்றுசொல்லிப் பிர்ம்மதேவர் மறைந்துவிட்டார் அப்பொழுது அகஸ்தியமுனிவரும் முதன்மையாக விடைபெற்றுக்கொண்டு மூன்றுசுடர்களும் ஏககாலத்திலுதயமானதுபோல அழகிய கைகட்டைவிரல்போன்ற சிறியவுருவமாய்ப் பூமியில் நடந்துவருகின்றார் என்றவாறு .....(ரு)

அமரர்கணங்கள்சித்தர்கணமாமுனிவர் நாமுனிவர்...... ...... ... *
தமரமறைகணவக்கிரகஞ்சகலகணமுப்புகழ்ந்தேத்தத்... .. .... . ... .*
திமிலமலைகள்குலமலைகள்செம்பொன்மேருபுடைசூழ . . ...... . .....*
விமலர்மலர்மாரியும்பொழியமின்னுக்கொடிகணின்றாட................*

(இ-ள்) தேவர்கூட்டங்கள் - சித்தர்கூட்டங்கள் - தேவரிஷிகள் - நாரிஷிகள் - சத்திக்கின்ற வேதங்கள் - நவக்கிரகங்கள் முதலான சகலகணங்களும் புகழ்ந்து தோத்திரஞ்செய்யவும் திமிலமச்சங்கணிறைந்துள்ள ஏழுகடலகளும் அஷ்டகுலபர்வதங்களும் செம்பொன்மயமாகிய மகமேருகிரியும பக்கங்களிற் சூழ்ந்துவரவும தேவர்கள் புஷ்பவருஷம் பொழியவும் பிரகாசம்பொருந்திய கொடிகள் நின்றாடவும் என்றவாறு ..... ........... ... .... , ..... . ......... . . .. (சு)

பஞ்சமுழவம்விண்ணதிரப்பாடும்புலவரிசைபாடத்.............. . *
தஞ்சவுதயனெழுங்காலைத்தருக்கூகைக்குநெருக்கம்போ.............. *
லஞ்சியசுரர்நடுநடுங்கவரியதீர்த்தம்பலமூழ்கி ... ........... .... . .*
விஞ்சுபரமன்றலமபலவுமேவிவிந்தமலைசார்ந்தான் . ....... .:. ..... *

(இ-ள்.) தோற்கருவி - துளைக்கருவி - கஞ்சக்கருவி - மிடற்றுக்கருவி - நரம்புக்கருவியென்னும் பஞ்சவாத்தியங்களு மாகாயத்தில் முழக்கவும் - இசைபாடுகின்ற வித்வஜனங்கள் சங்கீதம்பாடவும்-பெருமைபொருந்திய சூரியோதயகாலத்தில் விருக்ஷங்களிலுள்ள கோட்டான்கள் எப்படி பயந்து நடுங்குமோ அப்படி ராக்ஷதர்களெல்லாம் பயந்து நடுநடுங்கவும் - அகஸ்தியமுனிவரானவர் அரிதாகிய பலதீர்த்தங்களிலும்போய் ஸ்நானஞ்செய்து பெருமைமிகுந்த பலசிவஸ்தலங்களிலும்போய்த் தரிசனஞ்செய்து அப்பால் விந்தபர்வதத்தினருகேவந்துசேர்ந்தார் என்றவாறு ............................................ (ரு)

அன்னவினூறாயிரமுயர்ந்தவந்தவிந்தமகத்தியனுக் *
கிளகியெதிர்சென்றுபணிந்தினியபூசைபலவியற்றி *
யுள்ளமுநடுங்கமெய்நடுங்கவொடுங்கிநிற்பநிலைகண்டு *
வளமைமுனிவன் றிருவுள்ளமகிழ்ந்துவிந்தமலைக்குரைப்பான் *

(இ-ள்.) அப்போது அநேக நூறாயிர யோசனை தூரமுயர்ந்திராநின்ற அந்த விந்தபர்வதமானது அகஸ்தியமுனிவனைக் கண்டு உளமுருகி எதிர்கொண்டுபோய் வணங்கி இனியவாகிய உபசாரங்களைச் செய்து மனநடுங்கவும் சரீரநடுங்கவும் அடங்கிநிற்கின்ற நிலைமையைக் கண்டு தவசிரேஷ்டராகிய அகஸ்தியமுனிவர் திருவுளமகிழ்ந்து விந்தபர்வதத்திற்குச் சொல்லுகின்றார் என்றவாறு. (௬)

தென்பூமிக்கட்டவம்புரியச்செல்கின்றோம்யாஞ்செல்லுங்கா *
லுன்பாலேறியிறங்கியிடவொண்ணாநிலத்திடையொத்தடங்குக *
வன்பாலிதனைச்செய்யாயேலழித்துச்சாம்பராக்கிடுவோ *
நின்பாலென்றான்விந்தமலைநிலத்திலொடுங்கிட்டக்கதுவே *

(இ-ள்.) தெற்குத்திசைக்கண் தவஞ்செய்யவேண்டி நாம் போகின்றோம் போகின்றபோது உன்மேலேறியிறங்கிப்போகவொண்ணாது அதுவொருதடையாகின்றது ஆகையால் நீ பூமிக்குச்சமமாயடங்குவாயாக இப்படி நீ அன்பாகச்செய்யாவிட்டால் உன்னையழித்துச் சாம்பலாக்குவோமென்று அகஸ்தியமுனிவர் சொல்லியருளினார் அதுகேட்டு விந்தபர்வதமானது பூமியிலடங்கிப்போயது என்றவாறு. (எ)

ஆடுமரவமந்திரங்கேட்டளைசென்றாங்குமலையொடுங்க *
நீடுஞ்சுடர்கள்வழிநடப்பநிறைந்தமலர்மாரியும்பொழிய *
வாழுமுனிவர்தேவரொடு மழைசேர்பயிர்போன்முகங்குளிர்ந்தார் *
தாடுளசுரரிருவருழிதனித்துச்சென்றான்குறுமுனிவன் *

(இ-ள்.) படமெடுத்தாடுகின்ற சர்ப்பமானது பிடாரனுடைய மந்திரத்தைக் கண்ணேசெவியாகக் கேட்டவுடன் படத்தையொடுக்கித் தன்னுடைய வளையிற்புகுந்ததுபோல விந்தபர்வதமானது பூமிக்குள் ஒடுங்கினபொழுது பிரகாசமிகுந்த சந்திரசூரியரிருவரும் வழிகொண்டு நடக்கவும் தேவர்கள் நிறைந்த புஷ்பவருஷம் பொழியவும் வாழ்கின்ற முனிவர்களும் சகலதேவர்களும் மழையைக்கண்ட பயிரைப்

போல முகமலர்ச்சியடைந்தார்கள். இப்பால் அகஸ்தியமுனிவரான
வர் பலமிருந்த அசுரராகிய வில்வலன் வாதாவியென்னுமிருவருமிரு
க்குமிடத்திற்குத் தனிமையாகச்செல்கின்றார் என்றவாறு............(அ)

சதிராமுனிவன் செல்லுங்காற்றனிவில்வலனே வாதாவி ............*
யெதிரேசென்றுபூசையுஞ்செய்தினியவிருந்துபகர்தலினு............*
லதிகமுனிவன் பொருந்தியபின் யாட்டுவடிவாந்தம்பிதனை ..........*
முதியோனறுத்துச்சமைத்திட்டான் முனிவனமுதுசெய்திருந்தான் *

(இ-ள்.) அங்குஷ்டப்பிரமாணமாய் மிகுந்த வல்லபமுடைய அகஸ்தியமுனிவர்போகும்போது ஒப்பற்ற வில்வலன் - வாதாவியென்னுமிருவரும் எதிரேவந்து பூசைசெய்து இனிதாகிய விருந்துசொன்னதினால் அதுகேட்டு மேன்மைபொருந்திய அகஸ்தியமுனிவர்சம்மதித்திருந்தபின்பு ஆட்டுவடிவமாகிய தம்பியைத் தமையனாகிய வில்வலன் அறுத்துச்சமைத்து அகஸ்தியமுனிவருக்குப் படைத்தான்- அகஸ்தியமுனிவரும் அதை யமுதுசெய்திருந்தார் என்றவாறு. (கூ)

வம்பன்றமையன்வாதாவிவருகசுவாகாவெனநொடித்தான்.. ........*
கும்பமுனிவனதறிந்துகுலவுஞ்சிவனைத்தியானித்துத்...........*
தம்பிதனையுந்தமையனையுஞ்சாம்பராகப்பொடிசெய்தா ...............*
னும்பர்குழுவுமுனிவர்களுமோதங்கிளர்ந்ததெனவார்த்தார்.... ........*

(இ-ள்.) அங்ஙனம் அகஸ்தியமுனிவரிருந்தகாலையில் வம்பனாகிய மூத்தவில்வலனானவன் வாதாவிவருக சுவாகாவென்றுசொல்லியழைத்தான் அதையறிந்து அகஸ்தியமுனிவர் பிரகாசிக்கின்றபரமசிவனைத்தியானஞ்செய்து தம்பியையுந் தமையனையுஞ் சாம்பலாகும்படியழித்துவிட்டார் அப்பொழுது தேவர்கள் கூட்டமும் முனீஸ்வரர்களும்சமுத்திரங்கோஷித்ததுபோலக்கோஷித்தார்கள்என்றவாறு(௰)

நெருப்புக்குழியிற்புழுவிழுந்தானீந்தாதென்னநினைந்திலரோ........*
யருப்புவிநாசகாலத்திலவலவறிவுமேவிடுமே........ .................. *
விருப்புவிந்தவனைக்குறைத்துவேலையதனைவிழுங்கினனா.................. *
வருக்கப்புழுத்தன்சதுராலேவெல்லவெண்ணிமடிந்தனரோ.......... *

(இ-ள்.) நாசகாலமுண்டாகும்போது துர்ப்புத்திமேவிடுமாதலா

ல் அந்த வில்வலன் – வாதாவியென்னுமிருவரும் நெருப்புக்குழியில் புழுவானதுவிழுந்தால் நீந்திக்கரைசேரா தென்று நினையாதவர்களாகி புழுவர்க்கமானது நெருப்புக்குழியை நீந்தநினைந்து விழுந்திறந்த து போல மதங்கொண்ட விந்தபர்வதத்தையடக்கிச் சமுத்திரசலத்தை ஆசமனமாகக்கொண்டருளிய அகஸ்தியமுனிவரைத் தங்கள்திறமையினால் வெல்லும்படி நினைந்திறந்தார்கள் என்றவாறு……(மக)

காலமறிதலிடமறிதல்கண்டான் றிருவும்பெரியோர்கள்…… ……… ….*
சீலமறிந்துவழிபடுவான் றிருவும்பெருகுவதுசான்று …… …….*
மாலிலொருவன்றனைக்கெடுத்துவாழ்வான்றனக்குவருங்கேடு…….. *
மேலும்பெரியோர்க்கிடர்செய்வான்கேடுமிருவர்கரியன்றே ………*

(இ-ள்.) காலமும்-இடமுந்தெரிந்து நடக்கின்றவனுக் குண்டாகின்ற செல்வத்திறகும் பெரியோர்களுடைய தன்மையையறிந்துவழிபடுகின்றவனுக்கு உண்டாகின்ற செல்வத்திற்கும் பெருகிய விந்தபர்வதமே சாக்ஷியாகும்-ஆசையினால் ஒருவனைக்கெடுத்து வாழுகின்றவனுக்குண்டாகின்ற நாசத்திற்கும் யாவரும் ஏற்கப்பட்ட பெரியோர்களுக் கிடர்செய்கின்றவனுக்கு உண்டாகின்ற நாசத்திற்கும் வில்வலன் வாதாவியென்னு மிருவர்களே சாக்ஷியாகும் என்றவாறு…. …(யஉ)

கொடியவிந்தங்கண்டபவங்கொடியோன்றசையையுண்டபவநீ….. *
கடியவேண்டிக்கூட்டமுடன்சார்ந்துமுத்தாநதிமூழ்கி….. … …. .. *
யடியார்க்கெளியன்முதுகுன்றனடிகளதனையருச்சித்தான்…. .. .. *
விடிவங்கொண்டுமுதுகுன்றன்வந்துமுனிக்குநட்டஞ்செய்தான் ……. *

(இ-ள்.) அகஸ்தியமுனிவரானவர் கொடியதாகிய விந்தபர்வதம் பூமியிலழுந்தச்செய்த பாவத்தையுங் கொடியவஞ்சகிய வாதாவியினுடைய மாமிசத்தைப் புசித்தபாவத்தையும் – நீக்கவேண்டி மேற்சொல்லிய சகல கூட்டங்களோடும் விருத்தாசலத்திற்குவந்து திருமணிமுத்தாநதியில் ஸ்நானஞ்செய்து அடியார்க்கெளியவராகிய பழமலைநாயகருடைய திருவடிகளை யர்ச்சனைசெய்து வணங்கினார். அப்பொழுது பழமலைநாதராகிய பரமசிவன் திருமேனிகொண்டெழுந்தருளிவந்து அகஸ்தியமுனிவருக்கு நிருத்ததரிசனங்கொடுத்தருளினார்-எ-று (யங)

நட்டங்கண்டுகுறுமுனிவனயர்ந்துபணிந்துதிருவடியை ... ........... *
விட்டுநீங்காக்கைம்மாறேகைம்மாறென்றுமிகவுருகி .... .................. *
யட்டதிசையுமுனிவர்களையணைவித்திறையையருச்சித்தான். . . . . . *
கட்டுவிடுத்தபதம்போற்றிக்கலிங்கன்பெற்றகதையுரைப்பாம் ...*

(இ-ள்.) அகஸ்தியமுனிவரானவர் நடனதரிசனம்பண்ணிப் பேரின்பமுற்று வணங்கிநின்று சுவாமீ அடியேன் உமதுதிருவடியைவிட்டு நீங்காதபடியிலுபகாரமே தேவரீருக்கு யான்செய்யும்கைம்மாறென்று மிகவும் அன்பினாலுருகி அஷ்டதிக்குகளிலுமிருந்து வந்த முனிவரெல்லாரையும் தத்தமிடங்களிற்செல்ல விடைகொடுத்தனுப்பிவிட்டுப் பரமசிவனைச் சதாகாலமும அர்ச்சித்துக்கொண் டிருந்தார் அவரதுபந்தநீங்கிய திருவடிகளைப் போற்றிச்செய்து கலிங்கராஜன் பேறுபெற்ற சரித்திரத்தைச் சொல்லுகின்றோம் என்றவாறு ... (௰௪)

அகத்தியச்சருக்க முற்றுப்பெற்றது.

ஆக-சருக்கம் - எ - க்கு - திருவிருத்தம் (௨௱எ)

---

திருச்சிற்றம்பலம்.

எட்டாவது,

# கலிங்கச்சருக்கம்.

(வேறு.)

நல்லகுன்றநாதர்தம்மைநண்ணிமாதவஞ்செயுஞ் . . . *
செல்வர்தம்மைநிந்தைசிந்தைசெய்யினுமுரைக்கினு..... *
மல்லலாயவலகையாகியாளுறாதகானகத் ... ... ..... ......*
தெல்லையொல்லைசெல்லுவாரியாவரென்னிலோதுவாம். *

( இ-ள். ) நன்மைபொருந்திய பழமலைநாதனையடைந்து பெருமைபொருந்திய தவத்தைச்செய்கின்ற பாக்கியவான்களை நிந்தனைசெய்ய மனத்தில்நினைத்தாலும் வாக்கினால் தூஷித்தாலும் அப்படிசெய்கின்றவர்கள் துன்பரூபமான பிசாசுவடிவமாகி மனிதசஞ்சாரமில்லாதகாடுகளில் அதிகவிரைவில்சென்று திரிவார்கள் அப்படிப்பட்டவர் எவரென்றால் அவரைச்சொல்லுகின்றோம் என்றவாறு . . . . (க)

சரோருகக்கரங்கள் கொண்டு சமிதைபுற்கள் பூவிலை...... *
யுரோமசப்பிரானெடுத்துலாவுகானகத்திலே.......... *
விரோதமாம்பசாசமொன்றுமெய்நடுங்கவாய்புதைத்.. *
தரோவிறைஞ்சிநின்றதங்கணையர்கண்டியம்புவார்...... *

(இ-ள்.) உரோமசரிஷியானவர் தாமரைப்புஷ்பத்தையொத்த கைகளினால் ஓமவிறகு - தருப்பைப்புல் - பத்திரபுஷ்பங்களெடுத்துத் திரிகின்றவனத்தில் பெரியோர்களை நிந்தித்ததனாற் பிசாசுரூபம்பெற்ற ஒருவன் சரீரநடுங்க வாய்பொத்திக்கொண்டு அவ்விடத்தில் வணங்கிநின்றான் அவனைக்கண்டு உரோமசரிஷி சொல்லுகின்றார்-எ-று.(௨)

எங்கணேகுவாயுனக்கிந்தமேனிவந்ததே.............. *
ஞாங்கவென்றுகூறலுமுரோமசர்க்குரைத்திடுந்........ *
துங்கமானசூத்திரக்குலக்கலிங்கனென்பெய... ...... *
ரங்கநாடுவிங்ஙன்மேனியானவாறுகூறுகேன்............ *

(இ-ள்) நீ எங்கேபோகின்றாய் உனக்கு இந்தச்சரீரம் யாதினால் வந்தது என்று சொன்னவளவில் அந்தப் பிசாசுரூபமானவன் உரோமசரிஷிக்குச் சொல்லுகின்றான் என்பெயர் உயர்ச்சிபொருந்திய சூத்திரவமிசத்திற்பிறந்த கலிங்கனென்றுசொல்லுவார்கள், என்னுடைய தேசம் அங்கதேசம், அதுவல்லாமல் இப்படிப்பட்டசரீரம் வந்தவரலாற்றையுஞ் சொல்லுவேன் என்றவாறு.........................(௩)

துன்றுநாடுவீடுமாடுசுற்றமைந்தர்மாதரா............ *
ரொன்றிலொன்றுகுறைவுமில்லையுற்றவர்க்குமுதவவேண்
மன்றவேபசித்துநொந்துவந்தவர்க்குமிட்டியான்......*
சென்றுதுன்றுசேனையோடுதிண்ணமீதுநண்ணுநாள் *

(இ-ள்.) செல்வநிறைந்த நாடு - வீடு - மாடுகள் - சுற்றத்தார் - பிள்ளைகள் - மாதர்கள் - முதலான சம்பத்துகளில் ஒன்றிலொன்று குறைவுமில்லை அல்லாமலும் என்னையடுத்தவர்களுக்குங் கொடுத்துதவும்வன் மிகப்பசித்து வருந்திவந்தபேர்களுக்கும் போசனாதிகள்கொடுத்து இந்த வாழ்வையே சத்தியமென்றுநினைந்து என்னிடத்துவந்து நிறைந்த சேனைகளோடும் நான்வாழ்ந்திருக்கின்றகாலத்தில்-எ-று-

வாழ்வுபெற்றவாயிலென்றுவலியயோகிவந்தனை...... ....*
னாமெனக்கிருந்தகால்கைபொன்றையுமுடக்கிலேன்... *
றூழ்வறச்செய்யாமைகண்டுசந்தயோகிநிந்தையா.... ... *
லாழமுற்றசூழிவிழுந்துளச்சமற்றிருந்தவா..... ........ . *

(இ-ள்.) அயிஸ்வரியமுள்ளரை வாசலென்று நினைந்து சாபானுக்கிரக சாமர்த்தியமுள்ள ஒரு யோகீஸ்வரர்வந்தார் அவரைக் கண்டவுடன் நான் முற்செய்த கர்மவசமிருந்தபடியால் அவரை வணங்காமலுங் கைகாலொன்றையுமுடக்காமலுங் கெர்வித்திருந்தேன் அப்படி நான் குறைவில்லாத வணக்கஞ்செய்யாதிருப்பதை அந்த அழகிய யோகீஸ்வரர்கண்டு இகழ்ச்சியாய் செல்வமாகிய ஆழ்ந்த சுழியில்விழுந்து பயமில்லாமலிருந்தவனே யென்று அடியேனையழைத்து என்றவாறு (௫)

என்னவாழ்வுவாழ்வையென்றிரண்டுகையையுமெடுத்*
தன்னவன்சிரித்துநின்னையறிஞர்காணிலிரவிதன்.... .. *
வன்னமேனிகாணவேண்டுமக்களுக்குன்வாழ்வளித்..... *
துன்னுமாதவத்தினோர்பின்னலைசெல்லுகென்றனன்.

(இ-ள்.) நீ என்னவாழ்க்கை வாழ்கின்றாயென்று இரண்டுகையையுமுயரவெடுத்து அந்த யோகீஸ்வரர் நகைத்து உன்னைப் பெரியோர்கள்கண்டால் சூரியனுடைய திருமேனிகண்டு நமஸ்காரம்பண்ணவேண்டும் ஆதலால் உன்னுடைய வாழ்வை உன்பிள்ளைகளுக்குக் கொடுத்துவிட்டுச் சிவத்தியானஞ்செய்கின்ற மகா தவத்தையுடைய பெரியோர்கள் பின்னே சீக்கிரத்திற் றவஞ்செய்யும்படி போவாயென்று சொன்னார் என்றவாறு........................................ (௬)

யானுமந்தயோகிதன்னையிங்குமங்குமெங்கணுநீ.......... *
தானுலந்துமணியணிந்துதுணியணிந்துசாம்பரு....... *
மேனிரம்பவேயணிந்துமிடியனாகிவீடெலா.............. *
நீநுழைந்துதிரிதிநீபுரிந்தகர்க்குநிந்தகன் . ..... ....... *

(இ-ள்.) அதைக்கேட்ட அடியேனும் அந்த யோகீஸ்வரரைப்பார்த்து நீ இவ்விடத்திலும் அவ்விடத்திலும் எவ்விடத்திலும் இருப்பிடங்கிடையாமல் அலைந்து நல்ல ஆபரணத்துக்குக்கதியில்லாமல் ருத்திராக்ஷமணிகளைத்தரித்து நல்ல வஸ்திரத்துக்குக் கதியில்லாமல் துணி

பட்ட சீலையைச்சுற்றிக்கொண்டு நல்லசுகந்தாதிகளுக்குக்கதியில்லாமல் சரீரமுழுதும் சாம்பலைப் பூசிக்கொண்டு நல்லபோஜனாதிகளுக்குக்கதியில்லாமல், தரித்திரனாகி வீடுகள்தோறு நுழைந்து பிச்சைவாங்கித் திரிகின்றாயாகையால் நீயும் நிந்தகர்க்குநிந்தகன். எ-று..(எ)

ஆயநின்னையானகைப்பலென்றுருத்தறைந்தனன்...... *
றாயயோகிவேதியாவொர்ருத்திரப்பிசாசுநின்... ...... *
னேயமாகநன்மைசொல்லநிந்தைசொன்னநீயடா....... *
பேயதாகுவாயெனப்பிணிப்புறச்சபித்தனன்... ...... *

(இ-ள்.) அப்படியாகிய உன்னைப்பார்த்து நானுஞ்சிரிப்பேனென்றுகோபித்துச்சொன்னேன் அதுகேட்ட பரிசுத்தராகிய யோகீஸ்வரர் அதிக கோபங்கொண்டு அடா ஒப்பற்ற ருத்திரப்பிசாசே நாம் உன்னிடத்திலன்பாக உனக்கு நன்மையானவார்த்தையைச்சொல்ல அது தெரியாமல் நம்மைத் தூஷித்த நீ பிசாசுரூபமாகக் கடவாயென்று துன்பமுண்டாகச் சாபங்கொடுத்தார் என்றவாறு.............. ..... (அ)

ஈண்டவன்சபித்தல்கண்டியானுமந்தயோகிதாள்...... *
பூண்டுகொண்டுதீமையைப்பொறுக்கவேண்டுமென்றனன்
மீண்டவன்சிரித்துநீவிருத்தவெற்பிலேகினு.......... *
லாண்டரோமசன்னிருப்பனவனகற்றுமென்றனன்.. *

(இ-ள்.) இப்படியாக அந்தயோகீஸ்வரர் சாபமிட்டதுகண்டு அடியேனும் பயந்துநின்று அவருடைய திருவடிகளைப்பிடித்துக்கொண்டு எனது குற்றத்தைப்பொறுத்தருளவேண்டுமென்றுவிண்ணப்பஞ்செய்தேன் அதற்குத் திரும்பவும் அந்த யோகீஸ்வரர் நகைசெய்து நீ விருத்தாசலத்திற்குப்போனால் அவிடத்தில் என்னை யடிமைகொண்ட ரோமசமகாரிஷியிருக்கின்றார் அவர் இந்தச் சாபத்தை நீக்கிரக்ஷிப்பாரென்று திருவுளம்பற்றியருளினார் என்றவாறு........ ... (௯)

முட்டினூற்குனிந்தியான்முயன்றபோதுயோகிதாள்...... *
கிட்டுமோமுனிட்டவாழ்வுகெட்டபோதிலெய்துமோ... *
சிட்டயோகியிட்டசாபத்திட்டினாற்பிசாசமாய்........... *
விட்டனன்றெருத்தவென்னைமீண்டுதீண்டினாரிலர்... . *

(இ-ள்.) தலையைமுட்டிக்கொண்டு கீழேகுனிந்ததுபோல யோகீ

ஸ்வரருடைய சாபம்வந்தபோது பின்பு அவரை வணங்க முயன்றதி னல் அவருடைய பாதங்கிடைக்குமோ அல்லாமலும் தரித்திரம்வந்த பொழுது முன்னனுபவித்த செல்வங்களைவிரும்பினுல் அச்செல்வம் வருமோ அதுபோல அந்த மேன்மைபொருந்திய யோகீஸ்வரர்கொ டுத்தசாபத்தினுல் பேயுருவமாகினேன் அதுமுதல் மறுபடியும் என் னைத்தீண்டினபேரொருவருமில்லை என்றவாறு.... ............... .(௰)

மாறிலாதவயிரவேசர்வடுக நாதர்கிங்கரர்..... ........ . .. ... *
சோறுயாணிமற்றெருண்டி தொட்டபோதில்வெட்டுவார்
வேறிருக்கநிற்கொணுதுவெயின்மழைச்சண்வாயுவி..... *
ஆறுபட்டலைந்துலைந்துறக்கமற்றுநிம்றனன்........ ...... *

(இ-ள்.) எப்போதும் நீங்காதிருக்கின்ற வயிரவர்கள் வடுகநாதர் கள் அவர்களுடைய கிங்கரர்கள் நான் சோறு ஜலமுதலானவேறெரு பதார்த்தங்களையும் கையினுற் றொட்டபொழுது கையை யறும படிவெட்டுவார்கள் அல்லாமலும் இருக்கவு நிற்கவுமோரிடங்கிடையா மல் வெய்யிலிலும்-மழையிலும்-காற்றிலும் வருந்தி யலைந்தழிந்து நித்திரையுமில்லாமற் றிரிந்துநின்றேன் என்றவாறு.... ... ...(௰க)

எலும்பொழிந்துடம்பிலிங்கிறைச்சியில்லையென் செய்கேன்
மலங்கினேனலங்குதாகமட்டுமில்லையிந்தநோய்........... *
விலங்கவேதுலங்குநின்னைமேவினேனெனச்சொலுங்- *
கலிங்கனுக்குரோமசன்கடைக்கணுக்களித்தனன். ..... *

(இ-ள்.) என்னுடைய சரீரத்தில் அஸ்தியல்லாமல் அணுவளவாகி லும் மாமிசமில்லை-என்ன செய்யப்போகிறேன்-மிகவும் வருந்தினே ன் அதனுல்-என் சரீரமுழுதும் உளைக்கின்றது- அந்தத்துன்பத்திற்கு ஓரளவுமில்லை இந்தவருத்தமெல்லா நீங்கும்படியாகப் பிரகாசிக்கின்ற தேவரீருடைய திருவடியில் வந்து சரணுகதியடைந்தேனென்றுசொ ல்லுகின்ற கலிங்கராஜன்மேல் ரோமசரிஷியானவர் கிருபாகடாக்ஷம் வைத்தருளினுர் என்றவாறு..... ... ..........................................(௰உ)

அளித்தரோமசன்னுரைப்பனங்கலிங்கநின்வயிற்... ... *
கிளைத்தயோகிசாபமவந்துகிட்டல்பாசமோசன... . .. ..*
மூளைத்ததீயகன்மமூண்ணுமுன்னிலக்கியோகிதான்... *
விளைத்தலஞ்சலஞ்சலென்றுமெய்க்கரத்தமைத்தனன். *

(இ-ள்.) அப்படி கடாக்ஷம்வைத்த ரோமசரிஷியானவர் சொல்லு கின்றார் ஓய் அழகிய கலிங்கனே உன்னிடத்தற் பூர்ணமான யோகீஸ்வரருடைய சாபம்வந்துபொருந்தினதே உனக்கு மலபரியாக காலம் வந்துதோன்றினதாகும்முற்சனனத்திற்செய்துள்ள உனதுபாவகன் மங்களனைத்து மனுபவித்துத் தீருமுன்னிலேக்கே அந்த யோகீஸ்வரர் சாபம்நேரிட்டது ஆகையால் நீ யஞ்சாதே யஞ்சாதேயென்று உண்மையாகிய சின்முத்திரைபிடித்த கையினால் அபயங் கொடுத்தருளினார் என்றவாறு ...... ....... ........... ..... ....... ..... ... ..........(மங)

அதிகமான துறவர்யோகரையர் துய்யவேதியர்.......... ... *
மதிநிலாவுகுரவர் தன்மனைக்கண்வந்தபோதரோ........ *
விதிகளில்லையேனுடம்பைவிற்றுமொன்றைநல்கியே... .*
துதிமொழிந்துதுனையிழந்துதொன்மைநன்மைகூறுவான்

(இ-ள்.) பெருமைபொருந்திய துறவிகள்-யோகீஸ்வரர்கள்-முனீஸ்வரர்கள்-பரிசுத்தமாகிய பிராமணர்கள் - ஞானப்பிரகாசமிகுந்த ஆசிரியர்கள் ஆகிய இவர்களிலெவர்களாகிலும் தன் மனையினிடத்தில் வந்தபொழுது விவேகியானவன் தன்னிடத்தில் ஒருபொருளுமில்லாமற்போனாலும் தனசரீரத்தை ஒருவனுக் கடிமையாக விற்றாகிலும் ஏதேனுமொருபொருளைத் திரிகரணசுத்தியாகக்கொடுத்துத் தோத்திரஞ்செய்து தற்சுதந்தரமற்றுப் பழமையாகிய நன்மைபொருந்திய உபசாரவசனங்களைச் சொல்லுவான் என்றவாறு..... ...., ......... (மச)

கருணைநாயன்மார்பதங்கள்காண்டல்பாசமோசனந் ....*
தருமவாசகந்தரிப்பதேதவங்கள்கேள்விக..... .. ......*
ளொருமையாயுரைத்தல்கேட்டிருத்தல்சீவன்முத்தியா *
மருமையானபரமமுத்தியந்தயோகர்மகிழ்வதே.......... *

(இ-ள்.) கிருபாவடிவமாகிய சிவபக்தர்களுடைய திருவடிகளைத் தரிசனஞ்செய்வதுவே அஞ்ஞானநாசமாகும் அவர் சொல்லுகின்ற தர்ம்மவாக்கியத்தை மனத்திற்கொள்வதுவே பலதவங்களும் பலகேள்விகளுமாகும்-அவர் ஒருமையாகச்சொல்கின்ற வேதார்த்தங்களைக் கேட்டிருப்பதுவே ஜீவன்முத்திப்பதமாகும் - அவர் மனமகிழ்ச்சியடைவதுவே அருமையாகியமேலானமோக்ஷபதமாகும்-எ-று(ருரு)

வாழவைத்தலுங்கெடுக்கவைத்தலுந்தவத்தினோர்.. ...... *
பாழறுத்தபார்வையென்றுபற்றிநற்றவத்தினோர்........*

தாழ்வறுத்தபாததாமரைக்கணர்ச்சனைசெய்வா ......... *
சூழமுற்றருகுழியழுந்தவவரைநிந்தைபண்ணுவான் ...... *

(இ-ள்.) விவேகியானவன் நம்மை வாழ்விப்பதும்-அழிப்பதும்-தவத்தையுடைய பெரியோர்களது குற்றமில்லாத ஞானதிருஷ்டியே யென்றறிந்து நல்ல தபமுக்கியரானவர்களின் மேன்மைபொருந்திய திருவடித்தாமரைகளில் அர்ச்சனை செய்வான் அல்லாமல் அழுந்து நரகக்குழியில்விழவேண்டினவன் அவர்களை நிந்தைசெய்வான் எ-று.

கேட்டியோகலிங்கநங்களர்ந்தபார்வைவருற்பிறப் .... ... *
போட்டிமானிடப்பிறப்பளிக்களித்ததாதலா ........ ..... *
நாட்டமானநல்லமுத்தநதியின்மூழ்கிமுதுகிரிச் ....... *
சேட்டமானசிவனையின்றுதரிசியென்றுசெப்பினன் ...*

(இ-ள்) ஓய் கலிங்கனே நீகேட்பாயாக நமது கிருபாதிருஷ்டியானது உனக்கு முன்னுள்ள பேய்ப்பிறவியைக்கெடுத்து மனிதப்பிறவியைக்கொடுத்தது ஆதலால் இப்பொழுது நிலைபெற்ற நன்மைபொருந்திய திருமணிமுத்தாநதியிற்போய் ஸ்நானஞ்செய்து பழமலையின்கணெழுந்தருளிய சிறந்த பரமசிவனைத் தரிசனஞ்செய்வாயென்று ரோமசமகாரிஷி சொல்லியருளினார் என்றவாறு ....... .. (௯எ)

இனியரோமசப்பிரான்லிங்கஞங்கலிங்கனை ............ *
மனிதனாகவிடைகொடுக்கவந்துமுத்தநதியினிற்..... .... *
புனிதமாகமூழ்கியெங்கள்புண்ணியன்பதத்தையும்....... *
பனியவேர்மிகுகுழற்பதத்தையும்பணிந்தனன் ......... *

(இ-ள்.) இனிதாகிய ரோமசரிஷியானவர் பேயுருவமாகவந்தகலிங்கராஜனை மனிதவுருவமாகவிடைகொடுத்தனுப்பினவளவில் அந்தக்கலிங்கராஜனும் திருமணிமுத்தாநதியில்வந்து பரிசுத்தமாகஸ்நானஞ்செய்து எங்கள் பழமலைநாயகருடைய திருவடிகளையும் குளிர்ச்சிபொருந்திய புஷ்பங்களைத்தரித்த அளகபாரத்தையுடைய பெரியநாயகியம்மையாரது திருவடிகளையும் வணங்கிநின்றான்-எ-று.... (௯அ)

கலிங்கனீர்குதித்தலொப்பகண்கடாரைசிந்திடக் ......... *
கலிங்கனுந்துலங்குமேனிகண்டுகொண்டுகவுரிபா . . . . *
கலிங்கனேமலங்கள்செற்றகாலகாலதோலதே............. *
கலிங்கனேயெனத்துதித்தருத்தியாற்களித்தனன் ....... *

(இ-ள்.) கலிங்கலிலிருந்து ஜலமானது தத்திவிழுகிறதுபோலக் கண்களிலிருந்து ஜலமானது தாரைதாரையாய்ச்சிதறிவிழும்படியாகக் கலிங்கராஜனும் உருவாருவமாகப் பிரகாசியாநின்ற பரமசிவனுடைய திருமேனியைத்தரிசித்து உமைபவளை யிடதுபாகத்தி லுடையவனே லிங்கஸ்வரூபனே மும்மலங்களையுங் கெடுத்து ரக்ஷித்த காலாந்தகமூர்த்தியே யானைத்தோலைபாடையாகத்தரித்தவனேயென்று அன்பினுற் றோத்திரஞ்செய்து மனக்களிப்படைந்தான் - எ-று...(கூ)

பொருந்திராஜபோகமும்புரந்தராதிபோகமு ............ *
மருந்திநற்கலிங்கனத்தர்சுற்றமுத்திபெற்றனன் ........ *
திருந்துமாதவத்திேனார்கள்சேவையோர்க்குநிந்தைதான்
காந்துளாத்தவர்க்குமக்கலிங்கன்சான்றுகாணிமில........ *

(இ-ள்.) இகத்திற்பொருந்திய ராஜபோகங்களும் பரத்திலடையத்தக்க தேவேந்திராதி போகங்களுமனுபவித்தொழித்து நல்ல கலிங்கராஜனும் பரமசிவனடியார்கள் பெறுகிற மோக்ஷத்தைப் பெற்றான் ஆதலால் திருவுருவமாகிய மகா தவசிரேஷ்டர்களுடைய தரிசனஞ்செய்தபேர்களுக்கும் அவர்களைத் தூஷித்தபேர்களுக்கும் அந்தக் கலிங்கராஜனே சாக்ஷியாகும் என்றவாறு..... ... ............ ........... (உ0)

தீயவாயிளம்பிறின்றசிதடரும்பராக்கினின்.................. *
மாயகூவல்வாய்விளிம்பின்மைந்தருந்நிகர்த்திடுஞ் ...... *
சேய்கள்பின்னரும்பிறந்துசெல்வராவர்தீயவாய்........ *
நாய்களோர்மொழிக்கொரோர்நரகமுற்றுழலுமால்..... *

(இ-ள்.) பெரியோர்களைத் தூஷணையாக நிந்தித்த மூடர்களும் பாக்கோடும் இடிந்த கரையையுடைய கிணற்றருகனின்ற சிறுவர்களும் சமானமாவார்கள் அங்ஙனங் கிணற்றருகில்நின்று விழுந்த சிறுபிள்ளைகள் திரும்பவும் பிறந்து செல்வத்தையடைவார்கள் அதுபோலப் பெரியோர்களை நிந்தித்த கொடியவாயையுடைய நாய்களானது நிந்தைசெய்த ஒவ்வொருசொல்லுக்கு ஒவ்வொரு நரகத்திலுழன்று வருந்துவார்கள் என்றவாறு..... ............................................. (உக)

கலிங்கச்சருக்க முற்றுப்பெற்றது.

ஆக-சருக்கம் - அ - க்கு - திருவிருத்தம் (உ௱உஅ)

திருச்சிற்றம்பலம்.

ஒன்பதாவது,

# கலிமலர்ச்சருக்கம்,

(வேறு.)

பூதநாயகர் திருமுதுகுன்றினிற்புகழைச் ...... *
சூதரோதுமென் றிருடிகடொக்குநின் றுரைப்ப ...... *
வோதுவாருருத்திரசங்கிதைதன்னி ...... *
லாதிநாளினிலருங்கலிதொலைத்தவப்புராணம். ...... *

(இ-ள்.) நைமிசாரண்யவாசிகளாகிய முனியீஸ்வரர்களனைவருஞ் சேர்ந்து சூதமுனிவரை வணங்கி நின்று ஓய் சுவாமீ அடியேங்கள் கேள்விப்பட்டு ஈடேறும்படியாகச் சகல ஜீவநாயகனாகிய பரமசிவன் எழுந்தருளியிராநின்ற அழகிய விருத்தகிரியின் பெருமையைத் திருவுளம் பற்றியருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தவளவில் அந்தச் சூதமுனிவரும் பிரகாசிக்கின்ற ஸ்காந்தத்தில் உருத்திரசங்கிதையிற் சொல்லப்பட்டிருக்கின்ற முற்காலத்தில் அரியகலியைத்தொலைத்தருளிய அந்தச் சரித்திரத்தைச் சொல்லுகின்றார் என்றவாறு..... (க)

சனற்குமாரரோதலைவராமுனிவர்கள் சென்று ...... *
கனத்தமேருவினான்முகன் கழலிணையிறைஞ்சி ...... *
மனக்கருத்தினையுரைப்பதாய் நின்றனர் மலரோ ...... *
னினைத்துளோர் மனக்கவலைகளென்கொலென் றிசைத்தான்.

(இ-ள்.) சனற்குமாரர் முதலானவராகிய முனியீஸ்வரர்களெல்லாரும் பெருமைபொருந்திய மகமேருகிரியினிடத்திற்சென்று பிர்ம்மதேவருடைய இரண்டுபாதங்களையும்வணங்கித் தங்களுடையஎண்ணத்தைச் சொல்வதாக நின்றார்கள். பிர்ம்மதேவரும் அங்ஙனங் கூட்டமாக நின்ற முனிவர்களைப்பார்த்து ஓய் முனிவர்களே உங்களுக்குச் சம்பவித்த மனோதுக்கமென்னவென்று கேட்டருளினார்-எ-று.

அடனேநோக்கிநின்றருஞ்சனற்குமாரருமறைவார்........*
மயருெம்வன்கலிவசத்தானுன்மாதவரியாருநீ ...............*
துயரமுற்றனர்சூத்திரனுயினன்வேந்தன் ................ *
புயன்மறுத்ததுபூசையுந்தேவர்கட்கில்லதால் .............*

(இ-ள்.) அங்ஙனம் வினவின பிரம்மதேவனைப்பார்த்து நின்று அரிய சனற்குமார முனிவரும சொல்லுகின்றார் ஏய் பிரம்மதேவரோ முனியீஸ்வரர்களெல்லாரும் மயக்கத்தைத்தருகின்ற வலிமையொருந்திய கலியின்வசப்பட்டதினால் துன்பத்தை யடைந்தார்கள் - அரசனுஞ் சூத்திரனாகிவிட்டான் - மேகமும மழை மறுத்தது - அதனால் தேவர்களுக்குப் பூசையுமில்லை என்றவாறு ..... .... .............. (௩)

தன்மதானமுந்தவங்களுமிறந்தது வேதக் ..... ....... *
கன்மநீத்தனர்கண்டவர்மறைபடிக்கின்றார்..... .. .... *
மன்னர்ஏவலின்மறையவர்நிற்கின்றார்மறையி..... .... .. *
னன்மையெண்ணிலரோதிலர்நிந்தையேறவில்வார் ......*

(இ-ள்.) தர்ம்மங்களும் - தானங்களும் - தவங்களு மில்லாமற் போய்விட்டது. வேதவழியாகச் செய்கின்ற சற்கருமங்களையுமொழித்துவிட்டார்கள் கிரமமில்லாமல் கண்டவர்களெல்லாம் வேதபாராயணஞ் செய்கின்றார்கள். அரசர்களுடைய ஏவலின்வழியே பிராமணர்கள் செய்யாநின்றார்கள். வேதங்களிற் கூறிய நன்மைகளை நினைத்திலர் ஓதுகின்றிலர் தூஷணையேசொல்லுகின்றார்கள்.எ-று...(௪)

உத்தமக்குணம்விட்டனரியோகமும்விட்டார்.... ..... .. *
சித்தியெட்டையும்விட்டனர்செபங்களும்விட்டார்.......*
புத்திமேற்புலன்போகலாற்பொறுமையும்விட்டார்..... *
முத்திதன்னிலுங்குடும்பநன்றென்றனர்முனிவர்.........*

(இ-ள்.) முனியீஸ்வரர்களெல்லாரும் உத்தமமாகிய குணங்களை விடுத்தார்கள் - யோகஞ்செய்வதையும் விடுத்தார்கள் - அஷ்டசித்திகளையும் விடுத்தார்கள் - செபஞ்செய்வதையும் விடுத்தார்கள்-விஷயவழியாக விவேகஞ் செல்லுதலால் சாந்தத்தையும் விடுத்தார்கள்- மோக்ஷத்தைப்பார்க்கிலுங் குடும்பமே நன்மையையுடையதென்று வாழுக்கின்றார்கள் என்றவாறு.......................... ..... .. ..... .... ... (௫)

மாதர்வார்த்தையுமைந்தர்கள்வார்த்தையுமேலாய்ச்.....*
சாதியில்லவர்பெரியராய்ச்சற்குருவுடனே..................*
வாதுசெய்குனர்மைந்தர்கள் வஞ்சிவபூசை .... ... ......*
நீதியில்லபாற்குத்திரபூசையேநிகழ்ந்தார் ... .... ......*

(இ-ள்.) மனையாளுடைய சொற்களும் பிள்ளைகளுடைய சொற்களுமே மேன்மையாகின்றது. சாதியீனர்கள் சாதியிலுயர்ந்தவர்களானார்கள். சீஷர்கள் ஆசிரியர்களிடத்தில் தாங்கள் கற்ற கல்வியகங்காரத்தினால் தர்க்கஞ்செய்பவர்களாகினார்கள். வளப்பம்பொருந்திய சிவபூசைவிதியைவிட்டுவஞ்சகமாகியபூசையேசெய்கின்றார்கள்-எ-று.

பொய்களையொழிந்துண்மையையாவரும்புகலார் .... *
துப்யபாகமுஞ்சூத்திரர்செயும்படிதொடுத்தார்.........*
மையல்வேட்கையுமங்கையர்கோட்டியுஞ்சூதும்.........*
வெய்யமாதனந்தேடலுமாயினன்வேந்தன் ... ..........*

(இ-ள்.) எவர்களும் அசத்தியவசனத்தைப் பேசுகின்றதேயல்லாமல் சத்தியவசனத்தைப் பேசார்கள். சூத்திரர்களெல்லாம் பரிசுத்தமாகிய வேள்விகளைச் செய்யும்படியெத்தனப்பட்டார்கள் அரசனானவன் மோகவிருப்பமும் ஸ்திரிகள் சங்கமமும் - சூதாடுவதும் நடுவுநிலைமையில்லாமல் மகாகொடுமையானவழியில் திரவியத்தைத்தேடுவதுமாகினான் என்றவாறு ............................................ (எ)

ஒருவர்செய்யுமாசாரமற்றொருவர்செய்கின்றார்.......*
தருமவேடத்தையாவருந்தரிக்கிலரியாரு.............*
மிருவர்காண்பருமொருவனையிகழ்ச்சிசெய்கின்றார்........*
பொருளின்மேற்கருத்தாயினர்மெய்ப்பொருள்போட்டார்.

(இ-ள்.) ஒருவர் செய்யத்தகுந்த ஆசாரங்களைச் செய்யத்தகாத வேறொருவர் செய்கின்றார்கள் எவர்களும் புண்யவேடமாகிய சிவவேடத்தைத் தரிக்கின்றிலர் பிரம்மவிஷ்ணுக்களாகிய இருவராலும் காண்டற்கரிய ஒருவனாகிய பரமசிவனை எவர்களுந் தூஷிக்கின்றார்கள் திரவியந்தேடுவதில் நினைவுகொண்டவர்களாகி உண்மைப்பொருளாகிய ஆத்மஞானத்தை விசாரித்துத் தேடுகின்ற நினைவைவிட்டுவிட்டார்கள் என்றவாறு ........................................... (அ)

குடும்பசாகரந்தன்னிலேகொலைகளவாதி ............ .. *
யிடும்பையாகியமுதலைவந்திழுத்தனவவைதாம் ........ *
விடும்படிக்குநீமீகாமனாகிநில்லென்றார் .... ................ *
நடுங்கியக்கலிதொலைந்திடநான்முகனவில்வான் ..... *

(இ-ள்.) குடும்பமாகிய சமுத்திரத்தில் கொலை களவு முதலான துன்பமாகிய முதலைகள்வந்து எங்களை யிழுக்கின்றன ஆதலாலவைகள்விட்டு நீங்கும்படியாக நீர் மாலுமியாகிநின்று கரையேற்றி ரக்ஷிக்கவேண்டுமென்று சனற்குமாரரிஷி சொன்னார் அதுகேட்டுப் பிரம்மதேவரும் யாவரு நடுங்குகின்ற அக்கலி நடுங்கி நீங்கும்படி ஒரு சூக்ஷியைச் சொல்லுகின்றார் என்றவாறு.. ......... ......... (௯௯)

கலிமலர்ப்பதியென்றொருதலமுளகருத்தி...... ......*
னலியுமிக்கலியெந்தநாளினுமில்லை ...................... *
மலியுநோய்விடுமவண்பாரசத்தியுஞ்சிவமு..... .... *
நிலவுமத்தலநித்தியகல்யாணமாய்நிற்கும்... ......... *

(இ-ள்.) கலிமலர்ப்பதியென்று ஒரு ஸ்தலமிருக்கின்றது அந்த ஸ்தலத்தில் மனத்தைவருத்துகின்ற இந்தக் கலியானது ஒரு காலத்திலுமில்லை அந்த ஸ்தலத்திற்சென்றவர்களுக்கு அதிகரிக்கின்ற வியாதிகள் நீங்கிப்போம், அந்த ஸ்தலத்தில் அககிளியுஞ் சூடும்போல் அற்புதமாய் சத்தியுஞ் சிவனும் பிரகாசிப்பார்கள், அந்த ஸ்தலமானது எப்போதும் நித்தியமங்களமாய்ப் பிரகாசிக்கும். எ-று.. (௱)

பழமலைப்பதியாகியகலிமலர்ப்பதியின் ....... ......... *
முழுதும்வித்தையுஞ்சித்தியுமுத்தியுமுண்டு ............ *
செழியபூசையாற்சிருட்டியாம்பெற்றனமங்கே, ...... ..*
வழுவின்மாயனும்வஞ்சரைவெல்வரம்பெற்றான் ....*

(இ-ள்.) விருத்தாசலஸ்தலமாகியகலிமலர்ப்பதியினிடத்தில்போய் தரிசித்தவர்களுக்குச் சகலவித்தைகளு மனோசித்திகளு மோக்ஷமுமுண்டாகும் முற்காலத்தில் நாமும் அந்தஸ்தலத்திலிருந்து வளம் பொருந்திய சிவபூசையைச் செய்தபடியினால் சிருஷ்டித்தொழிலைப் பெற்றோம். அல்லாமலும் குற்றமில்லாத விஷ்ணுவும் அந்தஸ்தலத்தில் சிவபூசைசெய்து வஞ்சகராகிய ராக்ஷதர்களைச் செயிக்கும்படியான வரத்தைப்பெற்றார் என்றவாறு......... ... ...............(௱க)

மத்தியார்ச்சுனத்திருந்தவர்வரமுநாம்பெறாத ...... *
நித்தியத்துவம்பூசையாற்பெற்றனர்நினைக்கிற் ............ *
சித்தியாகியவர்ச்சியர்சிவார்ச்சனையாலே .................. *
பித்திலாமறையத்தமுஞ்சித்தியும்பெற்றார் ............... *

(இ-ள்.) மத்தியார்ச்சுனமென்னும் திருவிடைமருதூரிலிருந்து தவஞ்செய்த ஒருபெரியவரும் பழமலையிலிருந்து சிவபூசைசெய்து சகல வரங்களையும் பெற்று நாம் அடையாத நித்தியத்துவத்தையுமடைந்தார் அல்லாமலும் நினைக்குமளவில் எண்வகைச் சித்திகளுங் கைவசமாகத்தக்க வர்ச்சியரிஷியும் அந்தஸ்தலத்திலிருந்துசிவபூசை செய்ததினாலே மயக்கமில்லாதவேதார்த்தத்தையும் சகலசித்திகளையுமடைந்தார் என்றவாறு ................................................ (யஉ)

சுக்கிரன்சிவபூசையாற்சிருக்கதானவர்க்கே ................ *
மெய்க்குருத்துவமிருதசஞ்சீவனம்பெற்றான் ......... *
றக்கசித்துப்புஞ்சிகண்டியுந்தானதிற்றரித்தான் ............ *
மக்கண்மித்திரர்கௌசிகர்மறைமுனியானார் ........... *

(இ-ள்.) சுக்கிராசாரியரும் விருத்தாசலத்திலிருந்து சிவபூசை செய்து ராக்ஷசகூட்டங்களுக்கெல்லாம் உண்மையான ஆசிரியத்துவமும் மிருதசஞ்சீவனமென்கின்ற மந்திரசித்தியையும் பெற்றார் சிகண்டியென்கின்ற பெரியவரும்அந்தஸ்தலத்திற்சிவபூசைசெய்துதகுதியான சகலசித்திகளையும்பெற்றார் விசுவாமித்திரமுனியும் அந்தஸ்தலத்திற் பிள்ளைகளோடும் உறவினரோடுமிருந்து சிவபூசைசெய்துவேதமுனிவரானார் என்றவாறு ................................ (யா)

வசிட்டருப்பழமலையனாப்புதுமலராலே .............. *
விசிட்டபூசையுஞ்செய்தளர்வேள்வியுஞ்செய்தார் ....... *
நசிப்பில்வேள்வியின்முனிவரோடகத்தியர் நண்ணிப் ... *
புசிக்கவாங்கினரவிப்பினைமுனிவரும்புசித்தார் ........ *

(இ-ள்.) வசிஷ்டமுனிவரும் பழமலை நாயகனைப் புதிதாகிய மலர்களைக்கொண்டு மேன்மையான பூசைகளுஞ் செய்து யாகமுஞ்செய்தார் அங்ஙனஞ் செய்த-கெடாத-யாகசாலையில் அகஸ்தியமுனிவரும் பலமுனிவர்களுடனேவந்து கைமேந்தி அவிர்ப்பாகத்தைவாங்கிப் புசித்தார் மற்றமுனிவர்களும் வாங்கிப்புசித்தார்கள். எ-று ... (யச)

இந்திரன்முதற்கடவுளரேனையதேவர் . ... ............. ... *
சந்திரன்பகல்சதுமறைவந்தவிகொண்டார்... ............ *
நந்தரத்துநம்பழமலைநாதனும்வடிவாய்... ....... ... *
வந்திருந்துதன்கையினுல்வாங்கினனவியே... .............. *

(இ-ள்.) இந்திரன்முதலான அஷ்டதிக்குப்பாலரும் மற்றதேவர்களும் - சந்திரனும் - சூரியனும் - நான்கு வேதங்களும் அந்தயாகசாலையில்வந்து அவிர்ப்பாகத்தைக்கொண்டார்கள் அப்பொழுதுநமது பழமலைநாயகரும் நம்போல உருவங்கொண்டெழுந்தருளிவந்து அவர்களோடிருந்து தமது திருக்கரங்களால் அவிர்ப்பாகத்தை வாங்கிப்புசித்தார் என்றவாறு ...................................... ........ ... ..... (யரு)

அண்டரந்தநாளசுரரைவெல்லுவான்றிரண்டு... ..... .... *
மிண்டிவந்தனரசுரருந்வேலையிலொளித்தார் ........... *
கண்டகத்தியன்கடலினீர்கையினுல்வாங்கி............ ..... *
யுண்டபின்வெளியாயினரசுரரையொழித்தார் . ........ *

(இ-ள்) முற்காலத்தில் ராக்ஷசர்களைச் செயிக்கும்படி நினைந்து சகலதேவர்களுங் கூட்டமாகக்கூடிவந்தார்கள் அப்பொழுது ராக்ஷசர்களெல்லாரும் சமுத்திரத்திலொளித்துக்கொண்டார்கள். அதுகண்டு அகஸ்தியமுனிவரும் சமுத்திரசலத்தைக் கையில் வாங்கி ஆசமனமாகவுட்கொண்டபின்பு ராக்ஷசர்கள் வெளிப்பட்டார்கள் அந்தச்சமையத்தில் அவர்களெல்லாரையுந் தேவர்கள் சங்கரித்துவிட்டார்கள் என்றவாறு .... ...... ..... ....... ................. .. . ...(யசு)

இவர்களெண்ணினபெற்றனரேனையமுனிவோர்... .. . . *
தவர்கடேவர்கடலத்தினர்பிலத்தினர்தக்கோ..... ....... ..... *
ரெவர்களும்முதுகுன்றனையிறைஞ்சிடவரங்க... . . ..... *
ளவரளித்தனர் நீவிருஞ்செல்லுமென்றறைந்தார்....... *

(இ-ள்.) நாம் இப்போது சொல்லிய இவர்கள் எல்லாரும் நினைத்தவரங்களைப் பெற்றார்கள் அல்லாமலும் மற்ற முனிவர்களும் - தம்பாதனர்களும் - தேவர்களும் - பூலோகத்தாரும் - நாகலோகத்தாரும் - மற்றப் பெரியோர்கள் யாவர்களும் அந்த ஸ்தலத்திற் சென்று பழமலைநாதனை வணங்க அவரும் அவர்களுக்குச் சகல வரங்

களையுங் கொடுத்தாளினார் ஆதலால் நீங்களும் விருத்தாசலத்திற்குச் செல்லுங்களென்று சனற்குமாரமுனிவர் முதலிய சகலமுனிவர்களுக்கும பிர்ம்மதேவரனுக்கிரகஞ் செய்தார் என்றவாறு. ........ (மஎ)

திசைமுகன்றிருவாக்குபதேசமாக்கொண்டு............ *
நசையினுண்முதுகுன்றின்முனிவர்கணண்ணி ........ *
யிசையுமஞ்சனமலர்கடங்கரத்தினுலெடுத்து.......... .... *
வசையிலாதமுத்தாநதிப்புண்ணியமடுவில் ... ............ *

(இ-ள்.) அதுகேட்ட சகல முனிவர்களும் பிர்ம்மதேவருடைய திருவாக்கை உபதேசமாகக் கொண்டு விருப்பத்தோடும் விருத்தாசலத்திற்குப் போய்ச்சேர்ந்து தங்களுக்கிசைந்த திருமஞ்சனமும் பத்திரபுஷ்பங்களும் தங்களுடைய கைகளாலெடுத்துக்கொண்டுகுற்றமில்லாத திருமணிமுத்தா நதியின்கணுள்ள புண்ணியமடுவினிடத்தில்வந்து என்றவாறு ...... .. ..... .... ...................... ........ (மஅ)

மூன்றுகாலமுமூழ்கிநம்முதுகிரியினறயை...... ......*
மேயன்றபூசையுமியற்றினர்வலஞ்செய்துசெபித்தார்...*
மான்றிடுந்துயர்மறனர்வரங்களுப்பெற்றூர்..... ........*
தோன்றிஞானமுங்கலியிலாச்சுகத்தையுமடைந்தார்...*

(இ-ள்) திரிகாலங்களிலும் ஸ்நானஞ்செய்து நமது பழமலைநாதரைமேன்மையாகப்பூசித்துபிரதக்ஷணஞ்செய்துசெபஞ்செய்தார்கள் அங்ஙனஞ் செய்தபொழுது மயக்குகின்ற துன்பநீங்கிச் சகலவரங்களையும பெற்றூர்கள். அதனால் பிரமஞானமுமுண்டாகிக் கலியில்லாத சுகத்தையும் பெற்றூர்கள் என்றவாறு ...................... (மகூ)

உலத்தியாக்கையையொறுத்தலும்வெறுத்தலுமின்றித்*
தலத்துமுக்கயஞ்சிறிதுகாலத்தினிற்றவங்கள் ..... ....... *
பலித்ததென்றுதாந்தங்களிலதிசயப்பட்டுப் ....... ...... *
புலப்படத்தலத்திருந்தனர்பூசையேபுரிந்தார்........... *

(இ-ள்.) சரீரத்தையுலத்தி ஒறுத்தலும் வெறுத்தலுமில்லாமல் இந்தஸ்தலத்தின்விசேஷத்தினால் சிறிது நாளில் தபோபலன்கள்சித்தியாயிற்றென்று சகலமுனிவர்களும்தங்களுக்குள் ஆச்சரியப்பட்டுஅந்தஸ்தலத்தில் ஸ்திரமாகவிருந்து சிவபூசைசெய்தார்கள். எ-று (உம)

கலிமலர்ச்சருக்க முற்றுப்பெற்றது.

ஆக-சருக்கம் - கூ - க்கு - திருவிருத்தம் (உாசஅ)

(உரு)

திருச்சிற்றம்பலம்.

பத்தாவது,

# சுவேதச்சருக்கம்,



அருமைமாதவரிடைவிடாதிருந்தனரப்பா ............... *
லொருதுவாபரயுகத்தினிற்சுவேதனென்றொருவன் ..... *
குருகுலத்தினின்மன்னவனைம்பதுகோடி ................ *
பிருதிவிப்பரப்பாண்டனன் பெருவயதிருந்தான் ...... *

(இ-ள்.) அந்த ஸ்தலத்தில் அருமையாகிய முனிவர்கள் இடைவிடாமல் சிவபூசைசெய்திருந்தார்கள். அப்பால் ஒரு துவாபரயுகத்தில் குருகுலத்திற்பிறந்துள்ள சுவேதனென்று பெயராயுடைய ஓரரசன் ஐம்பதுகோடி யோசனை விசாலமுள்ள பூமிமுழுதும் ஏகசக்கிராத்தினால் ஒரு குடைநிழலில் அரசாக்ஷிசெய்து முதிர்ந்த வயதையுடையவனாகியிருந்தான் என்றவாறு ........................................(க)

மகாரவக்கரம்வல்லினந்துறந்திடையினத்தி .. .... ... .. *
யிகலறுத்தினமாகியநகரமத்துறுய் ... ... ................ ... *
வகரவக்கரத்தடங்கிடவொடுக்கமற்றவைபோற் .......... *
றகளிலாவினஞ்சேர்ந்துறந்தவர்பானின்றான் ...... *

(இ-ள்.) மகாரவக்ஷரமாகிய திரோதாயியை வல்லினமாகிய சிகாரவக்ஷரத்தைவிடுத்து இடையினமாகிய யகாரவக்ஷரமென்னும் ஆன்மாவிற்பிறவறவொடுக்கி நகாரவக்ஷரமாகிய மலத்தை வகாரவக்ஷரமாகிய அருளிலொடுக்கி அவைகளையொடுக்கினதுபோலக் குற்றமற்ற இலிங்கமென்னும் யகாரவக்ஷரமாகிய ஆன்மாவை வகாரவக்ஷரமாகிய அருளிலொடுக்கி அவ்வருளும் சிகாரவக்ஷரமாகிய சிவமும் பேதமற்ற அபேதமான அத்துவிதானந்தநிலையில் விளங்குகின்ற மூர்த்திகளான பெரியோர்களிடத்தி லனுசரித்திருந்தான் சுவேதராஜன்-எ-று.

(இதற்குதாரணம், நிஷ்டானுபூதிவிளக்கம்.)

நகரமொடுமகரங்கள் சடந்தருங்காரணமா - நாடுமிவை நீங்கியிடு வகையைநவிலுதுங்கேள், வகரத்தினகரமுதல் யகரத்திற்றன்னை

மகரமுநீங்கிமெரிய சிகரமனு தன்னால், யகாலயம் வகரமுந்தான்
சிகரத்திலாமசுக - மாகுமிறை நீங்கவுயிர் முத்தியெய்துமென்றே,
தகரதமுங் கரியகுழ னகமாதுக் கிறையன் - றனதுதிரு வுளமகிழ்ந்து
சாற்றினனன்குணர்ந்தே........................................(உ)

வேற்றுமைப்பெயர்விரிந்தவும்பலபெயர்க்கொருபேர்.. *
தோற்றுமென்னவுமாற்றலர்க்கனந்தமாய்த்தோன்றி.. *
யாற்றுபேர்வினையெச்சமெநஞ்சவர்களுக்குதவித் ....... .. *
தோற்றுமெய்க்குயிரெழுத்தெனத்துணைசெயூச் செறிந்தான்.

(இ-ள்.) வேற்றுமைவகையால் ஒருபொருளுக்குப் பலபெயர்விரிந்ததுபோல வெவ்வேறு குணங்களாலே அநேகமாகவிரிந்த பெயர்களையுடையவனாகியும் அப்படிவிரிந்தபலபெயர்களுக்கும் ஒருபொருளே தோற்றுவதுபோலச் சத்துருக்களுக்கு அநேகனாகியுந் தன்னையடுத்தவர்களுக் கொருவனாகியுந்தோன்றி பெயரெச்ச வினையெச்சங்களின் வகையைத் தெரிந்து செய்யுளியற்றுங் கல்விநிறைந்தயனத்தையுடைய புலவருக்கு வேண்டியவைகளையுதவி பெரிய காரியங்களின் குறைவை முடிக்க மனவாற்றலையுடைய காரியக்காரர்களிடத்து அக்குறைவுகளை முடிக்கக்கொடுத்தும் தோன்றுகின்ற மெய்யெழுத்திற்கு உயிரெழுத்துதவியாயிருப்பதுபோல யாவருக்கும் உதவிசெய்திருந்தான் என்றவாறு.......................................(௩)

கூப்பிலைம்பதுகோடியோசனையுலகாண்டோன் .......... *
பூப்பிரதக்கனம்பண்ணினான்பூங்குழற்றேவி .... ......... *
வாய்ப்பிலந்தநாண்மாண்டனண்மரணவேதனையைத்...*
தாப்புமன்னவன்கண்டனன்கொண்டனன்றளர்வே..... *

(இ-ள்) குறைதலில்லாத ஐம்பதுகோடியோசனை விசாலமுள்ள பூமிமுழுதும் அரசாக்ஷிசெய்த சுவேதராஜனானவன் தனதுமனையவளோடுமே பூப்பிரதக்ஷணஞ்செய்தான், அங்ஙனஞ் செய்தகாலத்தில் புஷ்பமாலையணிந்த அளகபாரத்தையுடைய மனையவள் ஆயுஷியக்குறைவினாலிறந்துவிட்டாள் அவள் பட்டமரணவஸ்தையை அருகலிருந்த சுவேதராஜன்கண்டு மனத்தளர்ச்சியடைந்தவனாகி- எ-று....(௪)

குதுகுதுத்துமன் சுக்கிரன்பதந்தலைக்கொண்டான் ...... *
கதுமெனச்சிவகதியுபதேசமும்பெற்றான் ............ ..... *
விதிர்விதிர்ப்புடன்மிருதசஞ்சீவனப்பெற்று .. .... .... *
னொதுமறச்சமனைப்பிடாத்தலமெனவெழுந்தான் ...... *

(இ-ள்.) சுவேதராஜனானவன் குதுகுதுப்பாகிய துன்பமடைந்து சுக்கிரபகவானுடைய திருவடிகளைச் சிரமேற்கொண்டு அதிதீவிரமாகச் சிவசாயுச்சியத்தைத்தருகின்ற ஞானவுபதேசமும்பெற்று அதிக நடுக்கத்தோடும் மிருதசஞ்சீவனமென்னு மந்திரசத்தியும்பெற்று கொடூரமான யமவாதை பொருந்தாத ஸ்தலம் எந்த ஸ்தலமென்று விசாரித்து எழுந்து புறப்பட்டான் என்றவாறு ... ...... ..... ... (௫)

காவிரிப்புனன்மூழ்கினன்கரிவனமிறைஞ்சிக் ............ *
காவிரித்தெழுதவத்துறைகளமழபாடி .. .... .... ....... *
மாவிருக்குமையாறுடனவதிட்டையும்பணிந்தான் ....... *
மாவிருப்புறுமுனித்துவம்வதிட்டையிற்பெற்றான் ...... *

(இ-ள்.) சுவேதராஜனானவன் காவிரிநதியில் ஸ்நானஞ்செய்து திருவானைக்காவை வணங்கிப் பூஞ்சோலைகள் விரிந்துவளர்கின்ற திருத்தவத்துறையும் பெருமைபொருந்திய திருமழபாடியும் லக்ஷ்மிவாசஞ்செய்கின்ற திருவையாறும் - திருவதிட்டையும் போய் வணங்கி அந்தத் திருவதிட்டையென்னுந்தலத்தில் யாவரும் அதிக விருப்பங்கொள்ளுகின்றசுவேதமுனிவனென்னும்பெயரையும்பெற்றான். எ-று.

கிரியிராசனைக்கெழுமிமுத்தாநதிமூழ்கித் .. .......... .. *
திரிவலஞ்செயூத்திருமுதுகுன்றனைப்பணிந்து ...... ..... *
பரிவினாற்குறுமுனியையும்பணிந்தருந்தவங்கள் ........ *
புரிதரத்தலம்புகன்றருள்செய்கெனப்புகன்றான் .. ....... *

(இ-ள்.) சுவேதராஜனானவன் மலைகளுக்குட் சிரேஷ்டமாகிய விருத்தாசலத்திற்குவந்து திருமணிமுத்தாநதியில் ஸ்நானஞ்செய்து அழகிய பழமலைநாதனை மூன்றுதரம் பிரதக்ஷணஞ்செய்து வணங்கி அன்பினால் அகஸ்தியமுனிவனையும் வணங்கிநின்று சுவாமீ அடியேன் தவங்கள் செய்யும்படி மேன்மையான ஒரு ஸ்தலத்தை யனுக்கிரகஞ் செய்யவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தான் என்றவாறு. ... (௭)

விருத்தவெற்பினிற்றவஞ்செயின்மிருத்துவமில்லை..... *
திருத்துபிங்கலன்கோசிகன்றேவரிறம்பெரியோர்.. .... *
பெருத்தநான்முகன் பூசையாற்பெருவரம்பெற்றூ......*
பொருத்தர்வந்தவர்வரப்பெறாதொழிந்தவரில்லை......... *

(இ-ள்.) இந்தவிருத்தாசலத்தில்தவஞ்செய்தால் அவர்களுக்கு இறப்பில்லை. அல்லாமலும் குறைவற்ற செல்வத்தையுடைய குபேரனும், விஸ்வாமித்திரமுனியும், தேவர்களிற்சிறந்த பெரியோர்களும், பெருமைபொருந்திய பிர்ம்மதேவரும் இத்தஸ்தலத்திற் சிவபூசைசெய்து பெரிதாகிய வரங்களைப்பெற்றூர்கள். இத்தஸ்தலத்தில் வந்தவர்களில் வரம்பெறாமற் போனவர்களொருவருமில்லை என்றவாறு..........(அ)

அநாதியாஞ்சுயம்புலிங்கமுமருளுறு நதியும்............. *
வினாவிவேலர்தம்மேவலாலுமயிங்கணைத்து .............. *
பினாதியோகமுஞ்சித்தியுஞானமும்பெற்றோம்............ *
மனாதியாலுமித்தலத்தினையளக்கலாம்வகைத்தோ ........ *

(இ-ள்.) அனாதியாகிய சுயம்புலிங்கத்தின் பெருமையும், அருள்வடிவமாகிய திருமணிமுத்தாநதியின் பெருமையும், எமது ஆசிரியராகிய வேலாயுதத்தையுடைய சுப்பிரமணியக்கடவுளனுக்கிரகஞ் செய்யக்கேட்டு அவரது ஆக்கினையினால் நாமும்இந்தஸ்தலத்திற் தவஞ்செய்து பூசித்தபின்பு சிவயோகமுஞ் சகலசித்திகளும் பிரமஞானமும் பெற்றோம். ஆதலால் இந்தஸ்தலத்தின் மகிமையை மனமுதலானவைகளாலும் அளவிட்டுச் சொல்லலாகுமோ என்றவாறு ... .................(௯)

நீபுரிந்மனக்கவலையை நீக்கியித்தலத்திற்................ *
றூயமாதவஞ்செய்யெனச்சொற்றனன்முனிவ.......... *
ளுயமன்னனுமகத்தியனுரைத்ததைநயந்து............... *
காயவாழ்க்கையைக்கானலுங்கனவுமாய்க்கருதி ........... *

(இ-ள்.) ஆகையினால் நீயும் இந்தஸ்தலத்திலிருந்து உன்னுடைய மனோசஞ்சலத்தை யொழித்துப் பரிசுத்தமாகிய மகாதவத்தைச்செய்வாயென்று அகஸ்தியமுனிவர் சொல்லியருளினார் அதுகேட்டு அந்தச் சுவேதராஜனும் அகஸ்தியமுனிவர்சொன்ன வாக்கியத்தை உடல்

தேசமாகக்கொண்டு சரீரவாழ்க்கையைக் கானற்சலமுங் கனவிற்கண்டபொருளுமாக நினைந்து என்றவாறு............................(௰)

சீதளப்பசுஞ்செம்பொனுன்மேய்ந்துநித்திலத்தாற் *
பாதலப்பணிமணியினுற்பத்தியிற்குயிற்று ............ *
மிதலத்தினின்மின்னிளங்கொடிமுலைத்தடந்தோய் *
மாதளைத்திருமலர்நிற மன்னனுந்துறந்து ................ *

(இ-ள்) குளிர்ச்சியையுடைய பசுமைதங்கிய செம்பொற்றகட்டால்மேய்ந்து இடையிடையே முத்துகளாலும் பாதாளலோகத்திலுள்ள நாகரத்நங்களினாலும் பத்திபத்தியாகப் பதிக்கப்பட்டிருக்கிற மேலுப்பரிகையினிடத்தில் இளமைபொருந்திய மின்னற்கொடிபோன்ற ஸ்திரியினுடைய ஸ்தனபாரத்துற் புணருகின்ற குங்குமச்சேறணிந்து மாதளப்புஷ்பத்தையொத்து விளங்குகிற திருமேனியினிறத்தைச் சுவேதராஜனுந்துறந்து என்றவாறு........................(௰௧)

மூன்றுகாலமுத்தாநதிமூழ்கிநீறணிந்து ..................*
கொண்டனிர்கையான் மஞ்சனங்கொழுமலரேந்தி ....... *
யேன்றதம்பிரான்பூசைமுக்காலமுமியற்றி ............ *
யான்றதக்கணஞ்செய்தெழுத்தஞ்சுமேசெபித்து. .... *

(இ-ள்.) சுவேதராஜன் திருமணிமுத்தாநதியில் திரிகாலங்களிலும் ஸ்நானஞ்செய்து சரீரமுழுவதும் விபூதியைத்தரித்துக்கொண்டு தனது மாந்தளிரையொத்த கைகளாற் றிருமஞ்சனமும் வளம்பொருந்திய பத்திரபுஷ்பங்களுமெடுத்து உயர்வான பழமலைநாதனை மூன்றுகாலங்களிலும் பூசனைசெய்து மேன்மையான பிரதக்ஷண நமஸ்காரங்களுஞ்செய்து பஞ்சாக்ஷரத்தையுஞ்செபஞ்செய்துமுடித்து-எ-று.

நிச்சயித்த நல்லடிசிலானெய்தயிர்பாலா ............ *
னச்சுமின்சுவைக்கறியினுனறுஞ்சுவைக்கனியால் .......... *
வைச்சபன்னியஞ்சருக்கரைப்பாணியவகையா ........... *
விச்சையின்படியடியவர்பூசையுமியற்றி ................. *

(இ-ள்) சுவேதராஜன் தன்மனதினால் இனியவென்று நிச்சயஞ்செய்த நன்மைபொருந்திய போசனத்தினாலும் - நெய்-தயிர்-பால்-முதலானதுகளாலும் யாரும் விரும்பத்தக்க இனிதான சுவைபொரு

ந்திய கறிவகைகளினாலும் நல்ல மதுரமாகிய பழவகைகளினாலும் ரசம்பொருந்திய சிற்றுண்டிகளினாலும் பாயச முதலிய வற்றாலும் சிவனடியார்கள் மனவிருப்பத்தின்படி திருப்திசெய்து பூசித்தும் இருந்தான் என்றவாறு ... ....... .......... . . . ........ ........ .... (௰௩)

நாற்றிசைப்பயன்சுமந்து நாற்றிசையெலாமின்னிச்...... *
சீற்றவைம்புலன்கறுத்திருந் தீவினையிடித்துச்... ....... . . *
சாற்றுமன்பர்தாள்விழ்ந்துதற்பழமலையேறித்....... ...*
தோற்றுபொன்மழைபொழிந்ததுசுவேதமாங்கொண்டல்

(இ-ள்.) சுவேதராஜனென்னு மேகமானது சொல்லுகின்ற அடியார்களுடைய திருவடியாகிய கடலில்விழுந்து நான்குதிசையிலுமுள்ள பொருள்களாகிய நீரைக்கிரகித்து நான்கு திசைகள் தோறுங் கீர்த்தியாகிய மின்னலைமின்னிக் கொடியபஞ்சேந்திரியங்களைக் கோபித்தலாகிய கறுப்பையடைந்து பெரியதீவினைகளாகிய இடிகளையிடித்துத் தனது பழமலையாகிய விருத்தாசலத்தில் வந்தேறித் தோன்றுகின்ற சுவர்ணமாகிய மழையைச்சொரிந்தது என்றவாறு . . ..(௰௪)

சுந்தரர்க்கருண்முதுகிரிச்சோதியுமந்நாள்..... ......... ... *
வந்துநான்முகற்களித்தமந்திரத்தையுமியம்பி..... . . . *
நந்தமேனியிந்நகரமா நதிகளுக்கரசா..... . ..... ....... . *
மிந்தமா நதியிற்றவம்புரியெனவிசைத்து......... ....... *

(இ-ள்.) சுந்தரசுவாமிகள் ஓதிய திருப்பாடலுக்கிரங்கித் தியாகங் கொடுத்தருளிய பழமலைநாதரும் சுவேதராஜனிடத்திற்குவந்து முற்காலத்தில் பிர்ம்மதேவருக்கு உபதேசஞ்செய்த மந்திரத்தையும் உபதேசித்து இந்தஸ்தலம் நமது வடிவமாகும் இந்தத்திருமணிமுத்தாநதி - நதிகளுக்கெல்லா மரசாகும் இந்தஸ்தலத்தில்தவஞ்செய்வாயாக வென்று சொல்லி என்றவாறு.... .. ............ . .... .. ..... .... ....(௰௫)

அகிலகாரணன்மறைந்தனனத்திசைவணங்கி............. *
பிகலறச்சிவபூசையுமகேசுரபூசை...... . .... ....... . . ..... *
சகலதானதன்மங்களுந்தருக்கினூற்பெருக்கிப்......... . *
புகலருந்தவமகிழ்ச்சியாய்ப்புரிந்தனன்சுவேதன் ...... *

(இ-ள்.) உலககாரணனாகிய பரமசிவன் மறைந்தருளினார் அத

கண்டு சுவேதராஜனும் அந்தத்திசையை நோக்கி நமஸ்காரஞ்செய்து அஞ்ஞானவலிமை நீங்கும்படி சிவபூசையும் - மகேஸ்வரபூசையும் - சகல தானதர்ம்மங்களும் மனோச்சாகத்தினால் விர்த்தியண்ணி சொல்லற்கரிய தவத்தைச் சந்தோஷத்துடன் செய்தான் என்றவாறு. (௰௬)

குதலைமாங்குழக்கன்றளிக்கொச்சையான்போல... ...... *
வதியன்றோற்றிநின்றருள்செய்வான்சுவேதனேயுனக்குச்
சுதபனுமமுந்தந்தன நந்திக்குட்சுகமும்... .. ...... .. *
பதமுந்தந்தனமென்றனன்சுவேதனும்பகர்வான், ...... *

(இ-ள்.) மழலையையுடைய இளங்கன்றை நினைந்திரங்கிவருகின்ற பசுவைப்போலப் பரமசிவனும் சுவேதமுனிவனுக்கிரங்கிப் பிரத்தியக்ஷமாகிநின்று சொல்லுகின்றார் ஏய் சுவேதமுனிவனே நாம் உனக்குச் சுதபனென்னும் பெயரையுங் கொடுத்தோம் அல்லாமலும் நந்தீஸ்வரருக்குட்பட்ட சுகத்தையும் பதவியையும் கொடுத்தோம் என்று திருவுளம்பற்றியருளினார் அதுகேட்டுச் சுவேதமுனிவனும் விண்ணப்பஞ் செய்கின்றான் என்றவாறு... ...... .. ....... ........ ........(௰௭)

கலிப்பிறப்பினாற்காலனுனரகினாலடியேன்.. ...... ..... , . *
சலிப்பிலேன்பிறப்பிறப்பினாற்றலைதடுமாறி...... .. ...... *
வலித்துநின்பதமறப்பனேல்மாறுகள்வருமேற்.... ...... *
பலிப்பிழப்பனேயென்றியான்பயந்தனன்பிறப்பை.. *

(இ-ள்.) அடியேன் தரித்திரவாதையினாலும், யமவாதையினாலும், நரகவாதையினாலும், சலிப்படையவில்லை. பிறப்பினாலும், இறப்பினாலும், இடமயங்கி யவற்றோடுடன்பட்டு உம்முடைய திருவடிகளை மறந்துவிடுவேனாகில் மாறுகளுண்டாகும் அதனால் இப்போதுகிடைத்துள்ள தபோபலத்தை யிழந்துவிடுவேனே யென்று நினைந்து அடியேனும் பிறவிக்குப்பயந்தேன் என்றவாறு .... ... ... ......... ...(௰௮)

பொன்றுமிப்பிறப்பொழித்தருள்புரிந்திடவேண்டு .... *
மென்றகூறுவானுமையுடனின்றபோலென்று.... ......... *
நின்றிடும்படிவேண்டுநின்னிணையடிநேசங்.... ..... .... *
குன்றிடாவரங்கொடுத்திடவேண்டுமென்றுரைத்தான் *

(இ-ள்.) நாசப்படுகின்ற இந்தப் பிறவித்துன்பத்தை நீக்கி ரக்ஷி

க்கவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்த சுவேதராஜன் பின்னையுஞ் சொல்லுகின்றான். சுவாமீ இப்பொழுது தரிசனங்கொடுத்ததுபோல எப்பொழுதும் இந்தஸ்தலத்தில் உமையவளோடெழுந்தருளியிருந்து ரக்ஷிக்கவேண்டும். எல்லாமனுஷருக்கு உம்முடைய உபய திருவடியிணைகளை அன்புநீங்காதிருக்கின்ற வரமுங்கொடுத்து ரக்ஷிக்கவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தானென்றவாறு. (௰௯)

சுதடன் முன்னமோ திரிபுரந்தூளெழ நகைத்த...... ... *
உதியனுஞ்சிரித்தப்படியாகுகவென்று...... ...... ..... ... *
முதல்வனின்றனன் சுவேதனு முதல்வரம்பெற்று........ *
னுதயுந்தம்பிரானடியவர் பூசையுமனாப்பாய் ...... ..... *

(இ-ள்.) சுவேதராஜனாகிய சுதயனுக்குமுன்பாக முப்புரங்களும் பொடியாகும்படி நகைசெய்த முதல்வனாகிய பரமசிவனும் நகைத்து அப்படியே யாகக்கடவதென்று திருவுளப்பற்றிநின்றருளினார் சுவேதராஜனும் முதன்மையாகத் தானினைந்த வரத்தைப் பெற்றிருந்தான். இப்பால் அந்தத்தலத்திலிருந்து சகல நன்மையையுந் தருகின்ற பரமசிவனடியார்களுக்குப் பூசையைச் செய்வதினால் வருகனத்பலனையுஞ் சொல்லுகின்றோம் என்றவாறு..........................(௨௰)

சுவேதச்சருக்கமுற்றுப்பெற்றது.

---

ஆக-சருக்கம் - ௰ - க்கு - திருவிருத்தம் (௨௱௯௮)

(இ-ள்) குபேரனைப்போற் செல்வத்தின் மிகுந்துள்ளவனாகிச் சிதம்பரத்திலிருந்து வருகின்ற அடியார்களைக் கண்டு சபாநாயகராக பாவித்து நாடோறும் அன்பாகப்பூசைசெய்து தேகாந்தியத்தில் சபாநாயகருடைய திருவடியிற்சேர்ந்தான். இன்னமொருவனாகிய நான்காம்புத்திரனானவன் ஆராகிலும் ஒரு சிறியவஸ்துவை வைத்திருந்தாலும் அதையும் அபகரிக்கும்படி நினைந்து அவர்களை வெட்டியும் பிராமணர்களாயிருந்தாலும் சிறுபிள்ளைகளாயிருந்தாலும் வர்ச்சிக்காமல் வெட்டியும் அவர்களிடத்துள்ள பொருளைப் பறிப்பதே தொழிலாக இருந்தான் என்றவாறு .. ..... ..................... .. (௩)

படருங்கொலைசெய்து திருடும்பலபொருள்பறித்தருடன் *
விடரொடுநடருமவ்வசையர்நீசர்கடாமுணையா ........ .... *
அடருங்கொலைசெயவற்றின்வெம்மைதப்பின்மையுறப்படக் ....... *
கடவிப்பிரமன்றொட்டுக்கட்டக்களையாகினன் ............ *

(இ-ள்.) துன்பப்படுத்துகின்ற கொலைபாதகத்தைச்செய்து திருடுகின்ற அந்தப் பலபொருள்களையும் நல்லோர்களுக் குபயோகமாகாததாகிப் பறிபாதகர்களும் - தூர்த்தர்களும் - கூத்தர்களும் - வேசையர்களும் - நீசர்களும் - அனுபவிப்பார்கள். இவனு மிகுந்த கொலைத்தொழிலைச் செய்தபடியினால் இம்மையில் அதிக பாதகங்கள் மேலிட்டுப் பலவியாதிகளை மதிகரித்து அப்பாதகங்களால் தூண்டப்பட்ட பிர்ம்மஹத்தி தேகம்பிடித்து வருத்த அதனால் மூர்ச்சையாகினான் என்றவாறு ........ .... ........... ..................... ...... (௪).

மைந்தன்படுந்துயர்கண்டொருநாண்முதுமறையோன்முன்
அந்தப்புராணப்புச்சகலபுராணக்கடன்மூழ்கு .... ........ *
மந்திரனைமொழிவானமரருமுனிவருமாமெய்திப் .. *
புந்திசெய்பூசுதுசெம்பொற்றப்பணிபோமென்றான் .... *

(இ-ள்.) இப்படி நான்காம் புத்திரனானவன் படுகின்ற வருத்தத்தை ஒருநாள் பிதாவானவன் கண்டு ஒரு வயோதிகரான பிராமணனை வணங்கிச் சொன்னமாத்திரத்தில் சகல புராணங்களாகிய சமுத்திரத்தில் மூழ்கியுள்ள அந்தப் பிராமணோத்தமனுஞ் சொல்லுகின்றார் நீங்கள் தேவர்களும் - முனிவர்களும் - தங்களுக்கு வேண்டிய வரங்களைப்பெற்று இடைவிடாமல் நிதானிக்கப்பட்ட மேன்மையுடைய

நிறைந்துள்ள அந்த அடியார்களுடைய மனவிருப்பத்தின்படி மிகுந்த பொருள்களுமே - வஸ்திரங்களும் - அமுதும் - அனபாகக்கொடுத்துத் திருப்திசெய்துவருகின்றகாலத்தில் என்றவாறு ........ (௮)

ஒருவருடத்திற்பிணியும்பிரமனுமொழிவகிக் ........ *
கருதருசிவனடியவர்மேல்வைத்தகருத்தாலே ........ *
மருவருஞ்சிவனடிமைநந்தணைந்தான்வணிகனுடன் ...... *
கருவளர்கிளைஞருமதுவழியாகக்கதிசேர்ந்தார் ........ *

(இ-ள்.) அந்த வசியனுடைய குமாரனானவன் ஒருவருஷத்தில் சகலவியாதிகளையும் பிரம்மஹத்தி தோஷத்தையும் நீங்கி மனத்தினால் நினைத்தற்கரிய பரமசிவனடியார்களிடத்தில் வைத்த அன்பினால் தனது பிதாவோடும் பொருந்துதற்கரிதாகிய பரமசிவனுடைய திருவடிகளிற்சேர்ந்தான் அவன் வம்சத்திலுண்டான சுற்றத்தாரும் அதுவேவழியாக மோக்ஷத்தைப் பெற்றார்கள் என்றவாறு ........ (௯)

(வேறு.)

இந்தவணிகர்நால்வரிலுமிளையோன்பெற்றபேறதனை ........ *
யந்தமில்லாக்குறுமுனிவனரியசுவேதமுனிக்குரைப்ப ........ *
வந்தமுனிவனேவலினால்மணிமுத்தாநதன்னின்மூழ்கி ........ *
யெந்தைபெருமான்முதுகுன்றனிணைத்தாமரைத்தாள்பணிந்தேத்தி.

(இ-ள்.) இந்த வசியகுமாரர்கள் நாலுபேரிலும் இளையவன் பெற்ற மோக்ஷத்தை ஒருநாளும் அழிவில்லாத அகஸ்தியமுனிவரானவர் அரிதாகிய சுவேதமுனிவருக்குச் சொல்ல அந்தச் சுவேதமுனிவரும் அகஸ்தியமுனிவரது ஆக்கினைவழியாக விருத்தாசலத்திற்கு வந்து திருமணிமுத்தாநதியில் ஸ்நானஞ்செய்து எமது பிதாவாகியுங் கடவுளாகியும் விளங்குகின்ற பழமலைநாதருடைய இரண்டு திருவடித்தாமரைகளையும் வணங்கித் தோத்திரஞ்செய்து என்றவாறு ........ (௰)

தன்பூசையினாலாட்டியநீர்தன்னாற்சுவேதநதியாக்கி ........ *
யன்பர்பூசைபலநாளுமன்பாற்செய்யுநெறியாலு ........ *
மின்பமொழிகளவர்க்குரைக்குமியல்பினாலுமிதத்துடனே ........ *
தன்பாற்கதிகளெல்லாமுதவுநயந்துபடைக்குநல்லபாலும ........ *

(இ-ள்.) தான் செய்த பூசையில் பரமசிவனுக்கு அபிஷேகஞ்செய்த திருமஞ்சன சலத்தைத் தம்பெயரால் சுமேதநதியென்று சொல்லும்படி செய்வித்துப் பலகாலமும் அடியார்கள் பூசையை யன்போடு செய்துவருகின்ற கிரமத்தினாலும் அவர்களுக்கு இன்பமுண்டாக உபசார வசனங்களைச் சொல்லுகின்ற தன்மையினாலும் இனிமையோடும் அவர்களுக்கு நல்ல பால்தயிர் கறிகளுடன் நல்ல அமுதும் சந்தோஷித்துப் படைக்கின்ற நட்பினாலும் என்றவாறு........ (௬௩)

நல்லமுதகுன்றுடையபிரானையந்துசுமேதன்முற்றோன்றி........ *
யல்லற்பிறவியறுத்தருளவதனைநைமிசாரணியத்.................... *
தெல்லமுனிவர்கேட்டுருகியீசனடியார்பூசைசெய்யத்............... *
தில்லையிறைவன்முனிவர்கட்குத்திருக்கூத்தாடியருள்செய்தான்..... *

(இ-ள்.) நன்மைபொருந்திய பழமலையின்கண் வெழுந்தருளிய பரமசிவன் திருவுளமகிழ்ந்து சுமேதமுனிவனுக்குமுன் பிரகாசித்து நின்று துன்பமாகிய பிறவியைநீக்கித் தமது திருவடியைக்கொடுத்தருளினார் அந்தமகிமையை நைமிசாரண்ய ஸ்தலத்திலிருந்து தவஞ்செய்கின்ற முனிவர்கள் கேள்விப்பட்டு மனமுருகி அந்த ஸ்தலத்திற்குவந்து பரமசிவனடியார்களைப் பூசித்து வரும்பொழுது சிதம்பரத்திலெழுந்தருளி விளங்காநின்ற சபாநாயகரும் அம்முனிவர்களுக்குப் பிரத்தியக்ஷமாகிநின்று அழகிய நடனதரிசனங் கொடுத்தருளினார் என்றவாறு...................................... (௬௪)

சுமந்தமுனிவன்விருத்தகிரிச்சோதிப்புராணஞ்சொல்லுங்கா.......... *
லமைந்ததெய்வவன்மனெனுமரசன்கேட்டுவரமுத்திச்............ *
சமைமந்தமுத்தாநதிமூழ்கித்தானுமுடையான்றனைப்பணிந்து...... *
கமஞ்சேர்பரமசிவனடியார்காதற்பூசைசெய்திருந்தான்.............. *

(இ-ள்.) சுமந்தமுனிவரானவர் விருத்தாசலத்தினது பிரகாசம் பொருந்திய புராணத்தைச் சொல்லுங்காலத்தில் பொருந்திய தெய்வவன்மனென்னு மரசனானவன் கேள்விப்பட்டு வந்து ஸ்நானஞ் செய்தவர்களுக்குச் சகல நன்மையையும் மோக்ஷத்தையுங்கொடுக்கும்படி பிரகாசித்திராநின்ற திருமணிமுத்தா நதியில் ஸ்நானஞ்செய்து பழமலைநாதனை வணங்கி பரிபூரண ஞானசொரூப சுபாவமாக விளங்கு

கின்ற பரமசிவனடியார்களையும் அந்தஸ்தலத்தில் அன்பாகப் பூசித்திருந்தான் என்றவாறு ........................................................ (௰௩)

எந்தைபெருமானடியார்களியாவர்மனையிற்சென்றாலு ........ .......... *
மந்தமனையின்முனிவர்குழாமமரர்குழாமுநெருங்கியிடுந் . ......... .. *
தந்தமனையிற்றிரவியங்கடாமேநின்றுகூத்தாடு ................ ...... . *
முந்துமடியார்பூசையினான்மூவேழ்சுற்றங்கரையேறும்......... ..... *

(இ-ள்.) எமது பிதாவாகிய பரமசிவனுடைய அடியார்களானவ ர்கள் எவர்களுடையவீட்டிற்சென்றபோதிலும் அந்தவீட்டினிடத்தில் முனிவர்கூட்டமுந் தேவர்கூட்டமும் வந்து நெருங்குவார்கள் அல்லாமலும் அவ்வவர்கள்வீடுகளிலுள்ள திரவியங்களாகிய அமுது ஆடை பொருள் முதலானதுகள் தம் சிவனடியார்கள் உண்ண - உடுக்க- அர்ச்சிக்க அனுபவமாகின்றோமென்னும் ஆனந்தத்தினால் கூத்தாடும் முதன்மையாகிய சிவனடியார்களைப் பூசித்த தபோபலத்தினால் அவர்களது இருபத்தொரு தலைமுறைகளிலுள்ள சுற்றத்தார்களும் பிறவிக்கடலை நீந்தி மோக்ஷமாகிய கரையிலேறுவார்கள்,-எ-று,(௰௪)

தலையானடந்துமுத்திநிலஞ்சார்ந்தாலொக்குப்பசுதன்மங் ..... ....... *
கலையார்கரத்தான்சிவசரிதைகாலானடந்தாம்பறந்தடைத ......... .... *
றொலைவேபொக்குஞ்சிவபூசைதொண்டர்பூசையாலனைதன் ............ *
மலையாவாயுவேகத்தான்மனவேகத்தாம்ஞான நிலை..... ........ ......... *

(இ-ள்.) பசுதன்மத்தினால் மோக்ஷபூமியை யடையக்கருதுவது தலையால நடந்து அடைவதை ஒக்கும்.--கலைமானையிடக்கரத்திற்றாங்கிய பரமசிவனுடைய திவ்வியசரித்திரத்தினால் மோக்ஷபூமியை யடையக்கருதுவது காலால் நடந்து அடைவதை ஒக்கும்—சிவபூசையினால் மோக்ஷபூமியை அடையக்கருதுவது சீக்கிரத்திற்பறந்து அடைவதை ஒக்கும்— அன்பர்பூசையினால் மோக்ஷபூமியை அடையக்கருதுவது கொடாத வாயுவேகத்தினால் அடைவதை ஒக்கும் — குருமுகமாகப் பெற்ற ஆத்மஞானநிலையினால் மோக்ஷபூமியை அடையக்கருதுவது மனவேகத்தினால் அடைவதை ஒக்கும் என்றவாறு........... .......(௰௫)

அன்பர் பூசைச்சருக்க முற்றுப்பெற்றது.

ஆக சருக்கம் - ௯ - க்கு - திருவிருத்தம் (௨௬௩)

திருச்சிற்றம்பலம்.

பன்னிரண்டாவது,

# சிவபூஜாவிதிச்சருக்கம்.

(வேறு.)

சேயிழைகேட்கநாதர்சிவபூசைவிதியைச்சொல்வா,......... *
ராயுங்காற்சிவலிங்கத்தினருச்சனையதிகநன்மை... .. ... . .. *
யேயமுப்போதுஞ்செய்வானிருபொழுதொருபோதேனுந்... *
தூயவாய்ப்பூசைசெய்வான்சுத்தத்தற்பத்திநன்றாம்........ .. ... *

(இ-ள்.) உமையவள்கேட்கப் பரமசிவனுணவர் சிவபூஜாவிதியைத் திருவுளம்பற்றியருளுகின்றார் ஆராய்ந்து பார்க்குமிடத்தில் சிவலிங்கபூசையானது எவ்வகைப்பட்ட பூசையிலும் அதிக நன்மையைத் தருவதாகும் விவேகியானவன் இந்தப் பரிசுத்தமான சிவலிங்க பூசையைப் பொருந்திய மூன்றுகாலத்திலுஞ் செய்வான் அங்ஙனஞ் செய்யாதுகூடாதாயின் இரண்டுகாலத்திலாகிலும் ஒருகாலத்திலாகிலுஞ் செய்வான் இங்ஙனம் பூசிப்பவனுக்கு அங்கசுத்தியிலும் அந்தக்கரணசுத்தியாகிய சற்பத்தியே மகாநன்மையாகும் என்றவாறு ... (க)

மூச்சுடரிதயஞ்சென்னிமுறைமணல்மண்மாநீறு.. ............ *
விச்சையாங்கும்பங்கொன்றைவில்லநீர்குசையால்வேதி...... *
கைச்சுவரெழுத்துச்சாணகந்தலிலாற்பூசை.......... ....... ....*
யிச்சையாற்செய்வானன்றேலளற்றினில்யானைக்கொப்பான் *

(இ-ள்.) சோமசூரியாக்கினியாகிய மூன்றுசுடர்கள்-இருதயம் பிரம்மரந்திரம்-திருமுறை-மணல்-மண்-மா-திருநீறு-ஞானசொரூபமாகிய பூரணகலசம்-கொன்றை-வில்வம்-சலம்-தருப்பை-கூர்ச்சம்-வேதிகை-சுவரிலெழுதியசித்திரம்-சாணம-ஆகிய இவற்றில் எவற்றிலாகிலும் பரமசிவத்தை ஆவாகனப்பண்ணி அன்பினுற் பூசிக்கக்கடவன் அங்ஙனம் பூசியாவிட்டால் சேற்றிலழுந்திய யானையைப்போல் கரையேறமாட்டான் என்றவாறு ................ .... ........................(உ)

எத்தனைபடித்தானேனுமெத்தவஞ்செய்தானேனு................ *
மத்தனையாகமெல்லா மடைவுடன்செய்தானேனு...... ...... *
நித்தனைப்பூசைசெய்யானெறிஞ்செயற்போகமெல்லாஞ்..... *
செத்தவற்களித்தாலொக்குந்தீங்கானன்மழையுமொக்கும்...*

(இ-ள்.) பரமசிவனைப் பூசியாதவன் எவ்வளவு கல்வி கற்றவனு னாலும், எத்தெந்தத் தவங்களைச் செய்தவனானாலும், அவ்வளவு யாக ங்களெல்லாம் முறையாகச் செய்தவனானாலும், நூல்களிற்கூறிய அவ னாற்செய்யப்பட்ட மேன்மையான செய்கைகளும் அவனனுபவிக்கி ன்ற சகலபோகபோக்கியங்களும் செத்துப் பிணமானவனுடையசெ ய்கைக்கும் அப்பிணமானவன அனுபவிக்கப்பட்ட போகபோக்கிய ங்களுக்குஞ் சமானமாகும் அல்லாமலும் கானலிற்பெய்த மழையை யும் ஒக்கும் என்றவாறு......... ........... .... ......... ................(ரு)

தவத்தினுக்கரசனான சங்கரன் பூசைசெய்யான்.................*
கவர்த்தத்நரகில்வீழ்வனே தினுங்காகம்போல .. .... ......... ... *
வவத்தனுப்நோயும்பேயுமல்லலுமிடியுஞ்சுற்றிச் ..... ....... . *
சுவர்த்தலைப்பூனைபோலச் சுற்றுவன்யோனிதோறும்........ *

(இ-ள்) தவங்களுக்கிறைவனாகிய பரமசிவனுடையபூசையை ச்செய்யாதவன் துன்பப்படுத்துகின்ற தீமையாகிய நரகத்தில் விழு வான் அங்ஙனம விழுந்து கிடப்பவன் விமோசன காலமுண்டாகிப் பிறவிகளாயிலேறித் தேகமெடுத்தானாயினும் காக்கைபோலக் கரு நிறமுடையவனாய் வியாதிகளும் - பிசாசமும் - வருத்தமும் - தரித்தி ரமும் - சூழ்ந்து வீணனாகி-சுவரிலிடத்துள்ள பூசையைப்போல் பல யோனிகள்தோறுஞ் சுற்றித்திரிவான் என்றவாறு.............. .......(சு)

பூசையிலாதானுண்டிபுழுப்பிணம்புலையன்கட்ட...... ........ *
மாசுளபாவமொக்கும்வாளினிற்றீயில்வீழ்ந்து..... ............. *
நாசமாவதுவேநன்றுநற்குலம்பிறந்தானேனுந்.... .............. *
தேசுளாரவனைத்தீண்டிற்றெரிசிக்கின்னைக்கற்பாவம்.. ......... *

(இ - ள்.) பூசையில்லாதவனுண்ணப்பட்ட போஜனமான து புழுத்தபிணமும்-புலையனுடைய கஷ்டமுமாகும், மாசுபொருந்திய

பாதகத்திற்குச் சமானமாகும் அவன் வானிடத்திலாகிலும் தெரு
ப்பினிடத்திலாகிலும் விழுந்து இறந்துபோவதே தன்மையாகும்
அவன் உயர்ந்த குலத்திற் பிறந்தவனாயிருந்தாலும், அவனைச் சிவபூ
சைசெய்கின்ற பரிசுத்தவான்கள் கையால் தீண்டினாலுங் கண்ணாற்பா
ர்த்தாலும் மனத்தால் நினைத்தாலும் பாவமுண்டாகும் என்றவாறு (௫)

உழலைசேர்நாட்டுவேனிற்குதவியகற்பகத்தி ......... *
னிழறனையொக்கும்பூசைநிகழ்த்திடிற்றவந்தானங்க ......... *
ளழலுறுவேள்விதீர்த்தமாடல்களுஞ்செய்தாலொக்குங் ......... *
கழலடைந்திடுவன்பின்னர்க்கணநாதனுவன்முன்னே ...... *

(இ-ள்.) சிவபூசையானது அடைந்தவர்கட்கெல்லாந் தாபத்தைத்தருவதான பாலைவனத்தின்கண் கோடையால் படுகின்ற வருத்தத்திற்கு உதவிசெய்த கற்பகவிருக்ஷ நிழலுக்குச்சமானமாகும். அல்லாமலும் அப்படிப்பட்ட சிவபூசையைச்செய்தால் சகலதவங்களும், சகல தானங்களும், அக்கினியினாற் செய்கின்ற சகல யாகங்களும், சகல தீர்த்தஸ்நானங்களுஞ் செய்ததற்குச் சமானமாகும்—அங்ஙனஞ் செய்தவன் தேகாந்தத்தில் முன்பு கணநாதனாகித் தெய்வவிமானத்திலேறி யுலகமெங்கணுஞ் சஞ்சரித்துப் பின்பு பரமசிவனுடையதிருவடியிற்சேருவான் என்றவாறு .......................... (௬)

சிவலிங்கத்தொருகைநீர்பூச்செலுத்திடில்விருத்தவெற்பிற் ...*
கவன்மின்மருதமேருகாசிசாகரத்திற்கங்கை ............ *
யிவர்பிரயாகைசேயையிமகிரியாதிதன்னிற் ............*
றவநெடுங்காலஞ்செய்துதருமமுஞ்செய்தாலொக்கும் ........ *

(இ-ள்.) விருத்தாசலத்திலிருந்து சிவலிங்கத்தில் ஒருகைஜலம் விட்டபிஷேகஞ்செய்தாலும், ஒரு புஷ்பத்தைச்சாத்தினாலும், சஞ்சலத்தை நிவிர்த்துக்கின்ற திருவிடைமருதூரிலும் - மகமேருவிலும் - வாரணாசியிலும் - சமுத்திரதீரத்திலும் - கங்காதீரத்திலும் - சலையெழுச்சியையுடைய பிரயாகைநதியிலும் - சேயைநதியிலும் - இமகிரி முதலான கிரியிடங்களிலும் வசித்து நெடுநாள் தவஞ்செய்து தருமமுஞ் செய்ததற்குச் சமானமாகும் என்றவாறு ..................... (௭)

வெகுவிதவிரதஞ்சாந்திமெய்ப்பரிமேதங்கோடி.....................*
தருபலமொருநாட்பூசைதனைச்செயின்மரணதுக்க ........ .... *
மருதிலைமகவான்செல்வமவன்கொடுத்தவர்க்கையுண்டா....... *
மகிபதிசெல்வந்தானுமற்றவன்கொடுத்தானுண்டாம ........ . *

(இ-ள்.) ஒருநாள் சிவபூசைசெய்தால் வெகுவிதவிரதங்களும் சாந்திகளும் உண்மையாகிய கோடி அசுவமேதயாகங்களுஞ் செய்தால் உண்டாகின்ற தகுதியான பலனுண்டாகும் அவனுக்கு மரணவருத்தமுமில்லை. இந்திரபோகத்தை அவன் எவர்களுக்கு விரும்பிக்கொடுக்கின்றானோ அவர்களுக்குண்டாகும். அங்ஙனம் தேவேந்திரபோகமடையப்பெற்றவன் பூலோகச்செல்வத்தை எவர்களுக்கு விரும்பிக்கொடுக்கின்றானோ அவர்களுக்குண்டாகும் என்றவாறு .. .... . (அ)

எந்தெந்தப்பதமிச்சித்தானே துகாமியமிச்சித்தா ........ ........ *
னந்தந்தச்செல்வமுண்டாமட்டமாசித்திவித்தை...............*
நிந்தையிற்றேவராசநித்தியகல்யாணங்கீர்த்தி........... ........*
சிந்தையாற்சலம்பூக்கொண்டுசிவனையர்ச்சித்தானுண்டாம் ....*

(இ-ள்.) உள்ளன்பினால் திருமஞ்சனமும் பத்திரபுஷ்பமுங்கொண்டு பரமசிவனைப் பூசைசெய்தால் அங்ஙனஞ்செய்தவன் எந்த எந்தப்பதங்களை விரும்பினானோ எந்தச்செல்வங்களை விரும்பினானோ அந்தப் பதங்களும் அந்தச்செல்வங்களும் அவனுக்குண்டாகும் அல்லாமலும் அஷ்டமாசித்திகளும் வித்தைகளும் நிந்தையில்லாத தேவபோகமும் நித்தியமங்களமுங் கீர்த்தியுமுண்டாகும். எ-று.....(௯)

வாசவன்மலரோன்மாயன்மகிழ்சிவபூசைசெய்து ..................*
தேசுடைக்கடவுளானார் திருவாணியிந்திராணி..... ........... . . *
யீசுரன்பூசையாலேயிருங்கவான்முகத்தன்மார்பிற் . . .......*
பாசமில்மூவர்தம்பாற்பரிவிடம்பெற்றாரன்றே . . ....... . . .*

(இ-ள்.) தேவேந்திரனும்-பிர்ம்மாவும்-விஷ்ணுவும் - மகிழ்ச்சியைத்தருகின்ற சிவபூசைசெய்து பிரகாசம்பொருந்திய தேவர்களிற் றலைமைபெற்றார்கள் அல்லாமலும் லக்ஷ்மி-சரஸ்வதி-இந்திராணி இவர்கள் மூவரும் சிவபூசைசெய்து அதனால் லக்ஷ்மியானவள் பந்தமில்லாத மூவர்களில் விஷ்ணுவினுடைய மார்பிலும், சரஸ்வதியானவள் பிர்

ம்மாவினுடைய முகத்திலும், இந்திராணியானவள் தேவேந்திரனு டைய பெருமைபொருந்திய துடையிலுமாக அன்போடும் வசிக்கு மிடம் பெற்றார்கள் என்றவாறு.............................(ம)

ஆரிடந்தேவலிங்கமிராக்கதம்படிகந்தீர்த்தஞ்.............*
சார்புடைச்சுயம்புவெற்புத்தாபிதத்தியற்றிற்பூசை.........*
யேருடைமறலிதானுமிவர்தமக்கடிமையாவன்.............*
சேர்வர்சாரூபந்தேவர்க்கிறைபதினல்வர்காலம்.............*

(இ-ள்.) ஆரிடலிங்கம்-தேவலிங்கம்-ராக்ஷசலிங்கம் - படிகலிங் கம்-தீர்த்தலிங்கம் - சார்பையுடைய சுயம்புலிங்கம் - மலையிலிங்கம்- ஆகிய இவைகளிற் பூசித்தால் அழகுபொருந்திய யமதர்மராஜனும் இவர்களுக்கு அடிமையாவான் அல்லாமலும் பதினாலு இந்திரர்கள் அரசுசெய்கின்றகாலபரியந்தம் சாரூபபதத்திற் பொருந்துவார்கள்.

கண்டுபாவித்தபூசைகருத்தொன்றாய்ச்செய்தபூசை..........*
மிண்டினால்விநோதபூசைவித்தைமெய்த்தவங்கள்பத்தி.........*
யுண்டாம்புவியுமாள்வரொருநாளுமிடையறாமற்.............*
றெண்டனாய்ப்பூசைசெய்வான்சுத்தமாமுத்திசேர்வன்.........*

(இ-ள்.) ஒருவர் செய்யக்கண்டு அதுபோற் பாவித்துச்செய்த பூசையினாலும், மனமொருமித்துச்செய்த பூசையினாலும், கொவத்தி னால் விநோதமாகச் செய்த பூசையினாலும், வித்தையும் உண்மையா கிய தவங்களும் சற்பத்தியும் அவர்களுக்கு உண்டாகும் அல்லாமலும் உலகத்தையும் அரசுசெய்வார்கள் அடிமைத்திறமுடையவனாகி ஒரு நாளும் இடைவிடாமல் பரமசிவனைப் பூசிப்பவன் பரிசுத்தமாகிய மோக்ஷத்தைப் பெறுவான் என்றவாறு.......................(மஉ)

நாய்க்கெரித்திடுவோனீசனன்றிகொன்றவனுக்கொன்றான்..*
றீக்குணன்விரதபங்கிசேயிழைமறையோர்க்கொன்றான்.....*
பாக்கியபூசைசெய்யிற்பாவம்போய்ப்பானுபோல்வ..........*
னாக்கவன்செல்வந்தானேசெல்வமென்றறையும்வேதம்.........*

(இ-ள்.) சோறு மாமிசமும் எரியிற்சமைத்து நாயை உண்பி த்துத் தானுமுண்பவனானாலும் புலையனானாலும் ஒருவர்செய்த நன்றி யை மறந்தவனானாலும் பசுவைக்கொன்றவனானாலுங்கொடியகுணத்

கையுடையவனானாலும் விரதடங்களானாலும் ஸ்திரிகளையும் பிராமண ர்களையுங் கொலைசெய்தவனானாலும் சகல பாக்கியத்தையுந் தருகின்ற இந்தச் சிவபூசையைச் செய்தானாகில் அவனது பாதகங்கள் நீங்கிச் சூரியனுக்கொப்பாகவிளங்குவான் அல்லாமலும அவன்தேடப்பட்ட செல்வமே செல்வமென்று நான்கு வேதங்களுமுறையிடும். எ-று ... (௰௩)

துறவிடாமுப் பூசைதொடுத்தவர்க்கொப்பரன்று.......... *
மறவனூர்மறவர்க்கூடமருவினும்பூசைசெய்யி............ *
லறவனூமவன்செய்பாவமப்புயலிலைநீர்போலும்............ *
பிறவிவேரறுக்குப் பூசைபெருவயித்தியமேபோலும்....... *

(இ-ள்.) துறவறத்தைப்பெற்ற பெரியோர்களும் சிவபூசையைச்செய்பவர்களுக்குச் சமானமானவரல்லர் ஒருவன் மறவர்களுடன் கூடிச் சிநேகித்திருந்தானானாலும் சிவபூசைசெய்தால் புண்ணியனாவான் அவன்செய்த பாதகங்களெல்லாம் கமலபத்திரஜலம்போல அவனை விட்டுப்பிரிந்துவிடும். ஆதலால் இந்தச்சிவபூசையானது ஜனனவியாதியை வேரோடொழிக்கின்ற பெரியவயித்தியனுக்குச் சமானமாகும் என்றவாறு.................... (௰௪)

காலமத்தியானஞ்சாயங்காலமுங்கடவுட்சேவை.............. *
மேலதாஞ்சுவர்க்கம் வாசிமேதம்பாவநாசம்........... *
சாலநற்பலன்களுண்டாந்தலைமைசேர்பிரதோடத்திற்........... *
சீலமாய்வணங்கினமூன்றுஞ்சேவையின்பலனுமுண்டாம்....... *

(இ-ள்.) காலைப்பொழுதிலும் - உச்சிகாலத்திலும் - மாலைப்பொழுதிலும் - பரமசிவனை இடைவிடாமல் தரிசனஞ்செய்தால் மேலாகிய சுவர்க்கபோகமும் - அஸ்வமேதயாகபலனும் - பாவவிமோசனமுமாகிய மிகுந்த நன்மைபொருந்திய பலன்களுண்டாகும். அன்றியும் பரமசிவனைப் பிரதோஷகாலத்தில் ஆசாரமாய்வணங்கினால் திரிகாலத்திலுந் தரிசனஞ்செய்த பலனுமுண்டாகும் என்றவாறு... (௰௫)

குழந்தைதாய்தந்தைசார்பாங்குருசோமனையோர்மாத.. *
நருங்கவென்றாவமாலயக்களவுசெய்தோன்... ........ *
படுங்கொடுங்கர்த்தபாவம்பத்தின்மூன்றும்பிரதோடத்திற் ....... *
செழுஞ்சிவபூசைபண்ணத்தொசிக்கப்பரிக்கப்போம்.......... *

(இ-ள்.) குழந்தையையுந்-தாயையுந்-தகப்பனையும் - கருவையும்-குதிரையையும்-பசுவையும-பிராமணர்களையும் - ஸ்திரிகளையும்-வருந்தும்படியாகக்கொன்ற பாதகங்களும் தன்வருத்தநிமித்தம் ஜென்மாந்தரங்களிற்செய்த சிவாலயப்பொருட்களவிலும் ஜெமபொன்களவிலுமுண்டான பாதகங்களும் பதின்மூன்றாநித்தியில் பிரதோஷகாலத்தில் மேன்மைபொருந்திய பரமசிவனைப்பூசித்தாலும் தெரிசித்தாலும் பரிசித்தாலும் நீங்கிவிடும் என்றவாறு.. ......(௰௬)

வானளவடைத்தபஞ்சிற்றீப்பொறிமாளுமீசன்..... .... .... . . *
மேனியைப்பிரதோடத்தனமிகத்தெரிசித்தார்பாவம் ... ..... *
பானமையாப்பதின்மூன்றாநாட்பானுவதமிக்குமுன்பின் *
மூணமேதாரியாமந்தானேபிரதோடமாவதம்மா .. ...... ....... . . *

(இ-ள்.) பிரதோஷகாலத்தில் பரமசிவனுடைய திருமேனியைக்கண்டுமிகுந்த அன்பாகத் தெரிசனஞ்செய்தவர்களுடைய பாதகங்களானது ஆகாயவளவாக அடைத்துவைத்துள்ள பஞ்சில் தீப்பொறிபட்டதை ஒக்கும. பிரதோஷகாலமாவது-எல்லாப்பாவங்களையுமுடைய திரயோதசிதினத்தில் சூரியன் அஸ்தமனமாகுமுன் மூன்றேமுக்கால் நாழிகையும் அஸ்தமனமானபின் மூன்றேமுக்கால் நாழிகையுமாகிய ஒருஜாமப்பொழுதையாகுமென்றவாறு..... ... (௰௭)

அஞ்சினான்மழைக்காச்சென்றானுடல்பாடலுக்காச்சென்றான் *
மிஞ்சிபவிமலற்காணின்விஞ்ஞானந்தவங்களுண்டாம்...... ..... *
வஞ்சகமன்னனானுமவந்துக்கிறபிரதோடத்திற்........ ..... *
செஞ்சமேவபாவநீங்குந்தீண்டிற்சாரூபஞ்சேர்வன் .... ........... *

(இ-ள்.)பிரதோஷகாலத்தில்ஒருஆபத்திற்குப்பயந்துபோனவனாயினும், மழைக்கொதுங்கினவனாயினும், ஆடல்பாடல்களைப்பார்க்கப்போனவனாயினும, பரமசிவனைக்கண்டு தரிசிப்பானாகில் அவனுக்கு விசேஷமுந் தவங்களுமுண்டாகும். வஞ்சகத்தையுடைய வரசனும பரமசிவனைப் பிரதோஷகாலத்தில் வணங்கினால் அவன்செய்த பாதகங்கள் முழுதும நீங்கிவிடும். அல்லாமலும் பரமசிவனைப் பரிசித்துப் பூசைசெய்தால் சாரூபபதத்தைப் பெறுவான் எ-று...(௰௮)

நெய்தயிர்பால்தேனெண்ணெய்நிறைகரும்பிளநீர்சந்தந் ..... *
தூய்யவாங்கனிநீராட்டிடநேருமைபத்ததிகமற்றை ..... *
யையமின்மஞ்சனாதிபொன்றுக்கொன்றதிகநூறுஞ் ..... *
செய்யசாருபஞ்சேர்வன்றிகழ்பிரதோடகாலமே ..... *

(இ-ள்.) பிரகாசிக்கின்ற பிரதோஷகாலத்தில் - நெய்-தயிர்-பால்-தேன்-எள்நெய்-இரசநிறைந்த கரும்பு-இளநீர்-சந்தனம்-பரிசுத்தமாகிய பழரசங்கள் ஆகிய இவைகளால் பரமசிவனை யபிஷேகஞ் செய்யும்பொழுது இடையிடையே யபிஷேகஞ்செய்யப்பட்ட சுத்தஜலம் பத்துப்பங்கதிக நன்மையாகும், அப்படி ஐயமில்லாமல் செய்யப்பட்ட திருமஞ்சனமுதலான அபிஷேகங்கள் ஒன்றுக்கொன்று நூறுபங்கதிகமாகும். அங்ஙனஞ் செய்தவன் செவ்விதாகிய சாரூப பதவியை யடைவான் என்றவாறு ............ (௰௯)

வில்லமெய்யிலையேகோதிவெந்நீராலிறைவற்காட்டி ..... *
னல்லகோதானங்கோடி நல்கிடபலனையொக்கு ..... *
மல்லறீரமரபக்கத்தட்டமியெண்ணெய்நெய்யால் ..... *
வல்லவாஞ்சிவனுக்காட்டிலம்மற்றுமோதானங்கோடி ..... *

(இ-ள்.) பிரதோஷகாலத்தில் உண்மையாகியவில்வபத்திரத்தைக் கோதுப்பொடித்து வெந்நீரிற்கலந்து பரமசிவனுக்கபிஷேகஞ் செய்தால் நன்மைபொருந்திய கோடி கோதானஞ்செய்த பலனுக்குச் சமானமாகும், வருத்தத்தைத் தீர்க்கின்ற அமரபக்ஷத்து அஷ்டமிதிதியில் எள்நெய்யினாலும் நெய்யினாலும சகலவல்லமையுமுடைத்தாகிய பரமசிவனுக்க கபிஷேகஞ்செய்தால் கோடி கோதானஞ் செய்த பலனுக்குச் சமானமாகும் என்றவாறு ............ (௨௰)

அன்றருக்காவினெய்யாலருங்காவொட்டயிலத்தாட்டிற் ..... *
றுன்றுவனூறுகோடிகாலந்தூய்ச்சிவலோகத்திற் ..... *
றன்றுனைதிருநீருட்டிற்சந்திரனுகவாழ்வ ..... *
னனதியான்றய்யாட்டிமுரணுவணன்றே ..... *

(இ-ள்.) அந்த அஷ்டமிதிதியில் அப்போதுருக்கிய பசுவினெய்யினாலும், அரிதாகிய கருமைபொருந்திய எள்நெய்யினாலும் பரமசிவனுக்கு அபிஷேகஞ்செய்தால் நூறுகோடிகாலவளவும் பரிசுத்த

மாகிய சிவலோகத்திற் பொருந்துவான் அல்லாமலும் தனக்குத்தானே ஒப்பாகிய திருநீற்றினால் அபிஷேகஞ்செய்தால் சந்திரனாகவாழ்வான், நன்மைபொருந்திய பசுவின் தயிரினால் அபிஷேகஞ்செய்தால் நாராயணனாகுவான் என்றவாறு ........ .... .................. (உக)

பொன்னினாற்குளம்புகொம்பபொதிந்துபட்டாடைபோர்த்துத்
துன்னுவானனந்தங்கோடி சூரியகிரகணத்தி ........ ... ........ *
னன்னைநான்மறையோர்க்கீந்த நற்பலன்பசுவின்பாலா... *
லன்னுமட்டமியிலீசன் மன்னிமுடியாட்டின்மாதோ..... ........ *

(இ-ள்.) நிலைபெற்றுள்ள அந்த அஷ்டமிதிதியில் பசுவின்பாலினாற் பரமசிவனது திருமுடியிலபிஷேகஞ்செய்தால் சுவர்ணத்தினாற் குளம்புகளும கொம்புகளும் செய்து தரித்து பட்டுவஸ்திரத்தைப் போர்த்து நெருங்கிய அனந்தங்கோடி பசுக்களைச் சூரியகிரகண புண்ணியகாலத்தில் நன்மையாகிய நாலுவேதங்களையுமுணர்ந்த பிராமணர்களுக்குத் தானஞ்செய்த நல்லபலனுண்டாகும். எ-று. (உஉ)

தேனையந்தாட்டிலெட்டாந்திதிகனற்கடவுளாவன் .............. *
பானீயம்வருணனாவன்பானுவின்மதிசேர்முன்னா ............ *
ளூனமில்சோமவாரம்பொன்றுநாட்பசுவின்பாலா ........ ...... *
லானுகந்தானுக்காட்டிலற்றிலாப்பரமமுத்தி...... ......... .... *

(இ-ள்.) அந்த அஷ்டமிதிதியில் பரமசிவனுக்கு விருப்பத்தோடுந் தேனபிஷேகஞ்செய்தால் அக்கினிதேவனாவான், ஜலாபிஷேகஞ்செய்தால் வருணனாவான், அல்லாமலும் சூரியமண்டலத்தில் சந்திரன் சேருகின்ற அமாவாசிதிதிக்கு முன்வரும் சதுர்த்தசிதிதியிலும் அமாவாசியிற் குற்றமில்லாத சோமவாரங்கூடிய நாளிலும் பசுவின்பாலினால் இடபவாகனத்தை உகந்து நடாத்துகின்ற பரமசிவனுக்கு அபிஷேகஞ்செய்தால் ஒருக்காலு மழிவில்லாத மேன்மைபொருந்திய மோக்ஷபதமுண்டாகும் என்றவாறு ........ . ... . .... ... . .. (உங)

அட்டமியமரபக்கத்தாதித்தவாரங்கூடின் ............ ..... . . .... *
மட்டவிழிளநீராட்டில்வாசவன்பதத்திற்சேர்வன் .... .......... . *
கிட்டியபதினான்காயகிளர்திதிதன்னிற்றேனெய் ........ .... .....*
யெட்டயிலத்தாலிக்காலாட்டினாலிறைவன்முத்தி..... .... ....... *

(இ-ள்.) அமரபக்ஷத்து அஷ்டமிதிதியில் ஆதிவாரங்கூடிய நாளில் மட்டில்லாத இளநீரினால் பரமசிவனுக்கு அபிஷேகஞ்செய்தால் தேவேந்திரபதவியைப் பெறுவான், அல்லாமலும் நெருங்கிய சதுர்த்தசிதிதியில் தேனினாலும்-நெய்யினாலும்-எள்நெய்யினாலும்-கருப்பஞ்சாற்றினாலும்-பரமசிவனுக்கு அபிஷேகஞ்செய்தால் சாயுச்சிய பதவியடைவன் என்றவாறு ...... (௨௪)

பரித்தகார்த்திகைமாதத்திற்பதினொன்றாந்திதிபூர்வத்திற் ... *
கொடுத்துநெய்யாட்டிற்கோடிகிளையுடன்கயிலைசேர்வன் ......*
வடித்தமஞ்சனத்தாற்றன்னைவைத்தபூவனத்திற்பூவாற் ........*
றொடுத்தமந்திரமூலத்தாற்சுத்தனாய்ப்பூசைசெய்வான். ......*

(இ-ள்) வடித்தெடுத்த திருமஞ்சனத்தினாலும் தன்னாலும் வைத்துள்ள நந்தவனத்திலெடுத்த புஷ்பங்களினாலும் செபிக்கின்ற மூலமந்திரத்தினாலும் இடைவிடாமல் நாடோறும் பரிசுத்தனாகிச் சிவபூசைசெய்கின்ற ஒருவன் நன்மைபொருந்திய கார்த்திகை மாதத்தில் பூர்வபக்ஷத்து ஏகாதசிதிதியில் நெய்யைக்கொடுத்துப் பரமசிவனுக்கு அபிஷேகஞ்செய்வித்தால் அவன்கோடிதலைமுறைகளிலுள்ள உறவினரோடும் கயிலாசத்திற் பொருந்திவாழ்வன். எ-று.

பொன்பதின்கழிஞ்சுவேதம்பொதிந்தவர்க்களித்தாலொக்குந் *
தன்னொருக்கொருபூசாத்திற்சகத்திரமொன்றுக்கொன்று ....*
துன்னியவலரிவில்வமதும்மத்தந்தும்பைதர்ப்பை..... ......*
வன்னிநாயுருவிநெய்தன்மற்றவைக்கதிகமாகும் ......*

(இ-ள்) சிவலிங்கத்தில் தன்னால்பயிர்செய்த ஒருவெள்ளெருக்கம்பூவைத் தரித்துப்பூசித்தால் பதின்கழிஞ்சு சுவர்ணத்தை நான்கு வேதங்களையுமறிந்த ப்ராமணர்கட்குத் தானஞ்செய்ததற்குச் சமானமாகும் அல்லாமலும் நெருங்கிய அலரி-வில்வம்-தேன்றூங்குகின்ற கருஊமத்தம்-தும்பை-தருப்பை-வன்னி-நாயுருவி-கருநெய்தல் ஆகிய இவைகளைத்தரித்துப்பூசித்தால் ஒன்றுக்கொன்று ஆயிரம்பங்கதிகமாகும் இவற்றினுமதிகமாகும் அஃதியாதெனில். எ-று...... (௨௫)

ஆயிரநெய்தற்பூவாலலங்கல்செய்தரனைச்சாத்தின் ............ *
மேயவாமடாமமுத்தவிளைந்திடுமியாதுப்பூவாந் ......... ......... *
தீயவாமணமுநாறுந்தீமலர்விழும்பூமொட்டு .... ......... ..... *
தூய்தலாப்பூமயிர்ப்பூதுளைத்தபூவலர்ந்ததாகா.......... .... .... *

(இ-ள்.) ஆயிரம் கருநெய்தல்புஷ்பங்களால் மாலைதொடுத்து ச்சிவலிங்கத்திற்குச்சாத்தினால் மேன்மைபொருந்திய மோக்ஷபதமுண்டாகும் ஆகையால் எல்லாப்புஷ்பங்களும் தரிக்கலாகும். அங்ஙனமாயினும் துர்க்கந்தத்தைவீசுகின்றபுஷ்பங்களும் வாசனையில்லாத கொடிய புஷ்பங்களும் பூமியில்விழுந்த புஷ்பங்களும் அரும்புகளும் பரிசுத்தமில்லாத புஷ்பங்களும் மயிர்ச்சிக்குண்ட புஷ்பங்களும் வண்டுகள்துளைத்த புஷ்பங்களும் நன்றாய்மலர்ந்துவிட்ட புஷ்பங்களும் தரிக்கலாகாது என்றவாறு...... .. ..... ..................... ..... ....(௨௭)

மலரின்றேலிலைகாய்ப்புல்லுவனத்தினிற்பயிரின்பன்ன ........... *
மலருநற்றிபனந்தன்காமல்லிருண்மத்தஞ்சாத்தி .......... .... *
னலசிவலோகஞ்சேர்வனல்லநாயுருவிப்பன்னய ............... *
பலனுளபதுருலாநாட்சாத்திறற்பரனைச்சேர்வன்............ *

(இ-ள்.) முற்சொல்லிய புஷ்பங்களில் ஒன்றுகிலுங் கிடையாத காலத்தில்முன்சொன்ன புஷ்பச்செடிகளின் இலை-காய்-புல்லுகள் நந்தனத்திற் பயிராகியுள்ள பத்திரங்களுந் தரிக்கலாகும், அவைகளுங் கிடையாதகாலத்தில் பாவனையாகத்தியானஞ்செய்தால் நன்மையாகும், அல்லாமலும் அர்த்தராத்திரியில் கருவூமத்தம் புஷ்பஞ்சாத்தினால் நன்மைபொருந்திய சிவலோகத்தைச்சேர்வான், அதுவுமல்லாமல் தரிசித்தவர்களுக்குச் சர்வபலனையுந் தருகின்ற சதுர்த்தசிதிதியில் நன்மையாகிய நாயுருவியின் பத்திரத்தைச் சாத்தினால் பரமசிவனுடைய திருவடிகளிற் பொருந்துவான் என்றவாறு.. ....... ......... ........(௨௮)

நெய்யுங்குங்குலுவுந்தூபமிமிர்ந்தொருமாதம்போற்றிற் .... *
செய்யவெட்டயிலத்தீபஞ்செலுத்திற்சாலோகஞ்சேர்வன .... *
மெய்யதாம்பசுவினெய்யால்விளக்கிடினொருகொழுந்துக்..... *
குய்யவாயிரஞ்சதுர்த்தயுகஞ்சிவலோகம்வாழ்வன்...... ..... . *

(இ-ள்.) நெய்யுங் குங்கிலியமுங்கலந்து ஒருமாதபரியந்தம்

பரமசிவனுக்குத் தூயத்திருப்பணி செய்தாலும் செய்வித்தாகிய என்னையைவார்த்துத் தியசதிருப்பணிசெய்தாலும அவன் சாமிலோக பதவியைப்பெறுவான், அல்லாமலும் உண்மையாகிய பசுநெய்யினால்விளக்குவைத்தால் அவன் அதின்சுடர்க்கொழுந்து ஒவ்வொன்றிற்குப் பெருகுகின்ற ஆயிரஞ்சதுர்யுகபரியந்தஞ் சிவலோகத்தில்வாழ்வான் என்றவாறு.................................(உகூ)

ஈனரோயெனினுமீசனெண்வகைப்பத்தியுள்ளார்...................*
வானவர்தலைவருவர்மறைவலோர்க்கில்லையாகி.....................*
ஞானமோயாவரீசனுறைபுமாலயஞ்செய்வாரை.....................*
மானிடரென்பார்க்கன்றேவைத்தது நரகமெல்லாம்..............*

(இ-ள்.) பரமசிவனை எண்வகைப்பத்தியாற் பூசிக்கின்றபுண்ணியவான்கள் ஈனசாதியிற்பிறந்தவர்களானாலும் தேவர்களுக்கரசனாகிய தேவேந்திரனுவார்கள், பிராமணசாதியிற்பிறந்தவர்களுக்கும் அந்தப்பத்தியில்லாவிட்டால் அவர்களும் ஈனராவார்கள், அல்லாமலும் பரமசிவனைப் பிரதிஷ்டைபண்ணப்பட்ட சிவாலயத்திருப்பணி செய்கின்றவர்களைச் சிவனென நினையாமல் தம்மையொத்த மனிதர்களென்று சொல்லுகின்றவர்களுக்கல்லவோ எல்லா நரகங்களும் வைத்திருக்கின்றது என்றவாறு...........................*

எண்வகைப்பத்தியாவன—நந்தவனம்வைத்தல்—அம்மலர்பறித்தல்—அம்மலர்மாலை தொடுத்தல்—சிவஸ்துதிசெய்தல்—சிவாலயமலகிடல்—சிவாலயமெழுகல்—சிவாலயம் விளக்கிடல்—சிவனடியார்களைப்பூசித்தல் என்பனவாம்................................(௩0)

கண்ணினுக்கினியபண்டங்கடவுளுக்களித்தானென்னிற்........*
புண்ணியவுலகஞ்சேர்வன்பூசையையிழந்தநாளி................*
லண்ணலைக்கோயில்சூழ்ந்துபணியிலர்ச்சனையதாகு.........*
முண்மையாங்குருவாறபெற்றவுபதேசங்கொண்டேசெய்வான்.

(இ-ள்.) கண்ணுக்கினிமையானபண்டத்தைப் பரமசிவனுக்குப்பிரீதியாகக் கொடுத்தானானால் அவன்புண்ணியலோகத்திறபொருந்துவான் அல்லாமலும் மெய்ஞ்ஞான குருவினாற்பெற்றுள்ள உபதேசவாக்கியத்தைக்கொண்டு சிவபூசைசெய்கின்றவன் யாதோரிடையூறு

ல் சிவபூசையையிழந்த நாளில் சிவாலயத்திற்குப்போய்ப் பரமசிவனை ப்பிரதக்ஷண நமஸ்காரஞ்செய்து வணங்கிஞல் சிவபூசைசெய்ததுபோ லாகும் என்றவாறு. .................................................. (௬க)

புத்திவித்தாரந்தன்ஞற்பொருகலிவசத்தாற்பூண்ட......... *
வித்தையாற்பொருளிச்சிப்பால்வேதத்தின்வழியைவிட்டுக் ... *
குத்திரமார்க்கங்காட்டுங்குரவனும்புதல்வன்றுனும் ......... *
பத்திர நரகில்வீழ்வார்பன்னிரத்தியாயஞ்சான்று............... *

(இ-ள்.) புத்திவிரிவிஞலும் போராடுகின்ற தரித்திரவசத்திஞ லும் - கற்றுள்ள கல்விவல்லமையிஞலும்-திரவிய இச்சையிஞலும- வேதமார்க்கத்தைவிடுத்து வஞ்சகமார்க்கத்தை உபதேசஞ்செய்கின்ற குருவும், அவ்வுபதேசத்தைக்கேட்கின்ற சிஷ்ஞம் தப்பாமல்வருத்து கின்ற நரகத்தில் விழுவார்கள். இதற்குவேதத்திற் பன்ிரண்டாவது அத்தியாயம் சாக்ஷியாகும் என்றவாறு.............................. (௬உ)

பரம்பரையாசான்பாதம்பணிந்துபதேசங்கேட்பா ............... *
னுரப்பரன்றனையாசானையொருமுகமாகக்காண்பான்............ *
கரந்திரண்டாகக்காணிற்கற்பமாநரகில்வீழ்வன்.................. *
வரம்புளாஞானவானைமற்றுறையாகக்காண்பான்.................. *

(இ-ள்.) பரம்பரையாகவரும் ஞாஞசிரியருடைய திருவடிகளை வணங்கிப் பிரமோபதேசங்கேட்கின்ற சற்சிஷ்ஞனவன் ஞானமூர்த் தியான பரமசிவனையும் சற்குருவையும் சமதிருஷ்டியாகக்கண்டு தரிச னஞ்செய்வான். அங்ஙனங்காணுது அஞ்ஞானவஞ்சகத்திஞல் இரண் டுபடுத்தி பேதமாகத்தரிசனஞ்செய்தால் கற்பகாலபரியந்தம நரகத்தி ல் விழுவான். அங்ஙனம் சற்குருவைச் சிவமாகக்காண்கின்ற சற்சிஷ ன் வேதவளவையையுணர்ந்துள்ள ஞானவானையும் ராஜதரிசனங்க ண்டாலுண்டாகின்ற பயகப்பஞதிகளோடுநின்றுவழிபடுவான். எ-று.

தேவர்கண்முனிவர்மண்ணேர்சித்தர்கள்செய்தலிங்கம்........... *
பாவஞசுயம்புவாணம்படிகமேபஞ்சலோக.......................... *
மாவவைபிரசங்காந்தமணியொன்பானிரசிதப்பொன் ........... *
யாவுநாற்சாதிக்காகுமிதரர்க்குமாதர்க்காகா.......................*

(இ-ள்.) தேவர்கள் - முனிவர்கள்-மனிதர்கள் - சித்தர்களாகிய

இவர்களாற் செய்த லிங்கங்களும் - பாவனைலிங்கம் - சுயம்புலிங்கம் - வாணலிங்கம்-படிகலிங்கம்-வகைவகையாகப் பஞ்சலோகங்களாற்செய்தலிங்கம் ரசலிங்கம்-காந்தலிங்கம்-நவரத்நங்களாற் செய்த லிங்கம் வெள்ளிலிங்கம் - சுவர்ணலிங்கமாகிய இவைகள் அனைத்தும் பிர்ம்ம க்ஷத்ரிய - வைசிய-சூத்திரரென்னு நான்கு சாதியிலுள்ளவர்களுக்கும் பூசிக்கவாகும் இவர்களல்லாத அன்னியஜாதியிற் பிறந்தவர்களுக்கும் ஸ்திரிகளுக்கும் பூசிக்கவாகாது என்றவாறு ...................(௯௪)

அரிவையர்க்கிதரசாதிக்கருணையிலிங்கமாகுந் .......................*
தெரிவையரிரதலிங்கந்தீண்டினு நரகஞ்சேர்வர் .....................*
விரிவுளபழுதுபின்னம்வெந்தது வெடித்தலிங்கம் ..................*
பெரியநீர்வைப்பனின்றேற்பிணியினுன்மிடியாவான் ......*

(இ-ள்.) ஸ்திரிகளும் - அன்னியஜாதிகளும் - திருவண்ணாமலையிலுண்டான லிங்கத்தைப் பூசிக்கலாகும் ஸ்திரிகளானவர்கள் ரசலிங்கத்தைப் பரிசித்தாலும் நரகத்தில் விழுவார்கள். அதுவுமல்லாமல் இந்தவிதிமார்க்கந்தெரிந்து பூசிக்கின்றவன் மிகுதியாகப் பழுதுபட்ட லிங்கத்தையும், பின்னமானலிங்கத்தையும், வெந்தலிங்கத்தையும், வெடித்தலிங்கத்தையும், ஒருக்காலுஞ் ஜெலமாருத நதிகூபம்-தடாக முதலியவற்றில் விட்டுவிடுவான் அங்ஙனம் விட்டுவிடாமல் பூசிப்பானாகில் வியாதியினாலும் தரித்திரத்தினாலும் வருந்துவான். எ-று (௯௫)

மற்றுளதிசைகளாகாவடமுகமாயர்ச்சிப்பா ..........................*
னுற்றுளவுபசாரத்தாலொருமையாற்பூசைசெய்வான் .........*
றெற்றெனவழிந்தாள்பாவிதீண்டிற்பிரதிட்டைசெய்வான் .....*
சொற்றுமாரிடலிங்கத்திற்சுயம்பிற்பிரதிட்டைவேண்டா .....*

(இ-ள்.) சிவபூசைபண்ணுமிடத்து வடதிசைநோக்கியன்றிமற்றத்திசை நோக்கியிருந்து பூசிக்கலாகாது தனக்குக் கிடைத்துள்ள உபகரணங்களைக்கொண்டு மனவொருமையாற்பூசிக்கக்கடவன் ருதுவானஸ்திரிகளும் பாதகர்களும் தீண்டினால் பிரதிஷ்டைசெய்யக்கடவன் சொல்லுகின்ற ஆரிடலிங்கத்திற்கும் சுயம்புலிங்கத்திற்கும் பிரதிஷ்டைசெய்யவேண்டியதில்லை என்றவாறு ..........................(௯௬)

இரண்டுநாட்பூசைநீங்கினிரட்டிறச்செய்வான்மூன்று ………*
மூரன்றனுமதிகபூசைமுயலுவான்மாதப்பக்கந் ………*
திரண்டநாட்பூசை நீங்கறசெழூப்பிரதிட்டைசெய்வா ………*
னரன்றனைக்கம்மாயில்போற்றிடாசாறுறசாந்திசெய்வான் ………*

(இ-ள்) இரண்டுநாளைய பூசையை யாதொரிடையூறின்றிச் செய்யாதொழிந்தவன் நாலுநாளையபூசையைச் செய்யக்கடவன், மூன்று நாளையபூசை முட்டுப்பட்டாலும் அவ்வகையே இரட்டிப்பானபூசையைச் செய்யக்கடவன், அல்லாமலும் ஒருமாதம் - ஒருபக்ஷம் - அல்லது அநேகநாள் பூசை செய்யாதிருந்தால் பரமாசாரியரால் உளம் பொருந்திய பிரதிஷ்டைசெய்து சிவாலயத்திற் சென்று பரமசிவனை வணங்கிச் சாந்திசெய்துகொள்ளக்கடவன் என்றவாறு ……… (௧௭)

சத்தியிற்சத்தன்கூடிதாய்தந்தையாகிநின்ற ………*
வுத்தமவிரதலிங்கமொன்றொருபத்துக்கோடி ………*
யத்தகையிலிங்கமொக்குமதனுறிபூசைசெய்தாற் ………*
சத்துருநாசம்புத்திமுத்திகடாமுமுண்டாம் ………*

(இ-ள்.) சத்தியுஞ் சிவமுமொன்றாகக்கூடி உயிர்களுக்கு மாதாவும் பிதாவுமாகிப் பிரகாசிக்கின்ற உத்தமமாகிய ஒரு ரசலிங்கமானது ஏனைய அந்தத் தகுதிய கிய பத்துகோடி லிங்கங்களுக்குச் சமானமாகும் அல்லாமலும் அந்தரசலிங்கத்திலிட்டத்தற் பூசைசெய்தால் சத்துருநாசமும் - விவேகமும் - மோக்ஷமுமுண்டாகும். எ-று (௧௮)

இரதலிங்கத்திற்பூசையியற்றியதீர்த்தங்கொண்டோர் ………*
சரவுளபிணியுஞ்சன்மக்கரோகமுமிடருநீங்கும் ………*
பிரமன்மால்மகவான்மற்றுப்பெருபதமடையலாகும் ………*
விரவுபாதகங்களெல்லாங்கனல்படுவிறகைமானும் ………*

(இ-ள்.) இரசலிங்கத்திற் பூசைசெய்த தீர்த்தத்தை உட்கொண்டவர்களுக்கு சரீரத்தில் மறைந்துள்ள வியாதிகளும் பிறவிமூர்ச்சைகளும் சகல துன்பங்களும் நீங்கிவிடும். அல்லாமலும் பிர்ம்மபதமும் விஷ்ணுபதமும் - தேவேந்திரபதமும் - மற்றுமுண்டான பெரியபதங்களும் அடையலாகும் அநேகமாய்ச் சேர்ந்துள்ள மகாபாதகங்களெல்லாம் அக்கினியாற்பற்றப்பட்ட விறகைப்போல் நாசமாய்விடும். எ-று.

நீடியவிரதலிங்கநிந்தித்தார் நரகில்வீழ்வர் ...................... *
நாடியபிறப்பில்வந்தாலும்நரிபூனையோந்தி .................. *
வாடியகழுகுகாக்கைவடிவமாய்ப்புலையர்க்காளாய்க் ...... ...... *
கோடியகூனருமாய்க்குருடராய்ப்பிறப்பரன்றே..... ............ *

(இ-ள்.) பெருமைமிகுந்த ரசலிங்கத்தைத் தூஷித்தபேர்கள் நரகத்தில்விழுவார்கள் அங்ஙனம் விழுந்தவர்கள் தெய்வகதியாய்க் குறித்த பிறவிகளையில் வந்தேதெனில் நாய்-நரி-பூனை-ஓணான்-மெலிவடைகின்ற கழுகு-காக்கை இவைகளினுருவெடுத்தும் பண்டு மனிதராய்ப்பிறந்து சண்டாளர்க்கு அடிமைப்பட்டுப் பின்பு வளைந்தகூனராகவும் - ஊமராகவும் - குருடராகவும் பிறப்பார்கள் எ-று ....(௪௰)

அந்தியகாலந்தன்னிலணிவயிற்றிரதநிற்கிற் ..... ...... .......... *
றந்தைதாய்பிறவுங்கொன்றான்சுராபானங்கொடல் .... ........ *
பந்தபாதகங்கணீங்கிப்பரிமேதயாகங்கோடி...... ................ *
யிந்தநற்பலனுமுண்டாயாவர்க்குமேலதாவன் ........................ *

(இ-ள்.) தேகாந்தத்தில் ஒருவனுடைய அழகியவயிற்றின்மேல் இரசலிங்க நிற்குமானால் மாதா பிதாக்கள் முதலானவர்களைக் கொல்லுதல்-மதுபானஞ்செய்தல்-சென்மாந்திரத்திற் கட்டுபட்ட பாதகங்களாகிய இவைகளெல்லாம் நீங்கக் கோடி அசுவமேதயாகஞ் செய்த நல்லபலன்களுமுண்டாகி அவன் சகலமானபேர்களுக்குமேலானவனாகியிருப்பான் என்றவாறு ........ ... .. ..... ..................... .......(௪௧)

மனிதர்கண்முனிவர்தேவர்வகுத்தலிங்கத்துக்குண்டா..... ..... *
மினியநிர்மாலியங்கண்மற்றைலிங்கத்துக்கில்லை........ ...... .. *
புனிதமாந்துளசியோடுபூசைநீருள்ளேகொண்டாற்..... ...... *
றனிவரும்பிறவிநீங்குஞ்சாயம்போய்ஞானமுண்டாம்...... *

(இ-ள்.) இனியவாகிய நிர்மாலியங்களானது மனிதர்களாலும் முனிவர்களாலும்-தேவர்களாலும்-பிரதிஷ்டை பண்ணப்பட்ட லிங்கங்களுக்கேயன்றி ஏனையலிங்கங்களுக்கு இல்லை ஆனபடியினால் பரிசுத்தமாகிய நிர்மாலிய துளசியோடு அபிஷேகதீர்த்தத்தையும் உட்கொண்டால் தனித்தனியே வருகின்ற பிறவித்துன்ப நீங்கும் சாயங்கள் நீங்கும் பிரமஞானமுண்டாகும் என்றவாறு ...... ... .. ......... (௪௨)

தத்துவஞானியோகிதனக்கா நின்மாலியங்கள் ........................ *
பத்தரல்லாதாருண்டாற்பதினலிந்திரர்கள்சால ....... .... *
மெத்திய நரகில்வீழ்வர்வேதத்தின் பூசைக்கில்லை......... ...... *
யத்தனின்மாலியங்களாகமபூசைக்குண்டாம் . . . . ..... ....... *

(இ-ள்.) தத்துவஞானத்தையறிந்த பெரியோர்களும்,யோகீஸ்வரர்களும், நிர்மாலியங்களை உட்கொள்ளலாகும் சிவனடியாரல்லாத பேர்கள் உட்கொண்டால் பதினலு தேவேந்திரர்களுடைய காலபரியந்தமும் வருத்தமேலிடுகின்ற நரகத்தில் விழுவார்கள் அல்லாமலும் பரமசிவனை வேதவிதியாற் பூசிக்கும் பூஜாதிரவியங்கள் நிர்மாலியமல்ல சிவாகமவிதியாற் பூசிக்கும்பூஜாதிரவியங்கள் நின்மாலியமென்று சொல்லப்படும் என்றவாறு.................................................. (சங)

அந்தணரலாதமூவராகமம்விதித்தவாற்றாற்..... ...... ........... *
சிந்தையாற்சிற்பன்செய்தசிவலிங்கபூசைசெய்வா............ . . *
ரிந்தமாதவத்தினேர்கட்கேதுமாலிங்கபேதம் .......... .. .. . . *
பந்தமில்திருநீற்றுண்மைபாக்கியஞ்செய்தார்கேண்மின்.... . . *

(இ-ள்.) பிராமணர்களல்லாத மூன்றுசாதியாரும் சிவாகமங்களிற்சொல்லியவழியே சிற்பாசாரியன் மனப்பூர்வமாகச் செய்த சிவலிங்கத்தைப் பூசிப்பார்கள் இப்படிப்பட்ட சிவலிங்கத்தைப் பூசிக்கும்படியான தவத்தையுடையவர்களுக்கு மகாலிங்கபேதங்கள் ஏது இப்டால் பந்தத்தைக் கெடுக்கின்ற திருநீற்றின்மான்மியத்தை - கேட்கும் டாக்கியஞ் செய்தவர்களெல்லாருங் கேளுங்கள். எ-று. (சச)

---

சிவபூஜாவிதிச்சருக்க முற்றுப்பெற்றது.

அ௲ சருக்கம் - ௰உ - க்கு - திருவிருத்தம் (௬௱௨௭)



திருச்சிற்றம்பலம்.

பதின்மூன்றாவது,

# விபூதிச்சருக்கம்.



விரதிவானப்பிரத்தன்வீட்டுளான்பிரமசாரிக் ……… … … . *
கரனுரைசெய்தவெண்ணீறவரவர்தமக்கேயாகும் ……… ….. *
பரதவர்பாழிநீறுமியாகத்திற்பயின்றநீறு… ……… …. ……*
மரபின்மூவர்க்குமாகுமறையவர்தமக்குமாகும்… ……… ……*

(இ-ள்.) சன்னியாசி-வானப்பிரஸ்தன்-கிரகஸ்தன்- பிரமசாரி யென்னும் நால்வருக்கும் பரமசிவன் அனுச்கிரகித்தபடி அவரவர்களால் விளைவிக்கப்பட்ட வெண்ணீறு அவரவர்களுக்கேயாகும். அல்லாமலும் மேலான தவத்தையுடைய அடியார்களது மடாலயத்தில் விளைந்த கற்பநீறும் யாகசாலையில் விளைந்த நீறும் க்ஷத்திரியராதிய முக்குலத்தவர்களுந் தரிக்கலாகும் எடுத்தவுடனே பிராமணர்களுந் தரிக்கலாகும் என்றவாறு …. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . ….. . . (க)

காட்டநன்னீறுங்கோயிற்கருதருநீறுநல்லோர்……………….. *
வீட்டினிற்சமைந்தநீறுமெல்லியரிதரர்க்காகு . . . ……. …. . . *
நாட்டுமுச்சந்திதோறுநாற்குலத்தவருநீற்றைத்… …. ., …… *
நீட்டிநீர்குழைத்துச்சாத்தச்செழுந்தவர்க்கென்றுமாகும்…… *

(இ-ள்.) விறகினால் விளைந்த நல்லநீறும், சிவாலயமடப்பள்ளியில்விளைந்த நினைத்தற்கரிய திருநீறும், பெரியோர்களது மனையில் விளைந்த திருநீறும், ஸ்திரிகளும் அன்னியஜாதியோரும் தரிக்கலாகும் திருநீற்றை வடித்துக்கொண்டு சலத்திற்குழைத்து நான்குகுலத்திலுள்ளவர்களும் வளமைமிகுந்த தவத்தையுடையவர்களும் விதிக்கப்பட்ட மூன்றுகாலங்களிலுந் தரிக்கலாகும் என்றவாறு…….. (உ)

மங்கையர்சந்நியாசிமறைவானப்பிரத்தன்றேவி . …………. *
தங்கிபபிரமசாரிசலத்தினிற்குழைக்கலாகா…………………… *
வங்குடதேசமில்லானந்தநீர்குழைக்கலாகா……… ……… *
துங்கவெண்ணீற்றையள்ளித்துகிலினல்வடித்துக்கொள்வான் *

(இ-ள்.) ஸ்திரிகள்-சந்நியாசி-பிராமணனாகிய வானப்பிரஸ்தன்

அவன்மனைவி பொருந்திய பிரமசாரி இவர்கள் சலத்திற்குழைத்துத் தரிக்கப்படாது, அல்லாமலும் ஆசிரியருபதேசமில்லாதவனும் அழகிய நீற்றைச் சலத்திற்குழைத்துத் தரிக்கப்படாது, பரிசுத்தமாகிய வெண்மைபொருந்திய திருநீற்றைக் கையினாலள்ளி வஸ்திரத்தில் வடித்தெடுத்துத் தரித்துக்கொள்ளுவான் என்றவாறு ..... .......(௩)

மறைகளாகமத்திற்சொன்னமாசிலா நீறுதன்னை....... ..........*
முறையினுத்தூளம்பண்ணிமூவிரறோன்றச்சாத்தி .. .......... *
னறைதருதீர்த்தமெல்லாமாடி நூறியாகஞ்செய்து ... ....... *
திரிபுவியடையத்தானஞ்செய்தவர்பலனையொக்கும்........ *

(இ-ள்) நான்குவேதங்களிலும் சிவாகமங்களிலுஞ் சொல்லிய களங்கமில்லாத திருநீற்றைமுறையாகச் சரீரமுழுதும் உத்தூளனஞ்செய்து மூன்றுவிரல் தோன்றும்படியாகத் தரித்தால் அதின்பலன் சொல்லப்பட்ட சகல தீர்த்தங்களிலும் ஸ்நானம்பண்ணி நூறுயாகங்கள்செய்து பிராமணர்களுக்குத் திரிலோகமுழுதுந் தானஞ்செய்தபேர் அடையப்பட்ட பலனுக்குச் சமானமாகும் என்றவாறு.....(௪)

உச்சியிநெற்றிகண்டமுடம்பரைகால்கைபின்னர்............ *
மெச்சிவெண்ணீறுமூன்றுவிரல்படச்சாத்தினிந்து............ *
நச்சியனயனமாலை நாரியோர்புலித்தோனவ்வி ... ...... . ....... *
யிச்சையாம்பரசுயானைத்தோலுமங்கிருக்குமன்றே........... *

(இ-ள்) உச்சி-நெற்றி-கழுத்து - உடம்பிற்பாதியான இடுப்பு-கால்-கை-முதலிய மற்றைய ஸ்தானங்களிலும் இந்த விபூதியே சகல வினையையுந் தீர்க்குமருந்தென்று உண்மையாகத்தியானித்து மூன்றுவிரல பொருந்தத்தரித்தால் அவனிடத்தில் மூன்றாம்பிறையும் விஷமும்-மூன்றுகண்ணும்-கொன்றைமாலையும்-ஒருபாகத்திற்பெண்ணும் புலித்தோலும்-கலைமானும் - இச்சிக்கப்படுகின்ற மழுவும் - யானைத்தோலும் நீங்காமலிருக்கும். (எ-று.) இங்ஙனங் கூறினமையால் அவனே சிவனாயிருப்பனென்பதாம்.............................. .............. (௫)

பொட்டுடன்சதுரஞ்சூலம்புரிந்திடலாகாநீற்றின்...................*
மட்டவிழ்சந்தமூதிமண்ணிடலாகாநீற்றை .............................*

யிட்டவன் றன்னை நிந்தையெண்ணினேனுடன்பட்டோனுந்.. *
திட்டமா நரகமெல்லாஞ்சிவனாணைதரிவரன்றே............ ....*

(இ-ள்) திருநீற்றை நெற்றியிற் பொட்டாகவும் சதுரமாகவும் சூலம்போலவுந் தரிக்கப்படாது அல்லாமலும் திருநீற்றினிடத்தில் வாசனைவீசுகின்ற சந்தனமுதலானதுகளையும் திருமண்ணையுந் தரிக்கப்படாது திருநீறு தரித்திருக்கின்றவனைத் தூஷிக்க வெண்ணினவனும் அவனோடுடன்பட்டிருந்தவனும் திட்டமாகிய எல்லாநரகங்களிலும் சிவனுடைய திருவாணைப்படிக்கு திரிவார்கள் என்றவாறு.. (சு)

அந்தணராவார் தம்மையரியரனுடையாளத்தைச்............ *
சுந்தரத்தோளிற்காய்ச்சிச்சுட்டிடிற்கூடுண்டானு........ *
முந்தவேசுட்டான்றானுமுழங்கெரிநரகில்வீழ்வ............ *
ரிந்தநாட்டவரையோட்டும்ராஜனேராஜனாவான்............ *

(இ-ள்.) விஷ்ணுவினடையாளமான சங்குசக்கிரத்தையும் சிவனுடையாளமான சூலத்தையும் அக்கினியிற்காயவைத்தெடுத்து பிராமணர்களுடைய அழகிய தோள்களிற் சுட்டால் அதற்குடன்பட்டுக் கூடுண்ட சீஷனும் முதன்மையாயிருந்து சுட்ட ஆசிரியனும் சத்திக்கின்ற எரிவாய் நரகத்தில்விழுவார்கள் அங்ஙனஞ் செய்தவவர்களை இந்தநாட்டைவிட்டுத் துரத்துகின்ற ராஜனேராஜனாவான். எ-று (எ)

(வேறு.)

கவுதமனை நிந்தைசெய்தகாதன்மறையோனைத்.................. *
தவரவர்சபித்தடாதாழ்வுறுமண்ணிட்டுச்....................... *
சிவனையவனீற்றையருள்சேர்ந்தவடியானைப்.................. *
புவனிதனினிந்தைசெய்துபோம்நரகிலென்றார்............... *

(இ-ள்.) முற்காலத்தில் கௌதமரிஷியைத் தூஷித்த காமிய புத்தியையுடைய பிராமணர்களைப்பார்த்து அந்தக் கௌதமரிஷி சாபமிட்டார், அவையாவன, இழிவுபொருந்திய மண்ணைத்தரித்து பரமசிவனையும் அவனது விபூதியையும் அவனருள்பெற்ற அடியார்களையும் பூலோகத்திற் றூஷித்து அதனால் எப்போதுந் தொலையாத நரகத்திற்போகக்கடவீர்களென்று சொன்னார் என்றவாறு......... (அ)

அப்படிசபித்தமையினன்றுமுதலாகத் ......................... ............*
துப்பிலிகணிந்தைசெய்வர்தூமறையைநம்பி...... ......... .......*
முப்புவனமும்புனைவர்மூவரொடுதேவ.... ........ ... ...... *
மெப்புவனமும்புனைவரெங்கடிருநீறே ............... ......... ..*

(இ-ள்.) அங்ஙனம் கௌதமரிஷியானவர் சாபமிட்டபடியால் அந்தநாண்முதலாக - விவேகமில்லாத வைஷ்ணவர்கள் தூஷிப்பார்கள் ஆனால் பரிசுத்தமாகிய வேதவாக்கியத்தைநம்பி எங்களுடைய திருநீற்றைத் திரிலோகத்திலுள்ளவர்களுந் தரிப்பார்கள் மும்மூர்த்திகள் முதலான தேவர்களும் எந்தவுலகத்திலுள்ளவர்களுந் தரிப்பார்கள் என்றவாறு...................................................................(௯)

எண்டிசைகள்கீழுலகமேலுலகமெங்கு ........... .................. *
மண்டுமறையன்றியில்வழங்கிலதுவேத .... ........ ...... .. ....*
முண்டுதிருநீறஃதுயிர்க்குறுதிமுத்தி......................................... *
விண்டுதரும்வேறதுபொய்வேறதுபொய்யென்னும்.. .... ... *

(இ-ள்.) எட்டுத்திசைகளிலும்-கீழுலகத்திலும் - மேலுலகத்திலும்-எந்தவுலகத்திலு நிறைந்த வேதஞ்சொன்னபொருளேயல்லாமல் வேறொன்றால் மோக்ஷமுண்டென்பது குற்றமாகும் திருநீறே எந்தக்காலத்திலும் உள்ளது அதுவே உயிர்க்குறுதியான மோக்ஷபதத்தைக் கொடுக்கும் அதுவல்லாத மற்றவைகளெல்லாம் மாயை-மாயையென்று சொல்லும் என்றவாறு .... ........ ....................... ......(௰)

உண்டியியல்பெங்குமுளதாகுமஃதொப்ப.............................*
வெண்டிசையினோருமியல்பாயணிவர்நீற்றைப்....... ...... ... *
புண்டரமுமக்கமுமகிழ்ந்துபுனைவார்பாற்............................ *
பெண்டுணையுடன்பரமர்பின்றிரிவரன்றே......... .... . . . ....*

(இ-ள்.) உடற்குறுதியாகப் புசிக்கின்ற உணவின்தன்மைஎந்தவிடத்திலும் சுபாவமாக இருக்கின்றது அதுபோல உயிர்க்குறுதியாகத் தரிக்கின்ற திருநீற்றையும் எட்டுத்திசையிலுள்ள யாவர்களுஞ் சுபாவமாகத் தரிப்பார்கள் அதுவுமல்லாமல் மனமகிழ்ந்து திரிபுண்டரமும் ருத்திராக்ஷமணியுந் தரிக்கின்றவர்களைவிட்டுநீங்காமல் பரமசிவனானவர் உமையவளோடும்அவர்கள்பின்னேதிரிவார்.எ-று(௰௧)

முத்தியெனுமங்கையைமுயன்றுவசமாக்கி ............ *
லொத்தமணிமந்திரமருந்துகளுமுண்டா ............ *
மத்தனைதனைப்பகர்வமஞ்சுபதநீறு ............ *
சத்தரணிகண்டிகைதரிக்கில்வசமாவாள் ............ *

(இ-ள்) முத்தியென்கின்ற ஸ்திரியை முயற்சிசெய்து வசப்படுத்தவேண்டுமாகில் அதற்குத்தகுந்த மணிமந்திர அவுஷதங்களுமுண்டு. அவையாவையெனில்- அதையுஞ்சொல்லுகின்றோம். பஞ்சாக்ஷரமும்-விபூதியும் சத்துக்கள் தரிக்கின்ற உருத்திராக்ஷ கண்டிகையுமாம் இதுகளால் பேரின்பத்தைத்தருகின்ற மோக்ஷமங்கையானவள் வசப்படுவாள் என்றவாறு ............ (௰௨)

நீற்றினொடுகண்டிகைநினைந்துபுனைவார்தம் ............ *
பேற்றினளவென்னவர்பிறந்ததுவெசென்மம் ............ *
போற்றியவருக்குதவுபூசையதுபூசை ............ *
யாற்றலுளநற்கொடையுமேகொடையதாமால் ............ *

(இ-ள்) விபூதியுடனே உருத்திராக்ஷகண்டிகையையும் இதுவே சிவமுத்திரையென்று தியானஞ்செய்து தரிக்கின்றவர்கள் பெற்ற பேற்றுக்கு என்ன அளவைச்சொல்லுவோம் அவர்களெடுத்தஜென்மமே ஜென்மம் அவர்களை வணங்கி அவர்களைப் பூசிக்கின்ற பூசையே பூசை அவர்களுக்குக்கொடுக்கின்ற உயிர்க்குறுதியான நல்ல தியாகமே தியாகமாகும் என்றவாறு ............ (௰௩)

நீறுபுனைவார்வினையைநீறுசெய்தலாலே ............ *
வீறுதனிநாமமதுநீறெனவிளம்புஞ் ............ *
சீறுநரகத்துயிர்செலாவகைமருந்தாய்க் ............ *
கூறுடையத்தவிகையின்முன்னமுறைகொடுத்தார் ............ *

(இ-ள்) விபூதியானது தன்னைத் தரிக்கின்றவர்களுடைய சகலவினைகளையும் நீறாகச்செய்தலினால் அதற்குப்பரிசுத்தமான ஒப்பற்ற நாமமானது திருநீறென்று வேதஞ்சொல்லும் அந்தத் திருநீற்றை ஆன்மகோடிகள் சீறுகின்ற நரகத்தில் விழாதபடிக்குச் செல்லவி

யாதிக்குப் பூர்வத்தில் பரமசிவனானவர் தமது இடப்பாகத்தையுடைய உமையவள் கையில் அவுஷதமாகக் கொடுத்தருளினார். எ-று. (௰௬)

நோயகலும்வந்தவினை நந்தும்வினையெல்லாம் ...... .... .... .... *
போயகலும்வெண்பொடிபுனைந்தவுடனேமுற் ... ............ *
பேயகலும்வஞ்சகப்பிறப்பொடிறப்பின் .............. .... ......... *
றாயகலு நன்மைகடழைத்துவருமன்றே .... ........ .... ......... *

(இ-ள்.) வெண்மைபொருந்திய விபூதியைத்தரித்தவுடன் சரீர சம்பந்தமான சகல வியாதிகளுநீங்கும், ஜீவசம்பந்தமாய்ச் சரீரமெடுத்தற்குமுதலுண்டான வினைகளும் மேல்வரும் வினைகளும் நீங்கும், மனசம்பந்தமாய் முன்னமே நானென்றுதன்னைமயமதித்திருந்த சகல பேய்களும் நீங்கும், அல்லாமலும் பிறப்பும் இறப்பும்இல்லாமல் நீங்கிப்போம் ஞானமானதுமேன்மேலாகத்தழைத்தோங்கும் எ-று.

தீர்த்தமுமிதிற்பெரியதீர்த்தமவையில்லை..... .... . . .......... . . .. *
ஏத்தரியசெல்வமுமிதிற்பெரியதில்லைப்.......... ............ *
போர்த்துணாமருந்துகளிதிற்பெரியதில்லை.......................... *
தீர்த்தவருபண்டிதருநீற்றதிகரில்லை . . . ..... .. ... ...... ........ *

(இ-ள்.) சகல தீர்த்தங்களிலும் இந்த விபூதியிற் பெரிதான தீர்த்தங்களில்லை, துதிக்கப்பட்ட அரிய செல்வங்களிலும் இதிற்பெரிதான செல்வங்களில்லை, வேறுவேறாகச்சொல்லுகின்ற ஔஷதங்களிலும் இதிற் பெரிதான ஔஷதங்களில்லை, சகல வியாதிகளையுந் தீர்க்கவருகின்ற வயித்தியர்களிலும் இதிற்பெரிதான வயித்தியர்களில்லை. எ-று.

"சந்தவயனாரணர்பராசரர்வசிட்டர்.... .............. ...... ..... ..... *
கந்தரனவேதிசெயமாமுனிகணந்தி...................... ... ....... *
தந்தமிலுணர்ந்துதருமந்தவமெவைக்கும் ............ .... . . ... *
வெந்தபொடிநீங்கினவைவீணெனவுரைத்தார்..... . . ............ *

(இ-ள்.) வேதகர்த்தாவாகிய பிர்மமா-விஷ்ணு-பராசரர்-வசிஷ்டர்-கந்தனையொத்த பிராமணர்கள் - செயமபொருந்திய மகாமுனிவர்கள்-நந்தீஸ்வரர் - இவர்களெல்லாம் தங்கள் தங்களில் ஆலோசித்தறிந்து தருமந் தவமுதலான எவைகளுக்கும் விபூதியொன்றுஇல்லாவிட்டால் அவைகள் விருதாவென்று சொன்னார்கள் என்றவாறு (௰௭)

வேகாதவேமுறுகவெந்ததுசிவப்பு .............................. *
மாகரிதுவெண்மையுள்ளதததலையுமத்திப் .............................. *
போகமுறலானதுபேர்பூதியெனவைத்தா .............................. *
ரோகவருண்மேவலினிரக்ஷையெனவைத்தார் .............................. *

(இ-ள்.) நன்றாய் வேகாத விபூதியும், வெந்துகரித்தவிபூதியும், சிவந்த விபூதியும் தரிக்கலாகாது. தவளநிறமாயுள்ள விபூதியெவ்வளவுண்டு அவ்வளவுந் தரிக்கலாகும். அங்ஙனம் தரிப்பவர்களுக்கு மோக்ஷமும் சர்வஅயிஸ்வரியமும் உண்டாதலினால் அதற்குப்பேர் பூதியென்று வைத்தார்கள். அல்லாமலும் ரோகமாகிய திருவருளுண்டாதலினால ரக்ஷையென்று வைத்தார்கள் என்றவாறு .........(௰௭)

விபூதிச்சருக்கமுற்றுப்பெற்றது.

௭ சருக்கம் - ௰௭ - க்கு - திருவிருத்தம் (௱௪௫)

திருச்சிற்றம்பலம்.

பதினான்காவது

## உருத்திராக்ஷச்சருக்கம்.

திரிபுரனெனும்பெயர்திருந்தசுரனாலே .............................. *
யரியயன்முதற்சுரரழிந்துதுயரெய்தி .............................. *
வரிபுலிவையுரிபுனையும்வானவனைநோக்கி .............................. *
யுரியதவமாவருடமாயிரமுறைந்தார் .............................. *

(இ-ள்.) திரிபுரனென்று வழங்குகின்ற பெயரையுடைய ஒரு ராக்ஷசனால் விஷ்ணு-பிர்ம்மா-முதலான சகலதேவர்களும் மனவலிமையழிந்து துன்பத்தையடைந்து வரிபரந்த புலித்தோலை ஆடையாகத்தரித்தருளிய பரமசிவனைக்குறித்து ஆயிரந் தேவவருஷபரியந்தம் சிவதரிசனமுண்டாதற்குரிமையான பெருமைபொருந்திய தவத்தைச்செய்தார்கள் என்றவாறு..............................(௧)

வன்திரிபுரன்புரியும்வாதைதனைநோக்கி....................... *
யன்றுவிடைமேலானுமம்பிகையும்வந்து.......................... *
வன்திறன்முராரியயன்வானவரைநோக்கி.......................... *
மென்றுளிகண்முக்கணினும்வீழ்ந்ததெனைவாழ்த்த.......... *

(இ-ள்.) அங்ஙனம் அவர்களெல்லாருந் தவஞ்செய்தகாலத்திலே பரமசிவனானவர் கொடிய திரிபுரனானவன் செய்கின்ற வருத்தத்தைக் கண்டு உமையவளோடும்ரிஷபவாகனத்தின்மேலெழுந்தருளிவந்து மகா பலத்தையுடைய விஷ்ணு பிர்ம்மாமுதலான சகலதேவர்களையும் பார்த்து அவர்கள் படுந்துன்பத்திற்குச் சகிக்கப்படாமலும் எம்மை ரக்ஷிக்கும்படியாகவும் பரமசிவனுடைய மூன்றுகண்களிலுமிருந்து மிருதுவாகிய நீர்த்துளிகள் விழுந்தன என்றவாறு.........(உ)

உருத்திரன்விழித்துளிகளேயுருத்திராக்கந்.......................... *
திருத்திரவிசந்திரன்றருந்துகனற்கண்ணி........................ *
லருத்தமிகுபேதமிரண்டாறுபதினாறு.............................. *
பொருத்தொருபதென்பர்நிறம்பொன்றவளங்காரோ............ *

(இ-ள்.) பரமசிவனது மூன்று கண்களிலுமிருந்துண்டான நீர்த்துளிகளை உருத்திராக்ஷமணிகளாகும். அல்லாமலுந் திருத்தமாகிய சூரியநேத்திரத்திலுண்டான செல்வமிகுந்தமணிகள் பன்னிரண்டு பேதமுடையதென்றும் சுவர்ணநிறமென்றும், சந்திரநேத்திரத்திலுண்டானமணிகள் பதினாறு பேதமுடையதென்றும், வெண்ணிறமென்றும் பிரகாசிக்கின்ற அக்கினிநேத்திரத்திலுண்டானமணிகள் பொருத்தமாகிய பத்துப்பேதமுடையதென்றும்,கருநிறமென்றுஞ் சொல்லுவார்கள் என்றவாறு..........................................(௩)

வெண்மைமறையோருரிமைவேந்துரிமைபொன்மை..... *
வண்மைவணிகர்க்குமுன்வருத்ததவளத்தி.................... *
னுண்மையுளசூத்திரருக்குள்ளதுகறுப்பே................... *
முண்மணிகள்காய்க்குமரமுப்பதுடனெட்டே................ *

(இ-ள்.) பிராமணர்களுக்குரிமையானது வெண்ணிறமணிகளும், க்ஷத்திரியர்களுக்குரிமையானது பொன்னிறமணிகளும், வளமைபொருந்திய வைசியர்களுக் குரிமையானது சொல்லப்பட்ட வெ

ணிறமணிகளும், உண்மையையுடைய சூத்திரர்களுக் குரிமையானது கருநிறமணிகளுமாம். அல்லாமலும் அப்படிப்பட்ட முகங்களையுடைய ருத்திராக்ஷமணிகள் காய்க்கின்றமரங்களும் முப்பத்தெட்டு விதங்களாகும் என்றவாறு ........................................ (௪)

ஒருமுகமிரண்டுமுகமுஞ்சிவசொரூப ........................ *
பருவுமறையோர்பசுவதைத்தபழிமாறு ........................ *
மருமையுளமூன்றுமுகமக்கினிசொரூபம் ........................ *
பெருகவணியிற்பெருகுதிபெண்கள்பழிமாறும் ........................ *

(இ-ள்) ஒருமுகமணிகளும், இரண்டுமுகமணிகளுஞ், சிவஸ்வரூபமாகும் அந்த மணிகளைத்தரித்தால் பொருந்திய பிராமணர்களையும்-பசுக்களையும்-கொன்றபாதகங்கணீங்கும். அருமையாகிய மூன்றுமுகமணிகள் அக்கினிஸ்வரூபமாகும். அந்தமணிகளையதிகமாகத்தரித்தால் அனேகஸ்திரிகளை வதைசெய்தபாதகங்கணீங்கும். எ-று

நாலுமுக நான்முகவனரவதைகண்மாறுங் ........................ *
காலவனலஞ்சுமுகமுண்டவினைகாலும் ........................ *
வேலனுருவாறுமுகம்வேதிவதைமாறு ........................ *
மேலவெழுசேடனுருவேமகளர்வகும் ........................ *

(இ-ள்.) நாலுமுகமுள்ள மணிகள் பிர்ம்மாவினுடைய ஸ்வரூபம் அந்தமணிகளைத்தரித்தால் மனிதர்களை வதைசெய்த பாதகங்கணீங்கும். ஐந்துமுகமுள்ளமணிகள் காலாக்கினிஸ்வரூபம், அந்த மணிகளைத்தரித்தால் சரீரத்தில் மூண்டுள்ள சகலவியாதிகணீங்கும். ஆறுமுகமுள்ளமணிகள்-சுப்பிரமணியஸ்வரூபம், அந்தமணிகளைத் தரித்தால் பிர்ம்மஹத்தி மகாபாதகங்கணீங்கும். உயர்வாகிய ஏழுமுகமுள்ள மணிகள் ஆதிசேஷஸ்வரூபம். அந்த மணிகளைத்தரித்தால் பொன்களவினாலுண்டான பாதகங்கணீங்கும். எ-று ........ (௫)

அட்டமுகமானைமுகனுருதாந் ........................ *
தொட்டதறுமொன்பதுமுகம்வயிரவன்மேனி ........................ *
யெட்டுமரன்முத்தியொப்புத்தியிடக்கையிற் ........................ *
கட்டிடுமொருக்கா-மறையோர்வதைகள்காலும் ........................ *

(இ-ள்.) எட்டுமுகமுள்ள மணிகள்-கணபதிஸ்வரூபம், அந்த மணிகளைத்தரித்தால் குருதாரத்தைத்தீண்டினபழிநீங்கும். ஒன்பது முகமுள்ள மணிகள் - வைரவஸ்வரூபம், அந்தமணிகளைத் தரித்தால் சிவசாயுச்சியமும் விவேகமுமுண்டாகும். அதுகளை இடக்கரத்தில் மாலையாகக் கோத்துத்தரித்தால் ஒருகோடிபிராமணர்களைக்கொன்ற பாதகங்கள் நீங்குமென்றவாறு ...................(எ)

பத்துமுகமாபவர்பசாசுமிருகம்போ ....................*
மத்தர்பதினொன்றுமுகம்பாதகபலனெய்து ....................*
முத்திரவியீராறுமுகத்தையுடல்பூணின் ....................*
மெத்தசுளயாகபலமும்மெய்க்கொலைகளேகும் ....................*

(இ-ள்.) பத்துமுகமுள்ளமணிகள் - விஷ்ணுஸ்வரூபம், அந்த மணிகளைத் தரித்தால் பைசாசவாதையும்-மிருகவாதையுநீங்கும். பதினொருமுகமுள்ளமணிகள்-சிவஸ்வரூபம்-அந்தமணிகளைத் தரித்தால் யாகஞ்செய்தபலனும் மோக்ஷமுமுண்டாகும் பனிரண்டுமுகமுள்ள மணிகள்-சூரியஸ்வரூபம், அந்தமணிகளைத்தரித்தால் அளவில்லாத யாகபலனுண்டாகி அவயவபங்கம்பண்ணினபாதகங்களுநீங்கும். எ-று

கந்தர்பதின்மூன்றுமுகமுந்துகணபோகஞ் ....................*
சித்தணயிலெட்டுவகைசித்திகளுமுண்டாந் ....................*
தந்தைதமர்தாய்குழவிதம்பிதமையன்பெண் ....................*
வந்தகருமாய்த்தவதைமாறுமதுபூணில் ....................*

(இ-ள்.) பதின்மூன்று முகமுள்ளமணிகள்-சுப்பிரமணியஸ்வரூபம், அந்த மணிகளைத் தரித்தால் சனம்பொருந்திய அய்ஸ்வரியமும் பாரொருகலக்கமில்லாத அஷ்டமாசித்திகளு முண்டாகும். அல்லாமலும் பிதாவையும்-சுற்றத்தாரையும்-மாதாவையும்-குழந்தையையும்-தம்பியையும்-தமையனையும்-பெண்ணையும்பொருந்தியகருவையும் வதைத்துக் கொலைசெய்தபாதகங்களெல்லாம்நீங்கும். எ-று.

மிக்கபதின்மூன்றினுக்குமேலுமுகமில்லை ....................*
தக்கதலைபொன்றுதலைமாலையுநாலொன்பா ....................*
ணக்கலைபிரட்டிக்கமாங்குரநூற்றெட்டாங் ....................*
கைக்கணிகள்பன்னிருவர்காணகலமைம்பான் ....................*

(இ-ள்) உயர்வாகிய பதின்மூன்று முகமுள்ள மணிகளுக்கு மேற்பட்ட மணிகளில்லை. அல்லாமலும் தகுதியாகிய சிகையினிடத்தில் ஒருமணியும், சிரமாலை முப்பத்தாறுமணியும், கழுத்திற்கு எழுபத்திரண்டுமணியும், மார்பிற்கு நூற்றெட்டுமணியும், கைகளுக்குப் பனிரண்டுமணியும், வாகுவணி ஐம்பதுமணியும தரிக்கலாகும். எ-று

ஆயிரமியாகபலனப்படிதரிக்கிற் ........................ *
றூயமணிப்பார்பொதிசுமைக்கழுதையொன்று ................ *
போயடவிவிந்தமலைப்புக்குயிரிழந்து ........................ *
மேயகயிலாயமலைமேவியதுகற்பம் ........................ *

(இ-ள்) அங்ஙனந் தரித்தால் தரித்தவர்களுக்கு ஆயிரம் யாகங்கள் செய்த பலனுண்டாகும். முற்காலத்தில் பரிசுத்தமாகிய ஒப்பற்ற ஒரு உருத்திராக்ஷப்பொதியைச்சுமந்த ஒரு கழுதையானது ஆரண்ணியத்திற்சென்று விந்தபர்வதத்தைச்சேர்ந்து பிராணனைவிட்டு மேன்மைபொருந்திய கயிலாசகிரியில் கற்பகாலபரியந்தம் வசித்திருந்தது என்றவாறு ........................ (௰௧)

வெள்ளிகனகந்தரளம்வித்துருமமாதி ........................ *
தள்ளினிடைநன்றுமுகமொன்றுவதுநன்று ........................ *
மெள்ளரியநற்குலமுமெக்குலமுமென்றுங் ........................ *
கொள்ளுவதுநன்றணியினஞ்சுபதங்கூறி ........................ *

(இ-ள்) இரசிதம்-சுவர்ணம்-முத்து-பவளம்-முதலானவைகளை இடைஇடையே இட்டு மணிகளின்முகத்தோடு முகம்பொருந்தக்கோத்துத் தரிப்பது நன்றாகும். அதுவுமல்லாமல் இகழ்ச்சியில்லாத நல்ல குலத்திற் பிறந்தவர்களும் இழிவான எந்தக்குலத்திற்பிறந்தவர்களும் பஞ்சாக்ஷரத்தியானஞ்செய்து எப்போதுந் தரிப்பது நன்மையாகும் என்றவாறு ........................ (௰௨)

புண்ணியமியற்றிலிறைபூசைநியமத்தி ........................ *
னண்ணுதவமாதிகளினண்ணினவைநன்று ........................ *
மெண்ணரியபாதகருமீனவுயிரியாவுங் ........................ *
கண்மணியணிந்தவர்கள்கண்பெறுவரன்றே ........................ *

(இ-ள்) ஒரு புண்ணியங்களைச் செய்கின்றகாலத்திலும் சிவபூ

சை நியமங்களைச் செய்கின்றகாலத்திலும், பொருந்திய தவங்களைச் செய்கின்றகாலத்திலும், அந்த ருத்திராக்ஷமணிகளைத் தரித்தால் நன்மையாகும். அல்லமலும் அளவறந்தபாதகங்களைச் செய்தவர்களும் இந்நிலையுடைய எல்லவுயிர்களும் ருத்திராக்ஷமணியைத் தரித்தால் ஞானக்கண்ணைப் பெறுவார்கள் என்றவாறு...... ... .. .. ... ......(௰௩)

மூழ்கினுமலங்கள்சலம்விழ்கினுமுலைக்கண் ........ ............ .. *
மாழ்கினுமருந்தினும்வருந்தினுமுறங் குந்...... ...................... *
சூழ்கினுமொர்சூதகத்தொடக்கினுமிறைக்கட் .... ............ .. . *
டாழ்வடமணிந்திடுவர்சத்தியதவத்தோர் .. ..... ...... ......... .... *

(இ-ள்.) உண்மையான தவத்தையுடைய பெரியோர்கள் ஸ்நானஞ்செய்யும்போதும் மலவிசர்க்கஞ் சலவிசர்க்கஞ் செய்யும்போதும் ஸ்திரிகளினுடைய முலையினிடத்து முயங்கி மயங்கும்போதும் புசிக்கும்போதும், வருந்தும்போதும், உறங்கும்போதும், ஒருசூதகங்கள் தொடர்ந்தபோதும், உருத்திராக்ஷத் தாழ்வடத்தைத் தரித்திருப்பார்கள் என்றவாறு.... ... ......... ............... ......... .. ...(௰௪)

சகத்திரமணித்திரள்கள்சாமுனணிவார்கண் ......... .. ....... ..... *
மகத்துவமுரைப்பரிதுவண்சிரசுகாது ....................... .. .. .. .. *
தொகுத்தகளமார்பிருகைதோளிருமணிக்கட் .. .. .......... .... *
டகத்தணியினக்கவடமுக்கணுளதாகும் ......... ......... .. ...... *

(இ-ள்.) இறந்துபோகுமுன் திரட்சியாகிய ஆயிரமணிகளைத் தரிப்பவர்களுடைய மகிமையை யளவிட்டுச்சொல்வதரிதாகும் அல்லாமலும் உருத்திராக்ஷமாலைகளை வளம்பொருந்திய சிரசிலும் காதுகளிலும்-சொல்லுகின்ற கண்டத்திலும்-மார்பிலும் - இரண்டு கைகளிலும்-தோள்களிலும் - இரண்டு மணிக்கட்டினிடத்திலும் தரித்தால் அவன் மூன்று கண்களையுடையசிவஸ்வரூபமாவனென்றவாறு (௰௫)

அக்கவடமஞ்சுபதமோதியணிவாரேன் ...... ....... . .., ....... *
முக்கணுடையானவனாமோதுவருமன்றிப்... ................... *
புக்கவிடமுத்திதரிசித்தவர்கள்புத்தேள் .. ............... .... ..... *
குக்கலணியிற்பிறவிகுன்றுமருளொன்றும் ......... .... . . . . ... *

(இ-ள்.) உருத்திராக்ஷமாலையைப் பஞ்சாக்ஷரதியானஞ்செய்து

தரிப்பார்களேயானால் அங்ஙனம் தரிப்பவர்களை விட்டுநீங்காமல் திரிநேத்திரத்தையுடைய பரமசிவனுனவர் கூட்டேயிருப்பர் அல்லாமலும் அவர்கள் சென்ற ஸ்தலமெல்லாம் சிதானந்தமாகிய மோக்ஷஸ்தலமாகும் அவர்களைத் தெரிசித்தவர்களெல்லாருந் தேவர்களாவர்கள் அதுவுமல்லாமல் நாயானது தரித்தாலும அதற்கும் பிறவித்துன்ப நீங்கும் ஞானமுமுண்டாகும் என்றவாறு. ... ............... (௫௬)

நாதரனவர்த்தியைமுனைற்கதையுரைத்தார் ..................... *
காதலினிகழந்துவிழிசால்செவிகரங்கள் ........................ *
பேதமெனவாடியழசாமொழுதுபின்னு ........................ *
மீதறிகிலார்சகிகளேதிலுறுமென்றுன் ........................ *

(இ-ள்) இந்தநன்மையுள்ளருத்திராக்ஷமகிமைச்சரித்திரத்தை நாதசன்மாவானவர் அனவர்த்தையையென்னுந்தேவியாருக்குத் திருவுளம்பற்றியருளினர். அதுகேட்டு அனவர்த்தியையம்மையாரும் அன்பினால் மனங்கனிந்துருகிச் சகலவுயிர்களும் - கண்கள் - சர்ல்கள் - செவிகள் - கைகண் - முதலிய அவ்வயவபேதமேயல்லாமல் அறிவினால் அபேதமாயிருந்தும் இவ்வகைச்சரித்திரத்தையறிந்து முத்தியடையாமல் அஞ்ஞானத்திலழுந்திப்போகின்றதேயென்றுவாட்டமுற்றழுதாள் அங்ஙன மழுது தெளிந்து திரும்பவும் வணங்கிநின்று இந்தமான்மியத்தை யறியாத ஜீவர்கள் எந்தவிதத்தினுற் கதிகளைச் சேர்வார்களென்று விண்ணப்பஞ்செய்தாள் என்றவாறு ........ (௫௭)

---

உருத்திராக்ஷச்சருக்க முற்றுப்பெற்றது.

---

ஆ - சருக்கம் - ௫௪ - க்கு - திருவிருத்தம் (௬௱௯௨)

திருச்சிற்றம்பலம்.

பதினைந்தாவது,

# சிவகீர்த்திச் சருக்கம்.



(வேறு.)

மதுமலர்க்குழலாய்கலியுகவலியால்வரமுத்திபெறுவதற்கரிது.. .....*
டதிகளிலொழிந்துபலிப்பிலையதனிற்பழமலையல்லதுபலிடா ........*
முதலொரு வருடமிருக்கவக்கதையைமொழிந்திடக்கேட்டிடத்துதிக்
கத்துதிகளைக்கேட்கவந்தியகாலந்துதித்திடமுத்தியையடைவார்...*

(இ-ள்.) தேனொழுகுகின்ற புஷ்பமாலிகையணிந்த அளகபாரத்தையுடைய அனவர்த்தியையே நீகேட்பாயாக, இந்தக்கலியுகவலிமையினால் சகல ஜீவராசிகளும் இம்மைக்குவேண்டிய வரங்களையும், மறுமைக்குமுத்தியையும்பெறுவது அருமையாகும் ஆயினும்அவைகள் விசேடமாகிய ஸ்தலங்களிலல்லாமல் வேறொருவிதத்தாலுஞ் சித்திக்காது அந்தஸ்தலங்களிலும் விருத்தகிரிஸ்தலத்திலல்லாமல்வேறொருஸ்தலத்திலுஞ் சித்திக்காது ஆதலால் அந்தஸ்தலத்தில் சடம்நீங்குமுன்பாக ஒருவருஷபரியந்தம் வசித்தலாலும் அந்த ஸ்தலபுராணத்தைப் படித்தலாலும்-படிக்கக்கேட்டலாலும்-துதித்தலாலும்-ஸ்துதிக்கக் கேட்டலாலும் - தேகாந்தத்தில் துதிசெய்தலாலும் - மோக்ஷத்தைப்பெறுவார்கள் என்றவாறு. ....... ......... ....... ........ ..... (க)

அரகரசம்புசங்கரமகேசவம்பிகைபாகமாதேவ .. ......... ...... ......*
புரகரநீலகண்டவென்றுரைக்கிற்புனிறிளங்கன்றினுக்காக்கள்.. . *
வருவதேபோலச்சிவன்விரைந்தோடிவந்திடுமரத்தின்மேற்பறவைக்*
கொருகல்லேபோலப்பாதகமனைத்துமோடிடும்வீடுசென்றடைவார்..*

(இ-ள்.) யாதாமொருவர் அரகரா-சம்பு-சங்கரா-மகேசா-அம்பிகைபாகா-மஹாதேவா-புராந்தகா - நீலகண்டா - என்று துதிசெய்தால் மிகுந்த இளங்கன்றுகளுக் கிரங்கிவருகின்ற பசுக்களைப்போலப் பரமசிவனும் அதிசீக்கிரத்தில் வந்து ரக்ஷிப்பார் அவர்களுடைய பாதகங்களெல்லாம் மரத்தின்மேலிருந்த பக்ஷிகள் பறந்துபோவதற்கு ஒருகல்லே போதுமானதுபோல் நீங்கிவிடும். அல்லாமலும் தேகாந்தத்தில் மோக்ஷத்தைப் பெறுவார்கள் என்றவாறு... ......... (உ)

சிவசிவவென்பாரவர்முனே நிருத்தஞ்செய்திடுமறலியும்பணியு .... *
மவரைவிட்டகலானுமைபாகனாரணமவர்முகத்தி நக்குந் ......... *
தவனனைக்கண்டபனியெனப்பாவஞ்சார்ந்திடும்பவக்கடலழுந்தார் .. *
புவனியின்மரணகாலையிற்புகலிற்புலையருமடைவர்சாரூபம ........ *

(இ-ள்.) சிவசிவவென்று மனமாரத் துதிசெய்பவர்களுக்குமுன்னே எப்போதும் பரமசிவன் திருநடனஞ்செய்தருளுவார் அங்ஙனம் துதித்தவர்களை நமனும் வணங்குவான், உமையவளை இடப்பாகத்திலுடைய பரமசிவன் அவர்களைவிட்டு நீங்காமலிருப்பார், அவர்கள்முகத்தில் நான்குவேதங்களுமிருக்கும், அவர்கள் செய்த பாவமெல்லாம் சூரியனைக்கண்ட பனிபோல நீங்கிப்போம், அவர்கள் பிறவிக்கடலில்முழ்கமாட்டார்கள், பூமியின்கண்ணுள்ள நீசர்களானாலும் மரணகாலத்தில் அங்ஙனம் துதித்தால் அவர்களுஞ்சாரூபதவியைப் பெறுவார்கள் என்றவாறு...... ...... ......... ......... ......... ...... .... .......(௩)

திருத்தமாயொருத்தன் செவிப்புலன்கேட்கச் சிவசிவவென்றி
டிற்பனைமேல், விருத்தியவிடிபோலெரிந்திடுமவனிறப்பொடுபிறப்
பெலாமிரியு, மொருத்தன்வாயாரச்சிவவெனமுக்காலுரைத்திடினொ
ருரையதற்குக், கருத்தன்வாழ்பதத்தி விருத்திடுமிரண்டுங் கடவுண்
மேற்கடன்களாய்நிற்கும்........ .......................... .. .. ................... *

(இ-ள்.) ஒருவனுடைய செவியினிடத்திற் றெளிவாகக் கேட்கும்படி சிவசிவாவென்று திரிகரணசுத்தியுடனே சொன்னால் அவனது பாதகங்களெல்லாம் இடிவிழுந்த பனைபோல எரிந்துபோம் அவனது இறப்பும் பிறப்பும் நீங்கப்போம், ஒருவன் தன்னுடைய வாயாரச் சிவாவென்று மூன்றுதரஞ்சொன்னாலும் மூன்றில் அந்த ஒரு சொல்லுக்கு அவனைப் பரமசிவன் தமதுலகமாகிய சிவலோகபதத்தில் வைப்பார், மற்றவிரண்டுசொல்லும் பரமசிவன்மேற கடன்களாகவிருக்கும் என்றவாறு. ... .................... .......... .. .......... ..........(௪)

பூசைகடாமமற்றவனேனும்புராரியைப்புகழ்ந்திடினவன்பாற் .... *
காசினிசெய்பாள் கலைகுடிகொள்ளுங்கதிகளுமடைவித்திடுமுயிர்ப்பி *
னாசையாலரன்பேருரைத்திடின்மலைமேலுயரிடிபோல்வினையிடியு *
மாசையான்முத்திப்பெண்கொளப்போவார்க்கிவ்வுரைவாக்கியமாகும்

(இ-ள்.) பூசைகளுந் தருமங்களுஞ் செய்யாதவனுகிலும்பரம சிவனைத் துதிசெய்தால அவனிடத்தில பூர்த்தவியுஞ் சீர்த்தவியுஞ் சரஸ்வதியுங் குடியாகவிருப்பார்கள், சிறு முண்டாகும், சுவாசமோசைடால்சிவன துதிரு நாமத்தை உச்சரிப்பார்களா கில் அவர்களுடைய தீவினைகள் இடிவிழுந்த மலைபோல் இடிந்துபோகும் அல்லாமலும் மோக்ஷானந்தப் பெண்ணை அன்பாகக் கொள்ளப்போகிறவர்களுக்கு அந்தச் சொல்லே சுபவாக்கியமாகும் என்றவாறு............ (ரு)

இயன்றமாத்திரமஞ்செழுத்தையுமோதியிடதுபீசந்தனைத்தொட்டு *
முயன்றிருகொமபின்டுவிறுநசிவனைமுதற்பிரதோஷகாலத்திற்.. *
பயன்றருந்தருமந்தவமெலாமடையுமபதத்தினிற்பதம்படநடந்து *
வியனுறுதியான்மஞ்சலியானுவிரவிடுருவர்வலம்பலகோடி...... .. *

(இ-ள்) முதன்மையாகிய பிரதோஷகாலத்தில் தப்மாவியன்றமாத்திரம் பஞ்சாக்ஷரசெபஞ்செய்து நந்தீஸ்வரருடைய இடதுபீஜத்தைப் பரிசித்துக்கொண்டு இரண்டுகொம்புக்கு மத்தியாகப் பரமசிவனைத் தரிசனஞ் செய்தால் சகலதர்ம்மங்களையுந் தவங்களையுஞ் செய்தபலனுண்டாகும் அல்லாமலும் பாதத்திற் பாதம் படும்படியாக மெல்ல நடந்து சிவததியானத்தோடு அஞ்சலியஸ்தராய் ஒருதரம் பிரதக்ஷிணஞ்செய்தால் பலகோடி பிரதக்ஷிணஞ்செய்தபலனுண்டாகும் என்றவாறு .. ...... ...... .. ..... ..... ....... ..................... ........(சா)

முதல்வலமொன்றுக்கவமிருத்தேகுமூன்றினிற்கோரநோய்தீரு *
மதிகமாமைந்திற்புத்திராதிகளாமந்தணர்சொலையறுநூறிற்... .... *
சதமொருபத்தேவிந்திரனுவன்றனிவிடைவலம்வரிற்பிறவிக் ... .... *
கதமறுவலமுமிடமுமாய்நடக்கிற்கருதினென்றெவ்வொருகோடி.

(இ-ள்.) ஒருதரம் பிரதக்ஷிணஞ்செய்தால் அவமிருத்துவு நீங்கும், மூன்றுதரம பிரதக்ஷிணஞ்செய்தால் கொடுமையாகியவியாதிகணீங்கும், அதிகமாகிய ஐந்து பிரதக்ஷிணஞ்செய்தால் சந்தானமுதலானசம்பத்துகளுண்டாகும், நூறுதரம்பிரதக்ஷிணஞ்செய்தால் பிர்ம்மஹத்திமகாபாதகநீங்கும், ஆயிரம்பிரதக்ஷிணஞ்செய்தால்தேவேந்திரனுவான், ஒப்பற்ற நந்தீஸ்வரனைப் பிரதக்ஷிணஞ்செய்தால்பிறவித்துன்பநீங்கும், வலமும் இடமுமாகப் பிரதக்ஷிணஞ் செய்தால்

ஒரு பிரதக்ஷணத்திற்கு ஒரு கோடிபிரதக்ஷணஞ் செய்தபலனுண்டா
கும் என்றவாறு ........................................................(எ)

உண்மதில்வலமொன்றெவ்வொருகோடிபுறமொன் றுகோடிபத்தாகு
மண்படவணங்கிவணங்கியே நடக்கின்மற்றதிற்கோடிபத்தாகு... . *
முண்மையங்கப்பிரதக்கணமொன்றேடனந்த நூறுயிரங்கோடி .....*
பண்ணினனவனேர் மூடனேயெனினும்பரபதமவனதுகாணி..... *

(இ-ள்.) கர்ப்பக்கிரகத்தைச்சூழ்ந்த உண்மதிலை ஒருதரம் பிர
தக்ஷணஞ்செய்தால் அக்கர்ப்பக்கிரகத்தைக் கோடி பிரதக்ஷணஞ்
செய்ததாகும், மூன்றும்பிரகாரமாகிய புறமதிலை ஒருதரம் பிரதக்ஷ
ணஞ்செய்தால் அக்கர்ப்பக்கிரகத்தைப் பத்துக்கோடிபிரதக்ஷணஞ்
செய்ததாகும், சரீரத்தில் மண்படவிழுந்து வணங்கிவணங்கித் தண்
டப்பிரதக்ஷணஞ்செய்தால் அதனிலும் பத்துக்கோடி பங்கதிகமான
பலனுண்டாகும், ஒருதரம் உண்மையாகியசிந்தையோடு அங்கப்பிர
தக்ஷணஞ்செய்தால் அதனிலும் அளவில்லாத நூறுயிரங் கோடிபங்க
திகமான பலனுண்டாகும், அங்ஙனஞ் செய்தவன் ஒப்பற்ற மூடனா
னாலும் சிவபுரம் அவனதுகாணியாகும் என்றவாறு.... ............ (அ)

மருவுசந்நியாசியிடம்வரப்பிரமசாரிதான்வலம்வரமற்றை..... . . . *
யிருவரும்வலமுமிடமுமாய் நடக்கிலிலக்கமுமீரைந்துகோடி........*
கருவொருகோடியிரண்டுகோடியதாங்கருக்கொலைபாதகரோனு .....*
மொருவலம்வருவாரிரவியையொப்பாருணர்விஞேர் வலஞ்செயலொ
ழியார்

(இ-ள்.) பொருந்திய சந்நியாசிகள் இடமாகவும் பிரமசாரிகள்
வலமாகவும், வானப்பிரஸ்தன்-கிரகஸ்தன் - இவர்களிருவரும் வலமு
மிடமுமாகவும் பிரதக்ஷணஞ்செய்வார்களாகில் அவ்வொன்றே பத்
துக்கோடி பிரதக்ஷணஞ்செய்ததாகும், அல்லாமலும் எண்ணப்பட்
ட ஒருகோடியிரண்டுகோடியாகும் கருவைக்கொலைசெய்தபாதகரா
னாலும் இந்தவிதிப்படி ஒருதரம்பிரதக்ஷணஞ்செய்தால் அவர்கள்சூரி
யனுக்கொப்பாகப் பிரகாசிப்பார்கள். ஆதலால் அறிஞர்கள்பிரதக்ஷ
ணஞ்செய்வதை எப்போதும் விடார்கள் என்றவாறு..... ...... .....(கூ)

அக்கொடுதிருநீறணிந்தெழுத்தைந்துமறைந்தரன்பூசையுமியற்றிச் *
செக்கர்மேனியனைவலஞ்செய்துவணங்கிச்சிதம்பரமுதுகிரியொன்றிற் *
பக்கமாயடியார்பூசைபுஞ்செய்துபணிவிடையியன்றவாறியற்றித் *
தக்கவாறிதையமரணநாட்கொள்வர்தமையலாற்சிவனையாமறியோம்

(இ-ள்.) உருத்திராக்ஷகண்டிகையும் விபூதியுந்தரித்து பஞ்சாக்ஷரசெபஞ்செய்து, சிவபூசைசெய்து அந்திவண்ணனாகிய பரமசிவனைப் பிரதக்ஷணஞ்செய்து வணங்கி சிதம்பரத்திலாகிலும் விருத்தாசலத்திலாகிலும் அன்பாக அடியார்கள்பூசையுஞ்செய்து தம்பாவியன்றமாத்திரம் திருப்பணிசெய்து தேகாந்தத்திலும் தடுதியாக இருதயத்திற் சிவத்தியானஞ் செய்கின்ற புண்ணியவான்களை யல்லாமல் வேறொருசிவனை யாம் அறியோம் என்றவாறு....... .... ........ (௰)

சிவகீர்த்திச்சருக்க முற்றுப்பெற்றது.

ஆ சருக்கம் - ௰ரு - க்கு - திருவிருத்தம் (௲௱௭௨)

திருச்சிற்றம்பலம்.

பதினாறுவது,

# கோபர்வதச்சருக்கம்.

(வேறு.)

சிற்புரமன்முதுகுன்றன்றிருக்கதைபைக்கேட்கவிவள்.......... ........ *
கிற்பளோகிற்கிலளோவெனச்சிந்தைகெழுமாதே ............. ......... *
முற்படநீரருள்செய்தீர்முதுகுன்றிற்கோவரையி.................... *
னற்கதையைநவிலுமெனவனவர்த்திநயந்துரைத்தாள்....... ... .... *

(இ-ள்.) அனவர்த்தியம்மையார் நாதசன்மாவைவணங்கி ஓய் சுவாமி நீர் யான்கேட்குமுன்னமே சின்மயவடிவரான பழமலைநாதருடைய அழகிய சரித்திரத்தைக் கேட்குந் தகுதியுடையவளோ அல்லளோவென்று சற்றுகிலுந் திருவுளத்திற்குறியாமல் அனுக்கிரகஞ்செய்தீர் அதுபோலப் பழமலையின்கண்ணுள்ள கோபர்வதத்தினுடைய தன்மைபொருந்திய சரித்திரத்தையும் அனுக்கிரகஞ் செய்யுமென்று அன்பாக விண்ணப்பஞ்செய்தாள் என்றவாறு..... ................... (க)

வரைக்கரசாங்கோவரையைவாயளக்குந்தகைமைத்தோ ............ .... *
வுரைக்கின்றேமெல ந தருளைக்கின்றார்கயிலையினு ........................ *
நரைத்தவிடைமேற்கொணடுநற்கணங்கள்புடைசூழ............ *
விரைக்கமழுமுதிருன்றின்விரைந்தணைந்தான்விமலேசன் ..... ...... *

(இ-ள்.) அங்ஙனம் விண்ணப்பஞ்செய்தபொழுது நாதசன் மாவானவர் கிருபைகூர்ந்து ஒப் அனவர்த்தியையே நீகேட்பாயாக மலைக்கரசாகிய கோபர்வதத்தின் பெருமையானது நமது வாயினால் அளவிட்டுச்சொல்லுந் தகுதியுடையதோ ஆயினும் யாமறிந்தமாத்தி ரஞ் சொல்லுகின்றோமென்று திருவாய்மலர்ந்தருளுகின்றார் பூர்வத் தில் பரமசிவனானவர் கயிலாசபர்வதத்திலிருந்து வெண்மைபொரு ந்திய ரிஷபவாகனரூடராய் நல்ல சிவகணங்கள் புடைசூழ்ந்துவர வாசனைவீசுகின்ற மலர்ச்சோலைகள் நிறைந்துள்ள விருத்தகிரிக்கு வி ரைவாக எழுந்தருளிவந்தார் என்றவாறு ............................... (௨)

தாருவனமுனிவர்செயுந்தவத்தினையுமவர்மாத.................*
ரோருடையபதிவிரதவியல்பினையுஞ்சோதிப்பான் ......... ............... *
காருருவத்திருமாலைக்கன்னிகையாய்ச்செலகின்றேம் . . ....... ....... *
நீருமின்னனவுமைையைநிறுத்தினான்வடகீழ்பால் ........ .......... *

(இ-ள்.) அப்படியெழுந்தருளின பரமசிவனானவர் உமையவ ளைப்பார்த்துத் தாருகாவனரிஷிகள் செய்யப்பட்ட தபோவலிமை யையும் அவர்களது பத்தினிமார்களுடைய பதிவிரதாதன்மையையும் சோதிக்கும்படி திருவுளங்கொண்டு மேகவண்ணனாகிய மகாவிஷ்ணு மோகினிரூபமாகிவர நாம் போகின்றோம் ஆதலால் நீ யிவ்விடத் திற்றானே யிருப்பாயாகவென்று சொல்லி உமையவளை விருத்தகிரி க்கு வடகீழ்த்திசையிலுள்ள ஓர் நந்தவனத்திலிடத்து நிறுத்தியருளி னார் என்றவாறு ....................................................... (௩)

தனியிருப்பதெங்ஙனெனுந்தையலார்மெய்வருடிப்............ *
புனிதனகைசெய்தருளிப்புகழ்நந்திதனைநிறுத்தி... ...... ............. *
யனிதமிலாச்சிவன்கன்றனவ்வளவிலந்தவனத் ........ .................. *
திலியதொருசிவலிங்கமுமையம்மையெதிர்கண்டாள் ........ .... ..... *

(இ-ள்.) அதுகேட்டு தனிமையாக இவிடத்திலிருப்பது எப்ப

டியென்று விண்ணப்பஞ்செய்தருளிய வுமையவளைப்பார்த்துப்பரம சிவன் நகைத்து சீரத்தைத் தடவிக்கொடுத்து யாவராலும் புகழப் பெற்ற நந்தீஸ்வரனையும் உமையவளுடன இருக்கும்படி நிறுத்தி எந்தநாளிலும் அழிவில்லாமல் நித்தியத்துவமாக விளங்குகின்ற பரமசிவன் சென்றருளினார் அங்ஙனஞ் சென்றவளவில் உமையவளும் அந்தவனத்தின்கண் ஒருசிவலிங்கத்தை எதிராகண்டருளினாள். எ-று.

உத்தமமாமீசான கங்கையுமங்கெதிர்கண்டாள்........................ *
புத்திதரும்புகழ்நந்தியேவல்செயப்பூசித்தா.............................. *
ளத்தலமுநந்திபெயராலேகோபருப்பதமாய்ச்............................ *
சத்திபெயராற்சத்தீச்சுரமுமாய்த்தழைத்தனவாம்.......................... *

(இ-ள்) அதுகண்டவுடன் அவிடத்தில் உத்தமமாகிய அந்த ஈசானதிக்கில் ஒருதீர்த்தத்தையுங் கண்டருளினாள் அதுகளைக்கண்டு மனக்களிப்பாக உமையவளும் தம்மைத் துதித்தவர்களுக்கு அறிவைத்தருகின்ற புகழையுடைய நந்தீஸ்வரர் பணிசெய்ய அந்தச்சிவலிங்கத்தைப்பூசித்தாள் அதனால் அந்தஸ்தலம் நந்தீஸ்வரருடையபெயரால் கோபர்வதமென்றும், சத்தியினுடைய பெயரால் சத்தீஸ்வரமென்றும் இரண்டு திருநாமங்கள் தழைக்கப்பெற்றனவாம். எ-று ....(௫)

அவ்வளவிற்றருவனமன்றருணர்கோடிசுழாஞ்..................................... *
செவ்வொளிபோற்சத்தீசன் திருவுருவிற்சிவன்றோன்ற.......................... *
நவ்விவிழியாள்பணிந்துபூசித்தாணலஞ்சிறக்க.............................. *
மெய்வரங்கேளெனப்பரமன்விளம்பினனுமைகேட்பாள்........................ *

(இ-ள்.) அங்ஙனம் பூசித்தபொழுது பரமசிவனானவர் தாருகாவனத்தைவிட்டு நீங்கிக் கோடிசூரியர்களுடைய சிவந்த பிரகாசம்போல் சத்தீஸ்வரமென்னும் சிவலிங்கத்தினிடமாகப் பிரகாசித்துத் தரிசனங் கொடுத்தருளினார், அதுகண்டு மான்போன்ற கண்களையுடைய உமையவளும் வணங்கிப் பூசைசெய்தாள், அதற்குப் பரமசிவன் மகிழ்வுகொண்டு உமையவளைப்பார்த்து உனக்கு நன்மையுண்டாகும்படியாக உண்மையான வரங்களைக்கேளென்று திருவாய் மலர்ந்தருளினவளவில்உமையவள்விண்ணப்பஞ்செய்கின்றாள்-எ-று (௬)

யானுகந்துபூசிக்குமினியகோபருப்பதத்திற்..................... *
ருனதருமஞ்செய்வார்சகலதிருப்பெறவேண்டு.................... *
ஞானகங்கைமூழ்கினவர்ஞானமேபெறவேண்டும்...................*
பானுமலர்ப்பதம்பணிவார்பதம்பெறவேண்டுவலென்ருள்............ *

(இ-ள்.) நான் சந்தோஷகரமாய்ப்பூசிக்கின்ற இனிமையான இந்த கோபர்வதத்தினிடத்தில்வந்து தானதர்ம்மங்களைச் செய்கின்றவர்களெல்லாம் சர்வஐசுவரியங்களையு மடையவேண்டும் ஞானசொருபமாகிய இந்த ஈசானகங்கையில் ஸ்நானஞ்செய்தவர்களெல்லாம் ஆத்மஞானத்தை யடையவேண்டும் அலலாமலும் சூரியனைப்போற் பிரகாசிக்கின்ற உமது திருவடித்தாமரைகளை வணங்குகின்றவர்களெல்லாம் உமது சாயுச்சியபதத்தையடையவேண்டும்என்கின்றவரங்களை விரும்பினேனென்றுஉமையவள்விண்ணப்பஞ்செய்தருளினுள்-எ-று

சிவனுங்கேட்டுமையவட்குச்சிறந்தவரங்கொடுத்தருளிப்.............. *
புவனமெலாநந்திவரைப்புகழ்பொலியப்புரிந்தருளிப்............. *
பவனுமவன்றேவியுமாய்ப்பணிந்தவர்க்குப்பலிக்கின்ற............. *
ரியனெளிதாய்ப்பிழையாதவிவர்களோகதிபெறுவார்.................*

(இ-ள்.) அதுகேட்டுப் பரமசிவனும் உமையவள்கருத்தின்படி சிறப்பாகிய வரங்களையனுக்கிரகஞ்செய்து அல்லாமலும் கோபர்வதத்தின் கீர்த்தியானது சகலபுவனங்களிலும் பிரகாசிக்கும்படிசெய்து அந்த ஸ்தலத்தில் தாம்சத்தீஸ்வரனும் உமையவள் சத்தியுமாக எழுந்தருளியிருந்து தம்மை வணங்கினவர்களுக்கெல்லாஞ் சகல நன்மையையுங்கொடுத்து ரக்ஷிக்கின்ருர்கள் ஆதலால் இப்படிப்பட்டஸ்தலத்தில் எளிதாகப்போய்க் கதியைப்பெருதவர்களோ அரியதவங்களைச் செய்து கதியடையப்போகிருர்கள் என்றவாறு...................... (அ)

ஈசானகங்கையினீராடியிறைதாள்பணிந்து.......................... *
பேசாதேநூற்றெட்டுப்பிதக்கணஞ்செய்தர்ச்சனைசெய்............... *
தாசானுற்பன்னிருநூருயிரநல்லஞ்செழுத்தைத்................... *
தேசாகச்செபித்தவர்கள்சிவனுனைபதமம்பெறுவார்................. *

(இ-ள்.) கோபர்வதத்தில் ஈசானகங்கையில் ஸ்நானஞ்செய்து

பரமசிவனது திருவடிகளை வணங்கி மௌனமாக நூற்றெட்டுப்பிர தக்ஷணஞ்செய்து அர்ச்சனைசெய்து பரமாசாரியராற்பெற்ற பஞ்சா க்ஷரத்தை அழகாகப் பனிரண்டுலக்ஷம் ஜெபஞ்செய்தால் அவர்கள் சிவாக்கினைப்படிக்குச் சிவபதவியைப்பெறுவார்கள். என்றவாறு (௯)

தணவாதேபசுவனையிற்றங்கிவரம்பெற்றாருங் ........................ *
கண நாதரானவருங்கதியினருமளவில்லைப் ........................ *
புணர்வாயதவர்கருணாபூரணருமங்கிருப்ப........................ *
ருணர்வாகச்சேவைசெய்வார்க்குற்றவரமுந்தருவார்........................ *

(இ-ள்.) கோபர்வதத்தைவிட்டு நீங்காமல் வசித்திருந்து வரங் களைப்பெற்றவர்களும் அந்தஸ்தலத்தில் கணநாதரானவர்களும் மோ க்ஷத்தைப்பெற்றவர்களும் இவ்வளவென்று அளவுசொல்லமுடியாது அல்லாமலும் அந்தஸ்தலத்தில் சிவசம்பந்தமான மகா தவங்களைச்செ ய்துமுடித்த கருணாபரிபூரணரென்னும் ஒருமகாத்மாவுமிருக்கின்றார் அவரைத்தெரிந்து அறிவுதானாகச் சேவைசெய்தவர்களுக்கு அவர்க ள்விரும்பிய சகலவரங்களையும் அவர்கொடுத்தருளுவார்-எ-று---(௰)

தேட்டமுறப்பூசித்துச்செபித்துண்டிதனைவிட்டுக் ........................ *
காட்டசமாதியிலிருக்குங்கண நாதபூரணனை ........................ *
நாட்டமுறப்பார்த்திருந்தாலொருபாவிநயந்தவனை........................ *
யாட்கொள்ளும்படியிவன்றானாரோவென்றாராய்ந்தார் ........................ *

(இ-ள்.) பரமசிவனை அன்போடுபூசைசெய்து ஜெபஞ்செய்து உணவையொழிந்து தம்பத்தைப்போல அசைவின்றிச் சமாதியிலி ருக்கின்ற கணநாதராகிய கருணாபரிபூரணரென்னு மகாத்மாவை ஒருபாவியானவன் கண்கள்பொருந்தப் பார்த்திருந்தான் அந்தப்பா வியையும் கருணாபரிபூரணரானவர் தடுத்தாட்கொள்ளநினைந்து இவ ன்யாவனென்று திருவுளத்தில் ஆலோசித்தருளினார்என்றவாறு(௰௧)

பெண்வதையுங்கோவதையும்பிறவதையும்பெரும்பவமும்........................ *
பண்ணினவனெனநினைந்துபரலோகமில்லையந்தோ........................ *
தண்ணியவனெனத்தூரச்சந்நிதியினிற்பித்தார்........................ *
நண்ணியசந்நிதியினெடுநாளாகநின்றளவில்........................ *

(இ-ள்.) ஸ்திரிவதையையும்-கோவதையையும்-இன்னமனேக

வதைகளையும்-கொடியபாதகங்களையுஞ் செய்தவனென்று தெரிந்து ஐயோ இவனுக்குமோக்ஷமில்லையே இவன் மெத்த எளியவனென்று நினைந்து அவனைத் தமது சந்நிதானத்தில் தூரமாகநிற்கும்படி செய்தருளினார் அங்ஙனே அந்தப்பாவியானவன் கருணாபரிபூரணரதுஞானப்பிரகாசம் பொருந்திய சந்நிதானத்தில் அனேக நாளாக நின்ற காலத்தில் என்றவாறு .... .......... ........... ............... ..(௰௨)

பாம்புத்தோலுரித்ததுபோற்பனவன்றன்பாதகங்கள் .............. *
போம்பரிசிற்கருணாபூரணனாயும்பணிந்து........ ............ ....... *
தாம்புனலீசானந்தனின் மூழ்கியோகியையும் ........ ............... .....*
வாம்புனல்செஞ்சடையனையுங்கூடவேவலஞ்செய்தான் ............... *

(இ-ள்.) அந்தப்பாவியாகிய பிராமணனானவன் தன்னுடைய பாதகங்களெல்லாம் பாம்பினது தோலுரிந்ததுபோல் நீங்கிப்போயினமையால் கருணாபரிபூரணனையும் வணங்கி அலைகளை மோதுகின்ற நீர்நிறைந்த ஈசானகங்கையில் ஸ்நானஞ்செய்து அந்தக்கருணாபரிபூரணனையும் தாவுகின்ற கங்கையைத்தரித்த சிவந்த ஜடாபாரத்தையுடைய சத்தீஸ்வரனையும் கூடப்பிரதக்ஷணஞ்செய்தான்-எ-று ...(௰௩)

கருவகற்றுமீசானகங்கையினிற்றினமூழ்கித் .. .......... .. .... .......... *
திருவருளார்பாகனுடனியோகியையுந்தினம்பணிந்து............... ....*
சருகுதிரணந்தண்ணீர்தனையருந்தித்தவவடிவாய் .. ........... .. .... *
மருளகன்றபின்யோகிமறையவனைவரவழைத்தான் .......... ......... *

(இ-ள்.) மேலும் அந்தப் பிராமணன் பிறவியைக்கெடுக்கின்ற ஈசானகங்கையினில் நாள்தோறும் ஸ்நானஞ்செய்து அருளுருவமாகிய உமையவளெழுந்தருளியிருக்கின்ற இடதுபாகத்தையுடைய சத்தீஸ்வரனையும் கருணாபரிபூரணனையும் நாள்தோறும்வணங்கிச் சருகுகள் திரணங்கள் தண்ணீர்முதலியவைகளைப் புசித்துத் தவவடிவாயிருந்து சகலபிராந்தியும் ஒழிந்தபின்பு அந்தப்பிராமணனைக்கருணாபரிபூரணரானவர் சமீபத்தில் வரவழைத்தார்என்றவாறு .........(௰௪)

எந்தநாடுன்பெயரென்னிந்தவனத்தேன்வந்தாய் ........ ................*
முந்தவுனாவென்றுனாப்பமொழிகின்றமெனடுத்தூரஞ் .. .. .. ..........*

சுந்தரநாடென் பெயருந் துருவிருத்தன்மறையவனுன் .. ........ ....*
வந்ததுவுமிவ்விடத்தில்வழிபறிக்கவென் றுரைத்தான் ............... *

(இ-ள்.) அங்ஙனம் வரவழைத்து அந்தப் பிராமணனைப்பார்த்து நீ யெந்தத்தேசம் உன்பெயரென்ன நீ இந்தவனத்திற்குளதைக் குறித்துவந்தாய் இதுகளை விவரமாக நீ முன்னே சொல்வாயென்று கருணாபரிபூரணர் திருவாய்மலர்ந்தருள அந்தப்பிராமணன் சொல்லுகின்றுன் ஒய் சுவாமி அடியேனிருப்பது வெகுதூரமாகிய சுந்தர தேசம் என்பெயருந் துருவிருத்தனென்று சொல்லுவார்கள் நான் பிராமணகுலத்திற் பிறந்தவன் நான் இந்தவனத்திற்குவந்ததும்வழி மறித்துப் பறிப்பதற்கேயென்று விண்ணப்பஞ்செய்து பின்னுஞ் சொல்லுகின்றுன் என்றவாறு .... ...... ............................ (மரு)

பாவியானழியாதபலமரபுதானுமிலை..... ......... .........................*
பாவியான்றிருடாதபலகளவுதானுமிலை..... ........... .............*
பாவியான்கொல்லாதபல்லுயிர்கடானுமிலை........ .. ......... ...... *
பாவியான்பண்ணுதபாதகங்கடானுமிலை...... ........... ...... .....*

(இ-ள்.) இந்தவுலகத்திலிருக்கின்ற முறைமையாகிய பலமரபுகளிலும்பாவியாகிய நானழித்துவிடாத மரபுகளுமில்லை, பலகளவுகளிலும் நான்களவுசெய்யாத களவுகளுமில்லை, பலவுயிர்களிலும் நான் கொலைசெய்யாத வுயிர்களுமில்லை பலபாதகங்களிலும் நான்செய்யாத பாதகங்களுமில்லை என்றவாறு ........... ......... ......... (மகா)

சூழ்வினையுமென்னுடையகடுங்கொலையுங்கடுஞ்சினமும்.... ....... ..... *
விரகினையுங்கண்டஞ்சிவிறலினருநடுநடுங்கு........ .......... .......... *
மரநடுங்குமண்ணடுங்குமாதர்களுநடு நடுங்கு..... ............ ............*
நரர்நடுங்குஞ்சுரர் நடுங்குநமனடுங்குமெனச்சொன்னுன். ..........*

(இ-ள்-) அடியேன்செய்கின்ற வஞ்சகத்தையும் கொடியகொலைத்தொழிலையும் கடுமையாகிய கோபத்தையும் உபாயத்தையும் பார்த்துப் பயந்து மகா பராக்கிரமசாலிகளானவர்களும் நடுங்குவார்கள் அல்லாமலும் என்னைக்கண்டால் மரங்களுநடுங்கும், மண்ணும்நடுங்கும், மாதர்களும் நடுங்குவார்கள், மனிதர்களும் நடுங்குவார்கள்,

தேவர்களும் நடுங்குவார்கள், யமதர்ம்மராஜனும் நடுங்குவானென்றுசொல்லிப் பின்னையும விண்ணப்பஞ்செய்கின்றான். எ-று ... (௰௭)

குருடனுக்குக்கண்பெறுவான் புண்ணியதீர்த்தங்கிடைத்ததுபோன் ....... *
மருளனுக் குவெளிப்பட்டீர்மனந்தெளிந்தேனினிமுநா ................ *
னிருளனுகாவழிதனையிதுமென்றுகாட்டிடக்காற் .... .. ............ *
றெருள்பெறுமேவென்னையாகிதப்பாதந்தனில்வீழ்ந்தான் ....... *

(இ-ள்.) பிறவிக்குருடனுக்குக் கண் கிடைக்கும்படியாக ஒரு புண்ணியதீர்த்தங் கிடைத்ததுபோல பாவியாகிய அடியேன்முன் தேவரீர் வெளிப்பட்டுத் தோன்றினீர் அதனாலடியேனுஞ் சித்தசுத்தியைப்பெற்றதுமல்லாமல் இனிமேலும் அடியேன் அஞ்ஞானவழியிற்செல்லாத உணர்வுடைய ஞானவழியை இதுவென்று உபதேசஞ் செய்தருளினால் ஆத்மஞானத்தைப்பெற்றுக்கிருதார்த்தனுவேனென்றுசொல்லி கருணாபூரணருடைய திருவடித்தாமரைகளில் விழுந்து நமஸ்காரஞ்செய்தான் என்றவாறு ........ ............... ....... ..... (௰௮)

என்றுநீபித்தலத்திலெப்திருயுன்பாவ ........................ *
மன்றசென்றதெம்முடையவருண்ஞானப்பார்வையினுற் ......... .... *
சென்றுகங்கைமூழ்குதலாற்சிவசத்திதிருநோக்கா ........... ...... *
னன்றிகிடைத்திருக்கின்றாய்நமையகலாயெனவுரைத்து .... ....... *

(இ-ள்.) அங்ஙனம் வணங்கிநின்ற பிராமணனுக்கு இரங்கிக் கருணாபூரணரானவர் சொல்லுகின்றார் ஓய் பிராமணனே நீ இந்தக்கோபர்வதமென்னுந் திவ்வியஸ்தலத்திற்கு எப்பொழுது வந்தாயோ அப்பொழுதே உன்னுடையபாதகங்களெல்லாம் நீங்கிவிட்டது அல்லாமலும் எமது கிருபாஞானதிருஷ்டியினாலும் தினந்தோறும் போய் ஈசானகங்கையில் முழுகினபடியினாலும் சத்தீஸ்வரர் சிற்சத்தியிவர்களது திருவருட்பார்வையினாலும் நீ சகலநன்மையும் பெற்றிருக்கின்றாய் ஆதலால் நீ எப்போதும் நம்மைவிட்டுநீங்காமலிருப்பாயென்று சொல்லி என்றவாறு .................................. (௰௯)

தஞ்சநியமங்களேயுந்தவத்தினேயுமுண்மையுட........................ *
னஞ்செழுத்துமுடதேசமருளினனவ்வழியில்......................... *
விஞ்சுதவமிகமுழுகிமெய்ஞ்ஞானியாயிறைவன்........................ *
கஞ்சமலர்ச்சேவடிக்கேகலந்தொன்றியுடனுஞன்........................ *

(இ-ள்.) பற்றுக்கோடாகிய சகல நேமானுஷ்டானங்களேயுந் தவத்தையும் உண்மையாகிய பிரணவத்தோடு பஞ்சாக்ஷரத்தையும் உபதேசஞ்செய்தருளினுர் அந்தப்பிராமணனும் அவர் அனுக்கிரகித்தருளிய உபதேசவழியாகமேன்மையான தவத்தில் மிகவுமுழுகிநின்று மெய்ஞ்ஞானத்தையுடையவனுகிச் சத்தீஸ்வாருடைய திருவடித்தாமரைகளில் இரண்டறக்கலந்து ஒன்ருகிய அத்துவிதானந்த நிலையைப் பெற்ருன் என்றவாறு........................................ (உ௰)

நந்திகோபருப்பதத்தினரர்சுரர்களியாரோனும்.............................. *
வந்தவர்கண்மூன்றுநாண்மகிழ்ந்துநியமத்துடனே ........................ *
கந்தலறத்துறந்திருக்கிற்கண்ணுதலோன்பதமடைவர்...................... *
பந்தமுடலிருந்தவரும்பரமன்றன்வடிவாவர்.................................. *

(இ-ள்.) நந்தீஸ்வரருடையபெயரால் விளங்குகின்ற கோபர்வதத்தினிடமாக வந்தவர்கள் மனிதர்களானுலும் - தேவர்களானுலும் - மற்றெவர்களானுலும் அந்தஸ்தலத்தில் மூன்று நாள்வரைக்கும்நியமமாகக் கெடுதலில்லாமல் சகலவாசனேயையும் ஒழித்து மனமகிழ்ச்சியாக வசித்திருந்தால் அவர்கள் சத்தீஸ்வரருடைய திருவடியைப்பெறுவார்கள் அல்லாமலும் அந்தஸ்தலத்தில்குடும்பத்தோடுவசித்திருந்தவர்களும் சிவசொருபமாகியசாருபபதவியை அடைவார்கள்-எ-று (உக)

---

**கோபர்வதச்சருக்கமுற்றுப்பெற்றது.**

---

**ஆ-சருக்கம் - ௰௬ - க்கு - திருவிருத்தம் (௬௱௬௬)**

திருச்சிற்றம்பலம்.

பதினேழாவது,

# பிருடிச்சருக்கம்.

(வேறு.)

நாதர்மாதுமுனேதுவாரொருநாலுவேதப்பிருடிதன் ........ *
மாதர்மாதருமுரிசியென்பவண்மகதமென்பெருநாடுளோர்..... *
பேதபூமிபிரதக்கணத்தினிற்பிரணவப்பதிவந்தனர்.......... *
மீதுவாரகையேகிவித்துருமத்துமேவினர்கங்கையே ... ... ........ *

(இ-ள்.) நாதசன்மாவானவர் அனவர்த்தியென்னுந் தேவியாரைப்பார்த்துச் சொல்லுகின்றார் ஓய் அனவர்த்தியையே நீகேட்பாயாக பூர்வத்தில் ஒப்பற்ற நான்குவேதங்களுந்தெரிந்த பிருடிதனென்னும் பெயரையுடைய ஒருபிராமணன் அவனது ஆசையாகிய மனையவளும் முருசியென்னும் பெயரையுடையவள் அவர்கள் மகதமென்கின்ற பெரியதேசத்திலிருந்தவர்கள் அவர்களிருவரும் நானாபேதங்களையுடைய பூப்பிரதக்ஷணஞ்செய்யும்படி நினைந்துவருகையில்முன்னே பிரணவஸ்தலத்திற்குவந்து பின்பு மேலான துவாரகாபுரிக்குச் சென்று வித்துருமமென்னுந்தலத்திற்குப்போய்க் கங்கையை அடைந்தார்கள் என்றவாறு .................................... (க)

கனகலம்பிரியாவகந்திருவிக்கிரமங்கழுக்குன்றகம்.. .. ... ... ... ... *
வினவுசாய்வனம்வெள்வனம்வெதரீவனஞ்சதுமறைவன .. ........ *
நனிவருங்கடவூர்குடந்தைநன்னாகவீச்சுரமாதவை.... .............. *
யினியராமனதீசுரங்குமரித்துறைதனிலெய்தினர்..... .. ... ..... ....... *

(இ-ள்.) எப்போதும் சகல சம்பத்துநீங்காத திருவிக்கிரமம்-திருக்கழுக்குன்றம்-சொல்லுகின்ற திருச்சாயாவனம்-திருவெண்காடு-திருவதரியாச்சிரமம்-திருமறைக்காடு- நன்மைபொருந்திய திருக்கடவூர்-திருக்குடந்தை-திருநாகேஸ்வரம்-திருமாதவை - இனிமையானராமேஸ்வரம் - முதலான ஸ்தலவாசஞ்செய்து கன்னியாகுமரித்துறையில் வந்தார்கள் என்றவாறு .................................... (உ)

சுவணவக்கிரம்பகவ நற்புரிதுதிசருங்கணபதியிட... ................ *
மௌணிகோகரணஞ்சபிந்தவமரறு நரடைதியுற்றபின் ............ *
றுவரைவந்தனரவனாயகனொருசுந்தரச்சிவயோகிதான் ............ *
றவண்மாயவிரொங்கண்ணினிர்சாற்றுமெனறனர்சாற்றுவார்........... *

(இ-ள்.) பின்பு சுவணவக்கிரம்-நன்மைபொருந்திய பகவபரி யாவருந் துதிக்கப்பட்ட விநாயகபுரி-மௌணி-கோகர்ணம்-சம்பந்தவ முதலிய ஏனைய திவ்வியஸ்தலங்களிலும் போய்த்தரிசித்தபின்பு துவா ரகாபுரிக்குவந்தார்கள் அவிடத்தில்வசிக்கின்ற அழகிய ஒரு சிவயோகி யார் அவர்களைக்கண்டு நீங்கள் இவ்வளவு சிரமப்பிரயாசமுண்டாகும் படி எவ்விடத்திற்குப் போனீர்கள் அதைச் சொல்லுமென்றுகேட்க அவர்கள் சொல்லுகின்றார்கள் என்றவாறு ........................ (௫)

பிருடிதன்னுனாசருவம்டாதவபிருதிவிப்பிரதக்கண ................... *
பூரிசியாளொடுபரம்ஞலயமுற்றுமவந்தனமுன்பதத் .................. *
தெரிசனத்தைபுமுற்றனம்மெனவந்தயோகிசிரித்துநீர் ................ *
பெருமைபெற்றதலங்களுற்றிலிர்பெரிதுமாணடைவந்திரால் ......... *

(இ-ள்.) பிருடிதனனவன் சொல்லுகின்றான் ஓய் மகாயோகீஸ் வரரே அடியேனும் பூருசியென்னு மென்மனைவியும் சிவாலயமுழுவ தும் பூப்பிரதக்ஷணஞ்செய்துவந்தோம் அல்லாமலும் உமமுடைய பாததரிசனமும் பெற்றோமென்று சொன்னவளவில் அந்தயோகீஸ் வரர் நகைசெய்து நீங்கள் விருதாவிற் கால்கள்வருந்தும்படி வெகு தூரம் வழிநடந்து பிரயாசமடைந்தீர்களேயல்லாமல் பெருமைமிகுந் த ஒருஸ்தலங்களுக்காகிலும் போகவில்லையேயென்று சொல்லி-எ-று

சென்றவன்றுவிமானமுற்றிடுதெய்விகத்தலமுண்டரோ .......... *
வென்றுரைத்தனரிருவநற்தொழுதேதுதாமெனவோதுவா ......... *
ரன்றுகண்டகிரீமைபச்சுதைதாவில்கூடினவெணரிய ............ *
மன்றகர்ணிகைசரயுநர்மமதைபாளங்கரிசாளமே ............ *

(இ-ள்.) சென்றபொழுதே தெய்வவிமானம் வருகின்ற தெய் விகஸ்தலங்கள் அனேகம் இருக்கின்றதேயென்று சொல்லியருளினார் அதுகேட்டு அந்த இரண்டுபேரும் வணங்கிநின்று அந்தஸ்தலங்கள்

எது எது அதுகளை எமக்குத் தெரியச்சொல்லவேண்டுமென்றுகேட்க அந்தயோகீஸ்வரர் அப்போது சொல்லுகின்றார், கண்டகி - பீமை-யச்சுதை-குற்றமற்றகருஷ்ணைவேணி-மேன்மைநிறைந்த மணிகர்ணிகை-சரயு-நர்மதை-மாகாளம்-காிகாளம் என்றவாறு . . . . . . . . . (௫)

பாவநாசம்விசாலைசந்திரபாகையற்புதையிரவியூர்.......... ...... *
தேவரார்க்கிருதஞ்சிராப்பளிசிந்துகோமதிகிரணியே............ *
காவிரிக்கனகற்குளம்பிரவளமேயுறைகைத்தல .............. *
மாவனஞ்சிகிவளையணைக்கமலாலயந்திருவம்பலம்.......................*

(இ-ள்.) பாவநாசம்-விசாலை-சந்திரபாகை - அற்புதை - இரவியூர்-தேவர்களமுதம்பொசித்ததிருச்சிராப்பளி-சிந்து-கோமதி-கிரணிகாவிரி-அழகிய கற்குளம்-பிரவாளம்-திருவுறைகைப்பதி-திருவானைக்கா-திருமயிலாடுதுறை-திருவண்ணாமலை-திருவாரூர்-சிதம்பரம் எ-று.

துருத்திசந்திரரோகைதொன்மழபாடிசுந்தரமாமலை..................*
திருத்துநெய்த்தலமங்கலந்திருவாஞ்சியந்திருமருதரோ.. ........ *
கருத்தனெண்கணமயூரமாவடுதண்டுறைக்கணகோடிகா.............. *
விருத்தவெற்பொடுகோபருப்பதமிக்கதென்றுவிளம்பினர்......... *

(இ-ள்.) திருத்துருத்தி - சந்திரரோகை - பழமையாகிய திருமழபாடி-சுந்தரகிரி - திருத்தமாகிய திருநெய்த்தானம் - திருமங்கலம்-திருவாஞ்சியம்-திருவிடைமருதூர்-பரமசிவனெழுந்தருளிய திருவெண்கணம-திருமாயூரம்-குளிர்ச்சிபொருந்திய திருவாவடுதுறை- திரு,க்கோடிகா-விருத்தாசலம்-கோபருப்பதம்-இவைகளெல்லாம் முக்கியஸ்தலமென்று சொல்லியருளி என்றவாறு.................... (எ)

அத்தலங்களிலேகிடாவிடினரிதுநற்கதியென்றன...................*
னெய்த்தனப்வழிநடையிருவினியகுதற்கரிதுன்னருட் ............ *
சித்துத்தருமொன்றனர்சிவயோகியுள்ளமகிழ்ந்துநீ.................*
ரித்தகைத்திருநீற்றைமநறியிலிட்டமாத்துவாதன்னிலே............*

இ-ள்.) அப்படிப்பட்ட ஸ்தலங்களிற்செல்லாவிட்டால் மோக்ஷங்கிடைப்பது அரிதென்று சிவயோகிசொல்லியருளினார் அதுகே

ட்டு நாங்களிருவரும் வழிநடந்தபிரயாசத்தினால் மிகுந்த இளைப்புற்றிருக்கின்றோம் எங்களால் நடக்கமுடியாது ஆதலால் உமது திருவருட்பார்வைகொடுத்து ரக்ஷிக்கவேண்டுமென்று சொன்னார்கள் அதுகேட்டுசிவயோகியாரும் மனமகிழ்ந்து நீங்கள் இந்த வெண்மைபொருந்திய திருநீற்றை நெற்றியில் தரித்துக்கொண்டமாத்திரத்தில்.என்று

நல்லவாகியகோபருப்பதநண்ணுவீரொருமூன்றுநா ........ ........ *
ளல்லல்சிந்திடவரனையர்ச்சியுமகிலசித்தியுமணையுமென் ...... ...... ...... *
றொல்லைநீற்றையளித்தனன்னவ்துண்மையென்றவர்வாங்கின ...... *
ரொல்லைநெற்றியிலிட்டனர்பசுவனாயிலெய்தினரிருவரும்............ *

(இ-ள்.) நன்மைபொருந்திய கோபர்வதத்தையடைந்து அவ்விடத்தில் உங்களுடைய பிறவித்துன்பநீங்கும்படி மூன்று நாள்பரியந்தம் பரமசிவனைப்பூசைசெய்யுங்கள் அங்ஙனம் செய்தால சகலசித்திகளுமுண்டாகுமென்றுசொல்லி விரைவாக விபூதிப்பிரசாதங் கொடுத்தருளினார் அதை அவர்களிருவரும் உண்மையென்று இரண்டுகைகளாலும் வாங்கிநெற்றியிலணிந்துக்கொண்டு கோபர்வதத்திற்குச்சென்றார்கள் என்றவாறு ...... ...... ........................ ........ ......... (௬)

கங்கைமூழ்கினர்மங்கைநாயகர்கழல்பணிந்தனர்மூன்றுநா ......... *
ளங்கணித்திரையுண்டிவிட்டனரஞ்செழுத்தையுமோதினா.......... *
ரொங்களையருமெங்களம்மையுமிடபவாகனராகியே....... ..... ..... *
தங்குகாட்சிகொடுத்தனரவர்தாமகிழ்ந்துபணிந்தனர் .... . ........ *

(இ-ள்.) அவிடத்திற்சென்று ஈசானகங்கையில் ஸ்நானம்பண்ணி சத்தீஸ்வரருடைய திருவடிகளை வணங்கி மூன்று நாள்பரியந்தம் உண்டியுமுறக்கமுமில்லாமலிருந்து பஞ்சாக்ஷரஜபஞ் செய்தார்கள் அப்பொழுது எமது பிதாவாகிய சத்தீஸ்வரரும் மாதாவாகிய சிற்சத்தியும் ரிஷபவாகனரூடராயெழுந்தருளி பிரத்தியக்ஷமாகித் தரிசனங்கொடுத்தருளினார் அதைக்கண்டு அவர்களிருவருமனங்களித்து நமஸ்கரித்து நின்றார்கள் என்றவாறு.......... ................... ......(௭)

வரங்கள்கேளுமினென்றனன்சிவன்மங்கையும்மறையவனுமாய்க் .. *
கரங்கள்கூப்பிவணங்கியேயவக்கடல்கடந்திடுமாறெமக் ....... ...... *

கிரங்கிநின்சரணங்கடந்தருளென்றனரஃதீந்தனர்.......... ..... *
தரங்கியாதுநம்யோகிசொற்படிதலமுலாவுகவென்றனர்........... *

(இ-ள்.) அங்ஙன நிற்பவர்களைப்பார்த்துப் பரமசிவன் உங்களுக்கு வேண்டியவரங்களைக்கேளுங்களென்றுதிருவாய்மலர்ந்தருளினார் அதுகேட்டு முரிசியம்மையும் பிருடிதனும் கைகளையஞ்சலியாகக்கூப்பிவணங்கி சுவாமீ தேவரீர்அடியேங்களுக்காக இரக்கமுற்றுப் பிறவிச்சமுத்திரத்தை நீந்தும்படி உமது திருவடிகளைத் தெப்பமாகக்கொடுத்து ரக்ஷிக்கவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தார்கள் பரமசிவனும் அங்ஙனே அந்தவரத்தைக்கொடுத்தருளி நீங்கள்மனஞ்சலியாமல் நமது யோகியாருடைய வாக்கியப்படி ஸ்தலவாசஞ் செய்யுங்களென்று சொல்லி என்றவாறு .............. ........ (௰க)

உமாபதிச்சிவனருளினலொளியால்விளங்குகளங்கமில்.................. *
விமானநல்கினர்பிருடிதன்சிவன்மேனியாயினனுமைதனைச்......... ..*
சமானமாயினண்முரிசியுந்தடையின்றியெங்குமுலாவியே ........... *
தமாதிடத்தினர்கோபருப்பதர்தக்கசேவடிபுக்கினர்.................... *

(இ-ள்.) உமாபதியாகிய பரமசிவனனவர் தமதுகிருபையினால் திவ்வியப்பிரகாசம்பொருந்திய களங்கரகிதமான ஒரு தெய்வவிமானத்தையுங்கொடுத்தருளினார் அதில் ஏறினவுடன் பிருடிதன் சிவசாரூபம் பெற்றனன் முரிசியம்மையார் உமையவளாகிய சத்திசாரூபம் பெற்றனள் இப்படிச்சாரூபம்பெற்ற இருவரும் ஒருதடையுமில்லாமல் எந்தஸ்தலங்களிலும் வாசஞ்செய்து பின்பு தமது சிற்சத்தியாகிய உமையவளை இடப்பாகத்திலுடைய சத்தீஸ்வரரது அழகிய திருவடிகளிற் சேர்ந்தார்கள் என்றவாறு ................................... (௰உ)

---

பிருடிச்சருக்கமுற்றுப்பெற்றது.

---

ஆக சருக்கம் - ௰எ - க்கு - திருவிருத்தம் (சாரு)

திருச்சிற்றம்பலம்.

பதினெட்டாவது,

# சசிவன்னச் சருக்கம்.



(வேறு.)

நாரணர் தம்மைநோக்கி நம்பர் தாமருளிச்செய்வார் ... ...... *
சீரணி தவத்தினோர்கள் சேவையின் பெருமைகேளா ........ *
யேரணிபாவவெச்சனென்றொருமறையோன்மைந்தன் ........ *
றாரணிதன்னிற்பாவிசசிவன்னனென்பான்மன்னோ ........ *

(இ-ள்.) மகாவிஷ்ணுவைப்பார்த்துப் பரமசிவன் திருவுளம் பற்றியருளுகின்றார், ஓய் மகாவிஷ்ணுவே சிறப்புப்பொருந்தியதவத்தையுடைய பெரியோர்கள் தரிசனத்தின் பெருமையைக் கேட்பாயாக, அஃதியாதெனில்-அழகுமிகுந்த பாவவெச்சனென்றுசொல்லுகின்ற ஒரு பிராமணனுடையகுமாரன் உலகத்திற்கொடிதான பாவங்களைச்செய்தவன் சசிவன்னனென்னும்பெயரையுடையவன்-எ-று (க)

பத்தரையும்மையெம்மைப்பரவுவேதத்தைநீற்றை ...... *
மெய்த்தருமத்தைநிந்தைவிளம்புவதவன்றன்கல்வி ........ *
நித்தலுங்கொலைசெய்தனியமந்தானடுத்தார்தம்மைக் ........ *
குத்திரஞ்செய்தலேகுலாசாரமாவதம்மா ........ ... *

(இ-ள்.) அடியார்களையும் உம்மையும் எம்மையும் யாவருந் துதிக்கப்பட்டவேதத்தையும், திருநீற்றையும், உண்மையாகிய அறத்தையும் நிந்தைசொல்வதே அவனுடைய கல்வியாகும் தினந்தோறும் உயிர்க்கொலைசெய்வதே அவனுக்கு நியமமாகும் அடுத்தவர்களை வஞ்சித்துக்கெடுப்பதே அவனுக்குக்குலாசாரமாகும்என்றவாறு.(உ)

மாதரைக்கிளைஞர்தம்மைவாலரைக்கருவைக்கோவை ........ *
வேதியர்தம்மைக்கொல்லும்விரதமேவிரதநல்ல . .......... *
நீதிகளுடையோர்வீட்டினெருப்பிட்டும்விடங்களிட்டும் ..... *
பாதகப்பொடிகடூவிப்பறிப்பதேயவன்றன்கேள்வி ... ........ *

(இ-ள்.) ஸ்திரிகளையும்-சுற்றத்தாரையும்- வாலிபரையும்-கர்ப்பத்தையும்-பசுக்களையும்-பிராமணர்களையும் - கொல்லுகின்ற விரதமேயவனுக்கு விரதமாகும், நல்ல நீதியையுடையவர்களுடையவீட்

டில் நெருப்புவைத்தும் அவர்களுக்கு விஷமருந்துகளையூட்டியும் சொக்குப்பொடிகளைத்தூவியும் அவர்களிடத்துள்ள பொருள்களைப் பறித்துக்கொள்வதே அவனுக்குக் கேள்வியாகும் என்றவாறு.....(௩)

பத்திரமெழுதியேவற்பணியினர்போலச்சென்று ..................*
குத்திரஞ்செய்துகோளுங்குறளையுமுரைத்துமுன்னே........*
மித்திரர்போலச்சென்றுவிருந்துண்டுகளவுகொண்டு...........*
சத்துருவாகப்பேசித்தனிப்பழிதீரநின்றான்........................*

(இ-ள்.) பொய்யாகிய கடன்பத்திரமெழுதி ஒருவனுடைய ஏவலாளனைப்போலப் போய்க்கடன்கேட்டு வஞ்சனைசெய்து அவன்மேற்புறங்கூறியுங் கோள்சொல்லியும் முன்புசினேகிதனைப்போலப்போய் விருந்து சாப்பிட்டு அவர்கள்வீட்டில் களவுசெய்தும் பின்பு சத்துருவைப்போலப்பேசித் தனிவழியில் அந்தப்பழியைத் தீர்த்துங்கொள்வான் என்றவாறு............................................................(சு)

நிறைத்தபொய்யோலைகாட்டிநிலங்களுந்தனமுங்கொண்டு.....*
மறைத்தவவேடங்கொண்டுவழிக்கரைவருந்தியிட்டுப்..........*
பறைச்சியைமனைவியாக்கிப்பாதகரிணக்கஞ்செய்து..............*
மிறைச்சியுமீனுங்கள்ளுமீயலுமருந்தாநின்றான்...................*

(இ-ள்.) பொய்யைநிறைத்து எழுதிய சீட்டைக்காண்பித்துப் பூமிகளையும் பொருள்களையும் அபகரித்துக்கொண்டும் பிராமண சந்நியாசவேஷங்கொண்டு வழிக்கரையில் இருந்து வழியேவருகின்றவர்களை வருத்தஞ்செய்து அவர்களிடத்துள்ள பொருள்களைப்பறித்துக் கொண்டு புலைச்சியை மனையவளாக்கிக்கொண்டு பாதகர்களோடு சினேகஞ்செய்தும் மாமிசமும்-மச்சமும்-கள்ளும்-ஈசெல்லும்-உண்வாகப் புசித்துக்கொண்டுமிருந்தான் என்றவாறு..................(ரு)

சுரர்களாயிவர்தம்வர்க்கஞ்சுவர்க்கத்தையடைந்தோரெல்லாந் *
தரமிலா நரகில்வீழ்ந்தார்சசிவன்னன்செய்தபாவ.... ..........*
முரண்முயலகனும்பேயுநோயுமாய்மொய்த்துவீழ்ந்தா......*
னரகரும்வருவமென்று நடுங்கிடத்தொடங்கிற்றம்மா...........*

(இ-ள்.) இவனுடைய குலத்திலுள்ளவர்கள் தேவர்களாய் சுவர்க்கத்திற்குப் போனவர்களெல்லாரும் கொடுமையாகிய நரகத்தில்விழுந்தார்கள். சசிவன்னனென்பவன் அவன்செய்தபாவங்களை வலிதாகிய முயலகவியாதியும் பசாசமும் மற்றெல்லாவியாதிகளுமாகிச்சூழ்ந்து வருத்தஞ்செய்ய அதனாற்பாயிற்கிடந்து வருந்தினான் அல்லாமலும் நரகமும் இவன் நம்மிடத்தில்வருவானென இவனையெப்படி நாம்சகிப்பதென்று நடுங்கத்தொடங்கிற்று என்றவாறு ......................(சு)

வெறுத்திடவொருவன்செய்தபாவங்கண்மிக்கதன்று ........*
பொறுக்குமோதெய்வமிம்மைதன்னிலேபுடைத்துப்பின்னர்*
மறுத்திட நரகில்வாட்டும்புண்ணியமலிந்ததன்று ............*
நிறுத்துமோவிம்மைகாட்டுநெருப்புநீர்மிகுதிபோலும்... ...*

(இ-ள்.) யாவரும் வெறுக்கும்படியாக ஒருவன்செய்த பாதகங்கள் அதிகமாகமேலிட்டகாலத்தில் தெய்வம்பொறுக்குமோ பொறுக்காமல் இகத்திற்றானேவருத்தி மறுமையிலும் ஒருவராலுந்தடுக்கப்படாத கொடிய நரகத்தில் வீழ்த்திவருத்தும். அதுபோலப் புண்ணியங்கள் மேலிட்டகாலத்திலும் அதன்பயனைக் கொடாதுநிறுத்துமோ நிறுத்தாமல் இப்பொழுதே காண்பிக்கும். அஃதெங்ஙனமெனில் நெருப்புமிகுந்தால் நீரடங்குவதுபோலும் நீர்மிகுந்தால் நெருப்படங்குவதுபோலும் என்றவாறு............................(எ)

சசிவன்னன்றந்தையாருந்தனையிடைப்பணிந்துபோற்றி...... *
யிசையுளதெய்வபத்தனொன்னுமாதவனைநோக்கி...... .......*
விசையுளமைந்தன்செய்தவினையெலாம்விளங்கச்சொன்னார்...*
கசிவுடைதெய்வபத்தர்கருணையாலுபதேசிப்பார்................*

(இ-ள்.) சசிவன்னன்படுகின்ற துன்பத்தை அவன்பிதாவாகிய யாவவெச்சர்கண்டு மனஞ்சகிக்காதவராகிக் கீர்த்தியுள்ள தெய்வபத்தனென்னும் ஒருபெரியவனைப்பார்த்துப் பூமியில்விழுந்து வணங்கித் துதித்துநின்று குரூரமான தனதுபுத்திரன்செய்த சகலதீவினைகளையும் நன்றாகத்தெரியும்படி விண்ணப்பஞ்செய்தார். அதுகேட்டு அன்பையுடைய அந்தத்தெய்வபத்தரும் கிருபையினாலனுக்கிரகஞ் செய்கின்றார் என்றவாறு..................................................(அ)

அழுங்கியபாவவெச்சவருண்மழுதுகுன்றன்முத்தி ............ ✻
வழங்குவான்வைத்தநந்திவரையுநாற்காதவெல்லைச்............ ✻
செழுந்திருமலையாள்பூசைசெய்தசத்தீசுரத்திற்...... ... ......... ✻
கொழுந்துபட்டயனூர்பூசைகொடுத்தபின்சிருட்டிபெற்றூர் ✻

(இ-ள்.) வருத்தங்கொண்ட பாவவெச்சனென்னும் பிராமண னே நீகேட்பாயாக. திருபாவடிவமாகிய பழமலைநாதர் சகலவுயிர்க ளுக்கும் மோக்ஷத்தைக்கொடுக்கும்பொருட்டு வைத்திருக்கின்ற கோ பர்வதமும் நாற்காதவழியிலிருக்கின்றது செழுமைபொருந்திய அழ கிய பர்வதராஜபுத்திரியாகிய உமையவள்பூசித்த அந்தச்சத்தீஸ்வரத் தில் முன்பு பிர்ம்மதேவரும் அன்புகொண்டு சிவபூசைசெய்தபின்பு சிருஷ்டித்தொழிலைப்பெற்றூர் என்றவாறு..... ..... ....... ......... (௬)

பூருவமகவான்பூசைபுரிந்துவானரசனூ ............ .... ......... ✻
னேருறுமிந்திராணிபூசையாலவனைச்சேர்த்தா ......... ........... ✻
டாருகாசுரன்பூசித்துத்தானவர்க்கரசனூ ...... ... . ... .. ✻
ஞருறுவெள்ளிபூசித்தவர்புரோகிதருமானூர் ......... .. ............ ✻

(இ-ள்.) பூர்வத்தில் தேவேந்திரன் அந்தஸ்தலத்தில் வந்துபூ சைசெய்து சுவர்க்கலோகத்திற்கு அதிபதியாகினன். அழகுபொருந் திய இந்திராணியானவள் பூசைசெய்து அந்தத்தேவேந்திரனைப் புரு ஷனுகப்பெற்றுள்- தாருகாசூரன் பூசைசெய்து ராக்ஷதர்களுக்கு அதிபதியாகினன். ராக்ஷதர்களுக்கு உறுதிசெய்கின்ற சுக்கிராசாரி யார் பூசைசெய்து அந்தராக்ஷதர்களுக்குக் குருவாகினர் என்றவாறு ✻

உருவசிபூசையாலேயுயர்மகவானைச்சேர்ந்தா .................... ✻
ணிருமலநந்திவெற்பினீயுநின்மகனும்போகித்.... ...... ...... .. ✻
தருமதானங்கள்செய்துசத்திநாதனையும்போற்றிப் . . ....... ✻
பருவரைதனின்மாநந்திபராயணரிருப்பர்கேண்மோ......... ✻

(இ-ள்) உருவசியானவள் பூசைசெய்து உயர்ந்ததேவேந்திர னைக்கூடினுள் ஆதலால் அந்த பரிசுத்தமாகிய கோபர்வதத்திற்கு நீயும் உன்குமாரனும்போய் தர்ம்மதானங்களைச்செய்து சத்தீஸ்வர ரையும் வணங்கித் துதித்து பின்பு அந்த பருத்த கோபர்வதத்தில்

மா நந்தி பராயணனென்னும் பெரியவரிருக்கின்றார் அதையுங்கேட்பாயாக என்றவாறு.................................................(௰௧)

அந்தமாயோகிதன்னையானுதசேவைபண்ணின்........................*
மைந்தனேயகலுமென்றார்மறைமுனிவாக்கைநம்பி.....................*
யிந்தமால்வரையினண்ணிஈசானகங்கையாடித்.........................*
தந்தையுமகனுஞ்சத்தித்தலைவனைப்பணிந்துபோற்றி....................*

(இ-ள்.) அந்தமகாத்மாவாகிய யோகீஸ்வரரையும் நீங்காதிருந்து தரிசனஞ்செய்தால் உன்குமாரனுடைய பிணிகளெல்லாம் நீங்கிவிடுமென்று அனுக்கிரகஞ்செய்தார் அதுகேட்டு அந்தத்தெய்வபத்தருடைய திருவாக்கை உபதேசமாக நம்பி பாவவெச்சரும் அவர்குமாரனாகிய சசிவன்னனும் இப்படிப்பட்ட பெருமையையுடைய கோபர்வதத்திற்குப்போய் ஈசானகங்கையில் ஸ்நானஞ்செய்து சத்தீஸ்வரனை வணங்கித்துதித்து என்றவாறு.................................(௰௨)

பரமதேசிகமா நந்திபராயணர்தம்மைப்போற்றி.......................*
புரமுறப்பணிந்துசேவையுறறபின்மைந்தன்செய்த...................*
கரவுடைப்பவங்கள்சொன்னுன்கடைக்கணால்யோகிநோக்க....*
விரிவுபாதகங்களெல்லாமேலிடாதகன்றதன்றே.......................*

(இ-ள்.) பரமாசாரியராகிய மா நந்திபராயணரைத்துதித்துப் பூமியிற்சரீரம்பொருந்தவணங்கித் தரிசனஞ்செய்தபின்பு பாவவெச்சனென்னும் பிராமணர் தன்புத்திரன்செய்த வஞ்சகமுள்ள பாதகங்களை விண்ணப்பஞ்செய்தார். அதுகேட்டு அந்தமா நந்திபராயணர் தமது கிருபாகடாக்ஷத்தினால் பார்த்தமாத்திரத்தில் அவனிடத்திற்சேர்ந்துள்ள சகலபாதகங்களும் மேலிடாமல் நீங்கிவிட்டது. எ-று.

யோகிதன்பூசைக்கேற்றவுபகரணங்கள்செய்தும்..........................*
போகமார்பசுக்கண்மேய்த்தும்பொற்பதம்பிடித்துநின்றான் *
வேகியபவங்கணீங்கிவியாதியும்வலியும்பேயு...........................*
மேகியதுடனேபின்னர்ப்பரிகலச்சேடமீந்தார்..............................*

(இ-ள்) அதன்பின்பு சசிவன்னனானவன் அந்தயோகீஸ்வரருடைய பூசைக்குத்தகுந்த உபகரணங்களைச்சேர்த்தும் செல்வத்தை

த்தருநின்ற பசுக்களைமேய்த்தும் அவரது அழகிய திருவடிகளைப்பி டித்துமிருந்தான் அங்ஙன மிருக்குங்காலையில் அவன்செய்துள்ள கொடூரமாகிய பாவங்களெல்லாம் நீங்கி உடனே பலவியாதியும் பிர தானமான முயலக்வலியும் பசாசும் நீங்கின பிற்பாடு அவரது பரிகல ப்பிரசாதங் கொடுத்தருளினார் என்றவாறு.................................(௰௪)

பரிகலச்சேடங்கொண்டுபதத்தினிற்பூசைசெய்தா.................*
னரியநீறியோகிசாத்தியடியிணை தலைமேல்வைத்துத்..............*
தெரிவுறவுபதேசித்தான் றிவ்வியஞானம்பெற்றுத்................*
தரிவுளமுத்திபெற்றான்றந்தையுமுத்திபெற்றான்...............*

(இ-ள்.) சசிவன்னனனவன் பரிகலப்பிரசாதத்தைப்பெற்றுக் கொண்டு அவரது திருவடியிற் பூசைசெய்தான் அங்ஙனம் பூசைசெ ய்தவளவில் அந்த யோகீஸ்வரர் அரிதாகிய திருநீற்றை அவனதுநெற் றியிலணிந்து இரண்டுபாதங்களையும் அவன் சிரசின்மேற்சூட்டிப்பிர மோபதேசத்தைத் தெளிவுபொருந்த உபதேசித்தார் அதனாற்றிவ்விய ஞானத்தைப்பெற்று சதாகாலமும் நித்தியத்துவமாயுள்ள மோக்ஷத் தைப்பெற்றான் அவனது பிதாவாகிய பாவவெச்சனென்னும் பிராம ணரும் மோக்ஷத்தைப்பெற்றார் என்றவாறு.............................(௰௫)

பிதிர்க்களு நரகைவிட்டுப்பெருஞ்சிவலோகஞ்சேர்ந்தார்.......*
கதிச்சசிவன்னர்காதற்புலைச்சியுங்கதியிற்சேர்ந்தாண்...........*
மதித்திருமாலேகேளாய்மாதவர்பெருமைதன்னைத்..............*
துதிக்கரிதின்னுஞ்சொல்வோஞ்சுவகையென்றொருத்திவேசி..*

(இ-ள்.) அவனுடைய பிதிர்க்களும் நரகத்தைவிட்டுப் பெரி தாகிய சிவலோகத்திறம்சர்ந்தார்கள் அங்ஙன முத்தியைப்பெற்ற சசி வன்னருடைய ஆசைமனைவியாகிய பறைச்சியுங் கதியைப்பெற்றாள். ஆதலால் விவேகதனையுடைய மகாவிஷ்ணுவே நீகேட்பாயாக, பெரி யோர்களுடைய பெருமையைச் சொல்வதற்கரிதாகும் ஆயினும் இன் னமுஞ் சொல்லுகின்றோம், அஃதியாதெனில் சுவகையென்று பெய ரையுடைய ஒரு வேசையிருந்தாள் என்றவாறு.............................(௰௬)

நகையினனகைக்கப்பண்ணு நடையினனடையைமாற்றுந்... *
தகையினற்றகைவுசெய்யுந்தனத்தினற்றனத்தைவாங்கு... *
மிகையினல்விழித்துநோக்கிவிழித்திடப்பண்ணுமிந்த.... *
வகையினன்மனிதரஞ்சும்வானவர்தாமுமஞ்சும்........... *

(இ-ள்.) அவள் நகைக்கின்றநகைப்பினல் ஞானவலிமையையுடையவர்களானலும் அவர்களுள்ளத்திலுங் காமமுண்டாகிநகைக்கும்படிசெய்வள், அவளது நடையினல் அவர்கள் ஞானநடையையுந்தடுமாறச்செய்வள், அவளது அழகினல் அவர்களைப்புறத்திற் செல்லவொட்டாமலுந் தஸ்மரணத்திற் றிரும்பவொட்டாமலுந்தடுத்துவிடுவள், அவளது ஸ்தனங்கலால் அவர்கள் கல்விப்பொருளையுஞ் செல்வப்பொருளையும் பறித்துக்கொள்வள், அல்லாமலும் வஞ்சகநிறைந்த கண்களால் விழித்துப்பார்த்து எவர்களையும் பிரமிக்கச்செய்வள், இப்படிப்பட்ட தன்மையினல் அவளைக்கண்டால் மனிதர்களும் பயப்படுவார்கள் தேவர்களும் பயப்படுவார்கள் என்றவாறு.................. (௯எ)

வழுவிலாப்பொருண்மிக்குள்ளார்மணந்தவர்தணந்தஞான்று *
மழும்விழுமாசைகூறியருக்கிடு நல்லோர்க்காணிற்............ *
றொழுதுளேயிருத்துந்துஞ்சிற்சோரமுஞ்செய்யுமன்றித்.... *
தழுவியும்பொருளைவாங்குந்தவறினற்கோறல்செய்யும்....... *

(இ-ள்.) குற்றமில்லாத அதிக திரவியத்தையுடையவர்கள் கூடிப்பிரிந்தகாலத்திலும் அழுவள், அல்லாமலும் ஆசைப்பெருக்கங்கூறி அவர்கள்மேல்விழுவள், அச்சமுற்றவள்போல் நிற்பள், நல்லவர்களைக்கண்டால் கும்பிட்டழைத்து மனையினுள்ளிருக்கச்செய்வள், அவர்கள் நித்திரைசெய்தால் அவர்களிடத்துள்ளபொருள்களைக் களவுசெய்வள், அதுவுமல்லாமல் அவர்களைக் கூடியும் பொருளைப் பறிப்பள், அதற்குந் தவறிப்போனல் கொன்றுவிடுவள் என்றவாறு........(௯அ)

வேசிதானிளைஞர்க்காணில்விருந்திட்டுமருந்தையிட்டும்........ *
பாசமாய்த்தழுவிப்பொய்யேபழமைபாராட்டிச்சேர்த்தும்... *
வாசமார்பொடிகளிட்டும்வதைசெய்தும்வாழுநாளி......... *
லாசினற்பிணிகண்மூடியவயவமழிந்துபோனள்............... *

(இ-ள்.) அந்தவேசையானவள் வாலிபரைக்கண்டால் விருந்து செய்தும் மருந்திட்டும் அவர்களை யன்பாகத்தழுவிப் பொய்யாகப் பழமைபாராட்டிக் கூடியும், அவர்களுக்கு வாசனைபொருந்தியசொக்குப்பொடிகளைத் தூவியும், அவர்களைக்கொன்றும் இப்படிவாழுகின்றகாலத்தில் அவள்செய்தபாதகங்களால் வியாதிகள் மூடிக்கொண்டு அவயவங்கள் அழிந்துநின்றாள் என்றவாறு .......... .... ..... .. .....(யகூ)

வருத்தமேலிட்டஞான்றுமாதவரொருவர் நண்ண ;.... ......... *
வருத்தியாற்பணிந்துபாதம்விளக்கிநல்லமுதமூட்டித் ... . .... *
திருத்தியகந்தஞ்சாத்திச்சேடமுந்தீர்த்தந்தானும் .......... *
கருத்தினற்கொண்டாளன்றுகடும்பிணிதீர்ந்ததன்றே .......... *

(இ-ள்) அங்ஙனந்துன்பமேலிட்டகாலத்தில் அந்தவேசையானவள் மகாதவத்தையுடைய ஒருயோகீஸ்வரர் எழுந்தருளிவர அவரைக்கண்டு ஆசையால் வணங்கிநின்று அவரது திருவடிகளையபிஷேகஞ்செய்து அவருக்கு நன்மையான திருவமுது ஊட்டி திருத்தமாகிய சந்தனம் பூசிப் பின்பு பரிகலப்பிரசாதமும் பாததீர்த்தமும் அன்பாக உட்கொண்டாள் அப்பொழுதே அவளைச்சூழ்ந்தகொடியவியாதிகளெல்லாம் நீங்கிவிட்டது என்றவாறு ............ ... ....? .... (உல)

அவண்மனந்தெளிந்தாளென்னையடிமைகொண்டருளுமென்ற
ளிவனுபதேசம்பண்ணியிருபதந்தலைமேற்சூட்டப் .......... *
பவமறுத்தெம்மைச்சேர்ந்தாள்பாசமுஞ்சுவர்க்கஞ்சேர்ந்தார் *
கவுரியிற்பற்றத்தொண்டர்காதலினிருப்போமென்றார் ....... *

(இ-ள்.) அதன்பின்பு அந்த வேசையானவள் சித்தசுத்தியுள்ளவளாகி அந்த யோகீஸ்வரரை வணங்கி ஓய்சுவாமீ என்னையடிமைகொண்டு ரக்ஷிக்கவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தாள் அதுகேட்டு அந்த யோகீஸ்வரரும் அங்ஙனே ஞானோபதேசஞ்செய்து இரண்டு திருவடிகளும் அவள் சிரசின்மேற் சூட்டினவளவில் பிறவிநீங்கி எமது திருவடியிற் சேர்ந்தாள், அவளது சுற்றத்தாரும் சுவர்க்கத்திற் பொருந்தினார்கள், ஆசையினால் உமையவளுடைய அன்பில் தார்வைத்திருக்கும் விருப்பைப்பார்க்கிலும் பத்தர்களுடைய அன்பில் அதிக

விருப்புவைத்திருப்போமென்று திருவுளம்பற்றியருளிப் பின்னுஞ் சொல்லுகின்றார் என்றவாறு.......................................(உக)

மாயனேதொண்டர்க்கீந்தவளமெலா நமக்கேயாகு.......... *
மேயவரிடத்தேயாமும்விருப்பமாயிருப்பதென்று........... *
ராயனும்பூசைபண்ணியடியிணைதலைமேல்வைத்து........... *
நேயமாமுண்மைகேட்டுநிருத்தமுமன்றிற்கண்டான்........... *

(இ-ள்) ஓய்.மகாவிஷ்ணுவே நீ கேட்பாயாக, அடியார்களுக்குச்செய்த சகல நன்மைகளும் நமக்குச் செய்ததாகும் நாமும் அவர்களிடத்திற்றானே எப்போதும் விருப்பமாகப் பொருந்தியிருப்பதென்று அனுக்கிரகஞ் செய்தருளினார், அதுகேட்டு மகாவிஷ்ணுவும் பரமசிவனைப் பூசித்து இரண்டு திருவடிகளையும் சிரமேல் வைத்துக் கொண்டு அன்பாகிய மெய்ஞ்ஞான வுபதேசத்தைப்பெற்றுச் சிதம்பரத்தில் நடனதரிசனமுங்கண்டு தரிசித்தார் என்றவாறு.......... (உஉ)

கருக்குழிவேண்டிற்கொல்லுங்காலனைவேண்டிற்செக்கி......... *
னெருக்குணவேண்டினந்தநேசரைநிந்தைசெய்மின்.......... *
றிருக்கிளர்செல்வம்வேண்டிற் றிகழ்முத்திவேண்டிற்றொண்டர்
வருக்கமேபோற்றுமென்றுமறைந்தனன்மன்றுளாடி............ *

(இ-ள்.) பிறவிக்குழியைவேண்டினால் - கொல்லுகின்ற யமனை வேண்டினால் - செக்கிடத்தில் நெருக்குண்ணவேண்டினால் - நமது அடியார்களை நிந்தைசெய்யுங்கள், லக்ஷ்மிவிலாசம்பொருந்திய செல்வம்வேண்டினால்-பிரகாசிக்கின்ற மோக்ஷம் வேண்டினால் - அடியார்கள் கூட்டத்தை வணங்குங்களென்றனுக்கிரகஞ்செய்துசிதம்பரத்தில் நட்னஞ்செய்தருளிய பரமசிவனனவர் சிதாகாசத்தில் மறைந்தருளினார் என்றவாறு...................................................(உரு)

புராரிதான்மறைதல்கண்டுபோதகவுறைப்பினாலே.......... *
முராரிமுன்னிற்றல்போலமுதல்வனைப்பணிந்துபோற்றிக்...... *
கராரிமாமலர்கள்கொண்டுகழலிணைபூசைசெய்து........... *
நராரிவைகுந்தஞ்சென்றுநயந்தனனுண்மைநிட்டை.......... *

(இ-ள்.) திரிபுராந்தகராகிய பரமசிவன் மறைந்தருளினதைக்

கண்டு உபதேசவலிமையினுல் விஷ்ணுவானவர் பரமசிவன்முன்னே நிற்பதுபோலக்கொண்டு அவரை வணங்கித்துதித்துக் கைகளில்வண்டுகள்மொய்க்கின்ற புஷ்பங்களைக்கொண்டு இரண்டு திருவடிகளையும் பூசித்து நரசிம்மமூர்த்தியாகிய மகாவிஷ்ணுவும் வைகுந்தத்திற்குப் போய் உண்மைநிஷ்டையிலிருந்தார் என்றவாறு............ (உ௪)

முன் றிருமாலுக்கிந்தமுதுகுன் றிலுபதேசித்து .............. *
மன் றிலேயாடல்செய்யும்வழக்கினுன்மன் றுங்குன் று .......*
மொன்றெனவறிந்தோமன்றியயர்மன் றிற்றிருக்கூத்தாடிக்.. *
குன் றிலேயிருப்போமென்றகொள்கையுமிதனுற்கண்டோம்..*

(இ-ள்.) முற்காலத்தில் மகாவிஷ்ணுவுக்கு இந்த விருத்தாசலத்தில் உபதேசஞ்செய்து சிதம்பரத்தில் திருநடனதரிசனங்கொடுத்தருளிய சம்பந்தத்தினுல் சிதம்பரமும்-விருத்தாசலமும் ஒன்றென்று தெரிந்தோம், அல்லாமலும் உயர்ச்சிபொருந்திய சிதம்பரத்தில் திருநடனஞ்செய்து விருத்தாசலத்தில்வசித்திருப்போமென்று பரமசிவனர் திருவாய்மலர்ந்தருளிய தன்மையையும் இதனுல் அறிந்தோம் எ-று.

இரதமாகுளிகை நன்றேலிரும்புபொன்னுதறிண்ணம் ......*
வரமுளமிருதசஞ்சீவனமுண்டேன்மடிந்தாருய்வ...............*
ரரனருள்பெற்று நாலாம்பாதமுமடைவர் நல்ல ...............*
குரவனேநேரின்மைந்தன்பெருமையைக்கூறற்பாற்றே ... *

(இ-ள்.) இரசகுளிகையானது நன்மையுள்ளதாயிருந்தால் இரும்பு பொன்னுவது சத்தியம், மேன்மையான மிருதசஞ்சீவனமென்னு மந்திரசித்தியு மருந்துமிருந்தால் இறந்தவர்கள் பிழைப்பார்கள், அதுபோல நலமிகுந்த சற்குருவானவர் கிடைத்தால் எவர்களும் சிவகடாக்ஷம்பெற்று நாலாம்பாதமாகிய சத்தினிபாதத்தையும் பெறுவர்கள், அங்ஙனமான சற்குருதரிசனஞ்செய்த சறச்ஷினதுபெருமையை நம்மாலளவிட்டுச் சொல்லமுடியுமோ என்றவாறு.(உரு)

( வேறு. )

அத்தன்விருத்தகிரிக்கதையைத்தொழுதர்ச்சனைசெய்தவர்பற்றிவரைத்தவர், சததமுரைத்தவ ரத்தமுரைததவர் சந்நிதி சொன்னவர்

தஞ்செவியுற்றவ, ரொத்தனைமாதர்க ளெத்தனைவேதிய ரீன்றவராவினை மெக்கொலைசெய்யினு, மெத்தியபொன்சிவன த்தமெடுக்கினும்வெ ண்சுராயுண்கினுமேவிலர்பாவம்.................................................*

(இ-ள்.) பழமலைநாதருடைய விருத்தாசலபுராணத்தை வண ங்கிப்பூசித்தவர்கள், அதைவிடாமல் எழுதினவர்கள், அதை ஓசையா கப் படித்தவர்கள், அதற்குப் பொருள்சொன்னவர்கள், அதைச்சிவ சன்னிதானத்திற் றுதித்தவர்கள், அங்ஙனந் துதிப்பதைத் தங்கள் செ வியிலிடமாகக் கேட்டவர்கள், இவர்களெல்லாரும் எவ்வளவு ஸ்திரி கள்-எவ்வளவு பிராமணர்கள்-தாய்-தந்தைகள்- பசுக்கள்முதலிய எந் தக் கொலைபாதகங்களைச் செய்தாலும் பிரகாசிக்கின்ற பொன்னையும் சிவாலயப்பொருளையுங் களவுசெய்தாலும் மதுபானஞ் செய்தாலும் அதுகளால் ஒருபாதகங்களையும் பொருந்தார்கள் என்றவாறு.(உஎ)

ஒப்பியபாதக மத்தனையும்மூர கத்துரிபோல வொருக்கியருக் கனை, யெப்பிருளெப்படி யப்படியாகுவரொத்தனைவேண்டினரத்த னையும்மவர், கைப்படுமுத்திகள் வித்தைகள்சித்திகள் கைப்படுமிக்க தை செப்புமிடத்தினி, லப்பருமம்மையு மத்தலமேவுவரந்தியகால மும் வந்தெதிர்நிற்பார்.................................................*

(இ-ள்.) பழமையாகப்பொருந்திய சகலபாதகங்களையும் பாம் பினுடைய தோலையுரித்ததுபோலவும், சூரியனுடைய சந்நிதானத்திற் பட்ட இருளெப்படிபோமோ அதுபோலவும் கெடுத்து சூரியப்பிர காசம்போலப்பிரகாசிப்பார்கள்; அல்லாமலும் எதைவிரும்பினாலும் அவைகளெல்லாம் அவர்களுக்குக் கைவசமாகும், மோக்ஷமும் - வித் தையும்-சித்திகளும் கைவசமாகும், இந்தப் புராணத்தைப் படிக்கி ன்ற ஸ்தானத்தில் பரமசிவனும் சிற்சத்தியும் அதுவே ஸ்தலமாக எழு ந்தருளியிருப்பார்கள் அன்றியும் தேகாந்தத்திலும்வந்து தெரிசனமா வார்கள் என்றவாறு.................................................(உஅ)

சத்துருநாசமடைந்தளகேசன்றனக்கிணையாவர்மலர்த்திருமேவு வள், வித்தகராகுவரிம்மையின்வெம்மைகள் வேந்தரிராசிகள்பாம்பு பசாசுகள், பத்திரமாமிருகப்பயமற்றிருபத்தொருகோடியவர்க்குள கால்வழி, யத்தனையும்பத மெய்துவர்புத்தக மங்கைதரிப்பினு மப் படியாமால்.................................................*

(இ-ள்.) சத்துருவாதையில்லாமல் செல்வத்திற் குபேரனுக் கொப்பாக வாழ்வர்கள் அவர்களிடத்தில் மலர்மகளாகிய லக்ஷ்மிநிவா சமாய்ப் பிரியாதிருப்பள், ஞானசொருபராவர்கள், இப்பிறப்பில் வெவ்விதான கொடுமைகளும்- ராஜகூட்டபயமும்-சர்ப்பபயமும்-பசாசுபயமும் - அஸ்திரபயமும் - மிருகபயமும் - இல்லாமல் மறுமையில் அவர்களும் அவர்கள் வமிசத்தில் இருபத்தொருகோடி கால்வழியி லுள்ள பிதிர்க்களும் மோக்ஷத்தைப் பொருந்துவார்கள், அல்லாமலும் இந்தப்புத்தகத்தைக் கைகளில் வைத்திருந்தாலும் அந்தப் பலனைப் பெறுவார்கள் என்றவாறு ......... ..................... (உகூ)

(வேறு.)

திங்கண்மும்மழைபெய்கசெழும்புவி......*
பொங்கிவாழ்கபுரவலனோங்குக................*
நங்கள்சங்கரன்பூசைநலம்பெற..............*
சங்கரன்னடியார்கடழைக்கவே. ... ... ......*

(இ-ள்.) மாதந்தோறு மும்மாரி பொழியக்கடவது, செழுமை பொருந்திய உலகம் செல்வமிகுந்து வாழக்கடவது, இந்தவுலகத்தை யரசுசெய்கின்ற அரசன் வாழக்கடவன், நமது பரமசிவனுடைய பூசையானது நலம்பெறக்கடவது, பரமசிவனடியார்கள் எப்போதுந் தழைத்து வாழக்கடவர்கள் என்றவாறு .. ...... .. ......... .. ........(௩௰)

---

சசிவன்னச்சருக்க முற்றுப்பெற்றது.

---

ஆக சருக்கம் - ௰அ - க்கு - திருவிருத்தம் (சஎ௩௫)

---

விருத்தாசலபுராணம் முற்றிற்று.



# பிழை திருத்தல்.

| பக்கம். | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௩௫ | ௧ | தங்கை | கங்கை |
| ௪௮ | ௨ | கங்கு | தங்கு |
| ௬௫ | ௯ | ரெ | கொ |
| ௱௰ | ௨௮ | தவர் | செய்தவர் |
| ௱௨௨ | ௰௯ | ணத்திற் | தவணத்திற் |
| ௱௩௬ | ௭ | ரிஷி | ரிஷப |
| ௱௫௨ | ௰௯ | கெரலை | கொலை |

## உரைச்சிறப்புப்பாயிரம்.

### அகவற்பா.

---

உலகெலா முணரவு மோதவு மரியவன் - அலகிலாத் திருவிளையாட்டுடையவனவன், அரைச்சோமனைத்தலைக்கணிந்தத்தியசனை - அரைச்சோமனாகவுமமைத்தவனமர்ந்த, விருத்தாசலத்தின் விறெலாம்விளங்கத் - திருத்தமாத்தமிழினிற்றிருஞானக்கூத்தன், விருத்தப்பாவால்விளம்பினவற்றின் - கருத்துணர்ந்தியாருங்களித்துயும்வண்ணம், பொன்னுலகெனப்புகழ்காஞ்சிபுரியில் - வன்னியர்மரபில்வந்தவதரித்து, வள்ளியனாகவருங்கிருஷ்ணப்பன் - தெள்ளியமாதவச்செல்வன்மெய்ஞ்ஞானக், குரவனடிமுடி கொண்டுதற்பதத்தின் - பொருளினையுணர்பரபோதவல்லாசன், வன்பிலாஞான நல்வாழ்வறுமடியவர்க் - கன்புசெயுமுருகப்பனார்தியாகி, உரைதருகென்ன வுரைத்தவப்படியே - திருத்துருத்தியின்மிசழிந்திரபீடத், தருத்தியாயிருந்தரசாண்டிடவரன்றன் - வரபாத்திரனா வந்தவதரித்த, கரபாத்திரயோகி கழலகலாவுளன் - தருமார்த்தங்களிற் றாழ்விலாநின்மலன், சத்திமூவைத்தத்துவமுணர்ந்த - தத்தாத்திரேயன் சரண்டலைக்கொண்டவன், அங்கமலத்துரய மகற்றியவகத்தன் - செங்கமலப்பதனெனுந்தேசிகனடி, உள்ளமலிடைசலா வுரவோனுகந்தவர்க் - கெள்ளருந்தவிலா நலமெய்தரும்வழிகொளி, அருணைகையான்வள மருணைகையானெனும் - அருணாசல ரியனடியவனவிர்முடிப், பிறையாற்றனருள்பெறுபிறையாறூர் - முறைபாற்றணருணாசல முனிவனைச், சரணவடைந்தவன்சராசரவுயிர்த்தொகைக் - கரணாவிளங்குமா தாரமெலாமிகப், பூரிப்பாக்கப்புகலுணவெலாந்தரும் - பாரிப்பாக்கம்பல்லாண்டுவாழ்ந்தவன், வெல்லெண்ணமெல்லாம் வியப்புறநடாத்திய - நல்லண்ணவேள்சுதனயந்தெருவருள்முங், கனிபப்பன்னினனுவாகவினுற - முனியப்பமென்னன்மொழியுமன்மையமே ...................... .............*

இஃது - அஷ்டாவதானம்

புரசை-சபாபதிமுதலியாரவர்கள்

பாடியது.

சிவமயம்.



# அருளிறைவணக்கம்.

இந்திரபீடத்திறைகரபாத்திரரியற்றத்தாத்திரோபர்செங்கமல.....*
சுந்தரர்நாகைச்செழும்பதியருணாசலகுகாம்புதியெழிற்பிறைசை...*
வந்தருளருணாசலகுருவிவர்தம்பதங்களென்மனத்துறும்பரிசாற்..*
சந்தமார்விருத்தாசலப்பெரும்புராணந் தனக்குரைசெயத்துணிந்த
[னனால்.

தீமையேபுரியு மென்னையொரு பொருளாத் திருவுளங்கொண்டெனைப்
[போல்வந்
தாணவமோதேக்கித் தன்னுருவாக்கியடியிணைபொன்முடி சூட்டி...... *
யேமவேர்மொழிப்பாலூட்டியபிறைசையெம்பருணாசலசிவமென்
றுயிசைநின் வடமலைப்புராணந் தனக்குரைநவிற்றிடுமன்றே....*

